உ

சுபமஸ்து.

# மதனலீலாவதி.

திருவாரு மாதர் திகழ்சமர்த்தே யிந்நூல்
உருவாகக் கொண்டு வொளிரும்—பெரியீர்!
பழய தெனினும் பருகுவார்க் கின்பந்
தழைய விருத்த றரும்.

இஃது

திருமயிலை

குமாரசாமி முதலியா ரவர்களால்

நன்னடையில் எழுதப்பட்டது.

சென்னை:

ஹரிஹர பிரெஸ்ஸிற்

பதிப்பிக்கப்பட்டது.

1908.

உ

சுபமஸ்து.

# மதனலீலாவதி.

திருவாரு மாதர் திகழ்சமர்த்தே யிந்நூல்
உருவாகக் கொண்டு வொளிரும்—பெரியீர்!
பழய தெனினும் பருகுவார்க் கின்பந்
தழைய விருத்த றரும்.

இஃது

திருமயிலை

குமாரசாமி முதலியா ரவர்களால்

தன்னடையில் எழுதப்பட்டது.

சென்னை:

ஹரிஹர பிரெஸ்ஸில்

பதிப்பிக்கப்பட்டது.

1908.

உ

சுபமஸ்து.

கணபதயே நம:

# மதனலீலாவதி.

"விநாயகனைத் தொழ வினைகளகலும்" என்று பெரியோர்கள் கூறுகிறார்கள். விநாயகமூர்த்திக்கு, கஜாநநன்-லம்போதரன்-சாமர கர்ணன்-விக்னராஜன் - கணபதி முதலிய பல திருநாமங்களிருப்பி னும், நாம் எடுத்துக்கொண்ட விநாயகனென்னும் பதத்திற்கு ஆன் மாக்களெவருந் தனுகும் பலவகைத் துன்பங்களை யொழிப்பவ னென்று அர்த்தமாகிறது. இப் பெருமானை, ஒருவன் யாதேனு மொரு காரியத்தைச் செய்ய ஆரம்பிக்குமுன் 'விநாயக விநாயக' என்று தலையிற் குட்டிக்கொண்டு பிரார்த்தித்தால் எடுத்த காரியம் இடையூறின்றி முடியுமென்று நூல்களிற் கூறுவதால், அத்தகைய முதற்பொருளாகிய விநாயகக்கடவுளை நாம் துதிசெய்து இம் மதன லீலாவதியை யெழுதத்தொடங்குவோமாக.—சுபம்.

## கதை ஆரம்பம்.

நெடிய கடல்சூழ்ந்த நீணிலத்திற் சிறந்துவிளங்கும் சுகந்த புரி என்னும் பட்டணத்தை ராஜ்யபரிபாலனஞ் செய்துவந்த சுசீ லன் என்னும் சக்கிரவர்த்தியானவன் அக்காலத்திலிருந்த அரசர் களுக்குள் தக்கோனென்னுந் தாளாண்மை யுடையவனாய், திடகா த்திர தீர வீர பராக்கிரமசாலியாய்ப் பொருட்செல்வத்தோடு-கல் விச்செல்வமும் பெற்று, நற்குண நற்செய்கைகளுற்று, விற்குணத் தொனியால் மேவலர்ச் செற்று, அமைச்சு-அரண்-குடி-படை முத லிய யாவும் நிரம்பப் பெற்று, பரராஜபயங்கர னென்னும் பெய ருற்று, தன்தாரமன்றிப் பரதாரத்தைக் கனவிலும் விரும்பாமல் சற்குண சம்பன்னனாய் வாழ்ந்துவந்தானெனினும், "அபுத்ரஸ்ய கதிர்நாஸ்தி" என்றும், "அபுத்ரஸ்ய கிருஹம்சூந்யம்" என்றும் கூறு

கிறபடி [புத் என்னும் நரகத்திலிருந்து நீக்கத்தக்க] ஒரு புத்திர னில்லாத குறையால், மிகவும் துயருற்றிருந்தான்.

இங்ஙன மிருக்குநாளில் ஓர்நாள் அவ் வூரில் புதிதாக ஒரு ஜோஸ்யன் வந்திருப்பதாகவும் அவன் உலகெங்குங் கீர்த்தி பெற் றவனென்றும் கேள்வியுற்ற அரசன் தன்னுடைய பிரதான மந்திரி யிடங் கூறி அவனை யழைத்துவரும்படி உத்தரவுசெய்தான். சிறிது நேரத்திற்கெல்லாம் ஜோஸ்யனும் அரண்மனைவந்து சேர்ந்தான். அரசன் ஜோஸ்யனை நோக்கித் தனக்கு இனிமேல் சந்தான முண் டாகுமா வென்று வினவ, அவன் ஐந்துநாள்பொறுத்துக் கூறுவ தாகச் சொல்லி விடைபெற்றுச்சென்று அரசனுடைய ஜாதகத் தைச் சோதித்துக்கொண்டு பின்பு மன்னனிடம்வந்து பிரபோ! தங்களுக்கு ஒரு சற்புத்திரன் பிறப்பான். ஆனால் அதற்கு யாகங் களும், பிரத்தியேகமாக ஓரன்னசத்திரமும் செய்வித்து ஒருவரு ஷம்வரையில் இடையறாமல் அன்னதானஞ் செய்யவேண்டுமென் றும், அப்படிச் செய்தவுடனே புத்திரன் ஜனிப்பானென்றுங் கூறி னன். அவ்வார்த்தையைக் கேட்ட அரசன் குதூகலமுடையவ னய் ஜோஸ்யனைத் தன் சமஸ்தானத்தி லிருத்திக்கொண்டு உடனே யாகஞ் செய்வதற்கும் அன்னசத்திரம் கட்டுவதற்கும் உத்தரவு செய்தான். யாகத்துக்குவேண்டிய சாமக்கிரியைகளெல்லாம் தயா ராகி சம்பிரமமாய் நடந்தேறி வருகின்றது. சத்திரமும் சிலநாளைக் குள் கட்டிமுடிந்து விசேஷமாய் அன்னதானம் நடந்தேறிவந்தது.

இப்படி நடந்தேறி வருகையில் ஓர்நாள் அவ் வன்னசத்திரத் திற்கு வயதுமுதிர்ந்து எலும்புதோன்றுந் தேகமுடைய ஓர் வயோ திகர் வந்து உண்டு இளைப்பாறி யிருக்கையில், ஆங்குள்ள பிரஜை கள் அரசனுக்குப் புத்திரசந்தான மில்லாததைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்ததை அப் பெரியவர்கேட்டு மனந்தளர்ந்து சத்திரத் துக் காரியஸ்தனை யழைத்து 'ஐய! உங்க ளரசனை இங்கு அழையு மின்; கடவுளருளால் அவர்க்குப் புத்திரசந்தான முண்டாகும்' என்றார். அதைக்கேட்ட காரியஸ்தன் ஓடோடியும் அரசனிடஞ் சென்று பணிந்து அன்னசத்திரத்திற்கு ஒரு பெரியவர் வந்திருப் பதாகவும், அவர் கூறியதையும் சொன்னன். ஒரு தரித்திரனுக்குத் திடீரென்று பணப்புதையல் கிடைத்தால் எவ்வளவு ஆனந்தங்கொ ள்வானே அதனினும் பதின்மடங்கதிகமான சந்தோஷமுற்று திடீ ரென் றெழுந்து பாதசாரியாகவே நடந்துசென்று வயோதிகரைக்

கண்டு அவர் பாதத்தில் விழுந்து வணங்கி சுவாமி! எனக்கொரு புத்திரசந்தானம் பாலித்தருள வேண்டுமென்று வேண்டிக்கொண்டான்.

பெரியவர், அரசனை ஆசீர்வதித்துத் தமது மடியில் வைத்திருந்த விபூதிப்பையை யெடுத்துச் சின்னேரம் கடவுளைத் தியானித்து அவர் திருக்கரத்தால் ஒரு சிடிகை விபூதியெடுத்து அரசன் கையிற் கொடுத்து 'இதனை நீயும் உன் மனைவியும் நாளை சுக்கிரவாரம் உதயத்திலெழுந்து ஸ்நானஞ்செய்து கடவுளை வணங்கி இருவருமாக இதைப் புசியுங்கள் இதனால் ஒருபுத்திரன் பிறப்பான்' என்றுகூறி அவ்விடம் விட்டுப் போகையில் அரசன் தனது அரண்மனையில் வந்திருக்கும்படி எவ்வளவுவேண்டியும் அவ்வயோதிகர் கேளாது எங்கோ சென்றார்

பின்னர் வேந்தன் அரண்மனைசென்று பெரியவர் தந்த விபூதிப்பிரசாதத்தைப் பட்டாற் சுற்றிப் பெட்டகத்தில் வைத்து நடந்த விஷயத்தை மனையாளிடஞ்சொல்லிக் களித்து மறுநாள் சூரியோதயத்திலெழுந்து பெரியவர் சொல்லை வேத வாக்கியமாகக் கொண்டு இருவரும் அவ் விபூதிப் பிரசாதத்தைப் புசித்தார்கள். சிலநாள் பொறுத்து ராஜஸ்திரீ கர்ப்பமடைந்து முன்னூறுநாளுங் கழிந்தபின் சுபவோரையில் ஒரு புத்திரனைப் பெற்றாள். தன் கிழப்பருவத்தில் தனக்கொரு பிள்ளைபிறந்ததைக் கேட்டு அரசன் உள்ளங்களித்துத் தன் பொக்கிஷசாலையைத் திறந்து ஏழை எளியவர் ஊரார் முதலிய யாவரும் கொள்ளைகொள்ளும்படி விட மந்திரியிடம் உத்தரவுசெய்தான். சிறைச்சாலையிலுள்ள குற்றவாளிகளையெல்லாம் விடுத்தான். ஊரெங்கும் சுபவாத்தியங்கள்முழங்க, தம்முடைய இனஜன பந்துக்களுடன் இன்பொடு போஜனஞ்செய்து, சுகந்த பரிமளமிகுந்த சந்தனபாளித பன்னீர் முதலியனபூசி பூமாலை புனைந்து பொன்மாலை யணிந்து, தமது செங்கோலாக்ஞை செல்லுமளவுமுள்ள பிரஜைகள் சந்தோஷங் கொண்டாடும்படிப் பொருள்மிகவளித்து நகரமுழுது மலங்கரிக்கச் செய்வித்து, வேதப்பிராமணாள்-ஜோசியாள்-பண்டிதாள்-புரோகிதாள் - முதலியோரை வரவழைத்துத் தமது செல்வப் புத்திரனுக்கு ஜநநபத்திரிகை யெழுதுவித்து ஜாதகத்தைப் பரிசோதித்தகாலையில், வீரசிங்காசன பதியாகவும், வெகு புத்திசாலியாகவும், பாக்கியவானாகவும், பாரமார்த்திகனாகவும், கொடைத்தலைவனாகவும் இருந்து சகலதேசத்தரசரும் வணங்கும்படித் தனட்டியனாகி ஏகசக்கிராதிபதியா யிரு

ப்பான். ஆனால் இந்தப்பிள்ளையின் பதினாறாம் வயதில் ஒருமோகப் பயித்தியம்போற் றோன்றி சிந்தைவேறு மனம்வேறாய்த் தியங்கித் தங்களைவிட்டுச் சிலநாள் பிரிந்திருக்கநேரும். இதைவிடத் தங்கள் செல்வக்குமாரனுக்கு வேறுவிதமான தோஷமொன்றுமில்லை யென்று அறிவில் வல்ல ஜோஸியாள் சொல்லக்கேட்டு அரசன் சின்னேரம் விசனப்பட்டா னெனினும், அவ்வா றெவ்வொரு சம்பவங்கள் மனிதர்க்குண்டாவது சகஜமென்று மனந்தேறி அக்கணிதநூல் வல்லார்க்கு கனக முதலியனவளித்துப் பெரியோர்கள் முன்னிலையில் அரசகுமாரனுக்கு வீரவர்ம னென்று நாமகரண மிடப்பட்டு சந்தோஷங் கொண்டாடினார்கள்.

வீரவர்மன் நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்க்க வளர்ந்து கல்வியில் வல்லவனாய் அரசர்க்குரிய வில்வித்தை யானையேற்றம்-குதிரையேற்ற முதலியனவைகளிற் பழகி எல்லோரும் புத்திமானென்னும்படி வளர்ந்துவந்தான். பிள்ளையின் குணநலத்தைக்கண்ட தாய் தந்தையர்களும், பந்துவர்க்கங்களும் சந்தோஷ சாகரத்தில் மூழ்கினவர்களாய் சிறுவயதிலேயே வீரவர்மனுக்கு விவாகஞ் செய்து பார்க்கவேண்டுமென்னும் ஆசைமிகுதியால் ரதி தேவியையொத்த சுந்தரவதியான நூபாலதி யென்னும் பெண்மணியை விவாகஞ்செய்வித்தார்கள். சிலநாள் சென்றபின்பு ஜாதகக் குறிப்பின் வண்ணம் வீரவர்மனுக்குப் பதினாறாம்வயது நேரிட்ட பருவகாலத்தில் தனது தந்தையினுடைய சிங்காரத் தோட்டத்துக்குப் போய் மனமகிழ்வோடு உலாவிக்கொண் டிருக்கையில் அத்தோட்டத்தி னோர்பால் அழகிய ஒரு வாலிப சந்நியாசி வீணையை மீட்டி,

ஸ்ரீ கீர்த்தனை-இராகம்-கேதாரகௌளம்-தாளம்-ஆதி.

பல்லவி.

இன்னம் என்ன ஏழைமேற்          பராமுகம்
இரங்கவேண்டும்          உன்னகம்.

அநுபல்லவி.

அன்னை தந்தைகுரு          தெய்வம்நீ யென்றுதானே
ஆவலாய்த் திருப்போரூர்க்          காவலா நம்பினேனே. (இன்)

சரணங்கள்.

* பசுங்கலாபமயிலும்
பராக்கிர          மந்தனை
நடாத்தும்          ரஞ்சித          (பசுங்)

படர்ந்த மேகத் தைக்கண் டொயிலுடன்
எழுந்து பூரித் துக்கொண் டசைவுறு (பசுங்)
பாயிர மறையுங் கலையுக் தெளிதரு
ஆயிர மகுடந் திகழும் பணிமுதல்
அட்ட திக்குநா கங்களு மெய்சோர
வட்ட மிட்டுலா வுங்கன ப்ரதாப (பசுங்)
படியுந் தரங்க நிலையுங் கலங்க
மலையுங் குலுங்க மதவெங் கயங்கள்
வாய்விட் டுக்கத றிடமிக அகண்டித
லோகத் துப்ரஜை களுமுடல் நடுங்கிட
மதிகதி ரவர்நிலை பிசகநெ டுககன
முகடுடை படவணி மணிகல கலவென
சத்தமிட் டொலிக்கஇரு-புறமதில் விரிசிறை தட்டித்தக
தத்திமித் திமித்தஜெணு-தகதரிகிடவென நிர்த்தமிடு
பசுங்கலாபமயிலும் கையிற்பயிலும்
பரந்தகூர்மை அயிலும்
விசும்புலாவுதின கரசொரூபசோதியும்
விளங்கிடாதஉள்ளக் களங்கனென்றேதியும். (இன்னம்)
பன்னிரண்டு தோளும்
பருத்த மேருவை
நிகர்த்து வீறிய (பன்னி)
பரிமள மிகுத்த வாடைதனை வீசிய
விகசித கடப்ப மாலையது சூடிய (பன்னி)
பனிநன் கதிர்விடு தினையின் புனமிசை
பரணின் றடர்கிளி கடியுங் குறமகன்
வள்ளி மாதுதெய் வயானை யிருவரும்
உள்ள மாசையாய் விடாது தழுவிய (பன்னி)
பங்கய மலர்நான் முகனும்பைந் துளவனும்
இந்திரன் முதல்வா னவருங்கந் திருவரும்
அரசகன்று தலைமறைந்து நெடியமெய்
கிடுகிடென்று நடுநடுங்க அடல்புரி
பொற்கிரௌஞ்சக் குன்றமென
அக்கிரமஞ்செய் தந்திமுகன்

வக்ரதந்த வெங்கொடிய
வுக்ரமிகு சிங்கமுக
னுடன்வீரசூர பன்மனையுங்கொன்று
குலம்யாவும்வேர் களைந்துஜெயங்கொண்ட
பன்னிரண்டு தோளும் கிண்கிணித்தாளும்
பகைவெல்லும் உடைவாளும்
பொன்னுலாவும் திவ்ய சேவற்கொடிப்பகட்டும்
பொருந்திடாத நெஞ்சத் தொழும்பனென் றறிக்கையிட்டும் (இன்)

தற்பரமர் புத்ரா
சரா சரப்ரபஞ்ச
மெலாம் அளிக்கும் எங்கள் (தற்பர)
சனக னுதிதவ முனிவர் நால்வர்பொருள்
நிலைமைதேற வட நிழலின் மேவுசிவ (தற்பர)
சதுமுகப் பிரமன் முகுந்தன் இருவரும்
ஒருவருக் கொருவர்வெகுண்டு முனம் அன்ன
மாய்வ ராகமாய் அடிமுடி காணும்
நாளில் நீளுமோர் அழல்மலை யான (தற்பர)
தாமூாறு விகாரம் வீறு முக்குண
நீடாண வமாயை காமி யத்தினை
அகன் றைம்புலன் களுந்தன் வசமுற
விளங் குஞ்சுபங் கொளெண் குணமருவி
யுருவமாகி யருவமாகி யடர்தரும்
இருளுமாகி யொளியுமாகி அவனியில்
ஆதியந்தநாடொணுத பேரின்ப
நாதவிந்து வானசின்ம யாநந்த
தற்பரமர் புத்ரா க்ருபா சமுத்ரா
சாற்றும் அன்பர் மித்ரா
அற்புதகுமரகுரு வரதிருக்காமி
அப்பன் மகிழ்ந்துரைக்கும் நற்பத துரைசாமி. (இன்னம்)

இப் பாடலை வெகு ஆனந்தமாகப் பாடிக்கொண் டிருந்தான். அவன் பாடும் பாடலுக் கிணங்க ஒரு பஞ்சரத்திலிருக்கு பஞ்சவர்ணக்கிளியானது பாடி ஆடிக்கொண்டிருப்பதையும் செவிகொடுத்து நோக்கிய வீரவர்மன் பேராநந்தபரிதனுய் சுவற்றிலெழுதியசித்திரப்

பாவைபோல் சிறிதுநேரம் அசைவற விருந்து தன் ஸ்வாதீனமான அறிவுவந்தபின் ஹா! என்னதொனி! என்னசுகம்! இவ்விசை யினைக்கேட்ட பட்டமரமுந் தழைக்குமே! சுட்ட எலும்பும் பிழை க்குமே என்று தன்னுள் பேசிக்கொண்டிருந்து பின்னர் அச் சந்நி யாசியிருக்கு மிடத்தைக் குறுகி அவனுக்கு வந்தனஞ்செய்து அங்கு உட்கார்ந்தான். சந்நியாசியோ இவனைச் சிறிதும் பொருள் செய்யாது இசையின் பிர்ம்மாநந்தத்தில் மூழ்கியிருந்தான்.

சந்நியாசி தன்னை அசட்டைசெய்ததை யுணர்ந்த அரசகுமா ரன் கோபங்கொண்டவனாய் சுகந்தமணம் வீசும் ஒரு சந்தனவிரு க்ஷத்தினடியி லுட்கார்ந்து சித்திரக்கிளி பாடிக்கொண்டிருக்கிற இன்பரசந்தங்கிய இசையைச் செவிமடுத்துக்கொண் டிருந்தான். பாடிக்கொண்டிருந்த அக் கிளியானது திடீரென்று பாடுவதை நிறுத்தி "ஒப்போதற் கொருவருமில்லாத ஓ ஓ உத்தம சந்நியா சியே! இப்போ திவ்விடத்தில் வந்து மிகுந்த தாழ்மையோடு நமஸ் கரித்தவன் இந் நாட்டுக் கதிபதியாகிய இராஜகுமாரன். எழிலுடை யமாரன். நீர் அவனைக் கவனியாமலும் ஆசீர்வாதஞ் செய்யாமலு மிருந்த நிற்பக்ஷத்தினால் மனதிற் கோபங்கொண்டு அதோ அச் சந் தனமரத்தடியில் உட்கார்ந்திருக்கிறான். இந்தக் கன்மபூமியில் கிடைத்தற்கரிய மானிடதேகந்தாங்கியுள்ள ஆன்மாக்களாவார் இவ் வளவு கோபங்கொள்ளல் கூடாதென்று கிளி சொல்லியதைக் கே ட்ட வீரவர்மன் அதியாசையுடையவனாய் மதிமுக மலர்ந்து தான் அணிந்திருந்த விலைமதிக்கப்பெற்ற ஆபரணங்களை யெல்லாம் கழ ற்றி அந்த சந்நியாசியின் பாதத்தில் வைத்து ஸ்வாமிந்! இவ் வாபர ணங்களிற் பதித்திருக்கிற மாணிக்க முதலிய இரத்தினங்களெல் லாம் மூன்றுலகத்தையும் விலை மதிக்கத்தக்கது; இவைகளை நீ ரெடுத்துக்கொண்டு என்மீது தயை செய்து உபகாரார்த்தமாயும் மிடத்திலிருக்கும் பஞ்சவர்னக் கிளியைக் கொடுத்தருளவேண்டு மென்று பணிந்தான். அந்த சந்நியாசி தலை நிமிர்ந்து பார்த்து அர சகுமாரா! இக் கிளியானது என்னிடத்தில் வெகுகாலமாயிருக்கி றது. இதனை என் ஆருயிரினும் அதிகமாக வளர்த்துவருகிறேன். இது என்னைவிட்டுப் பிரியுமானால் என்னுயிரும் பிரிந்துபோகும். ஆதலால் நானிதை யொருபோதுங் கொடேன் கொடேனென்று மும்முறை கூறி, மற்றொருதரம் அதைக் கேளாதிருக்கும்படி அர சனை வேண்டிக்கொண்டான்.

அதற்கந்த வரசகுமாரன் முகஞ் சிவப்பேறிக் கோபநகைசெய்து அடே பயித்தியம்பிடித்த சந்நியாசி! என்னை நீ இன்னானென்றறிந்திலை. உன் கிளி சொன்னதையுங் கவனியாதொழிந்தாய். உலகத்திலுள்ள எந்தப் பொருளினிடத்தும் விருப்புவெறுப்பற்று சதா ஈசுவரதியானத்திருந்து நல்வழிக் காளாவதைவிட்டு, துறந்தவனென்று வெளிப்பகட்டுசெய்து கிளியும கின்னரியும் வைத்துக்கொண்டிருக்கும்படி எந்த நூலிற் கூறுகிறது? அறிவிலாய்! என்போன்ற அரசருக்கன்றோ இவைகளெல்லாம் உரியனவென்று பலபலவாறெடுத்துக்கூறியும் அச்சந்நியாசி கேளாததால், அரசன் தலையையசைத்து அடே ஆசைக்கடிமைப்பட்ட சந்நியாசி! உன்னையும் இந்தக் கிளியையும் வரவழைக்கவேண்டியபடி வரவழைத்துக் கொள்கிறேன் என்று கோபத்தோடு திரும்புகையில், சந்நியாசி, அவனைக் கூவியழைத்து அரசே! இனிவருவதைத் தெரிந்துரைக்கவல்ல இக்கிளியால் உனக்கொருகாரியம் நடந்தேறவேண்டியிருத்தலால் நீ எண்ணியபடியே தருகிறேனென்று அரசனுடைய ஆபரணங்களையெல்லா மெடுத்துக்கொண்டு பஞ்சவர்ணக் கிளியை அவனிடங் கொடுத்துவிட்டு எங்கோ சென்றான்.

கிளி கைவரப்பெற்ற வீரவர்மன் களிப்பென்னும் பெருங்கடலில் மூழ்கினவனாய் வழிதெரியாமல் நடந்து அரண்மனை சென்று பொற்றகட்டில் நவரத்தினங்கள் பதித்துள்ள அழகிய பஞ்சரத்தில் அக் கிளியைவிட்டு தன் படுக்கையறையில் வைத்துக் காலமறிந்து பாலுடன் பழங்களூட்டி இரவும் பகலும் இடைவிடாமல் அந்தக் கிளியுடன் வசனித்துக்கொண்டு இச்சகத்துக்கு மற்றெச்சகமும் ஈடல்லவென் றின்புற்றிருந்தான்.

இப்படிச் சிறிதுநாட் சென்றபின் அரசகுமாரன் தன் மனைவியாகிய ரூபாவதியிடத்தில் மிகுமோகமும் விரகசோகமும் விசுவாசமும் வாஞ்சையும் வைத்திருந்தான். அப்படியே யவளும் அரசகுமாரனிட மன்புவைத்துத் தன் பத்தாவுக் கேற்ற பத்தினி தானென்றும் தனக்கிசைந்த உத்தமசதுர யோக்கியன் தன் கணவனேயென்று மெண்ணிச் சந்தோஷித்திருந்தாள்.

ஒருநாள் ரூபாவதி ஸ்நானஞ்செய்து உண்டு தாம்பூலந் தரித்து ஆடையாபரணாலங்கிருதளாய்ச் சிகைமுடித்துச் சிலமலரணிந்து முத்தாரம் புனைந்து நீரவீ! விஜயபாலனாகிய தனது நாயகனுக்கெதிரே!

அன்னநடையும் பின்னிட நடந்து, ஒரு தேவலோக அரம்பைபோலும் கண்டோர்மனதைக் கவரத்தக்கவிதமாய் தனது நாயகனுக்கெதிராகவந்து அங்கிருந்த நிலைக்கண்ணாடியில் தனது ரூபலாவண்யத்தைக்கண்டு எல்லையற்ற ஆனந்தமுற்றுத் தன்னைத்தானே மெச்சிக்கொண்டு உலகத்தில் தன்னைப்போலும் அழகுடைய ஸ்திரீ வேறொருத்தி யிராளென்று தன்னுள் உறுதியாகத் தீர்மானித்துக் கொண்டவளாய்த் தன் பக்கத்தில் உட்கார்ந்திருந்த கொழுநனைப் பார்த்து என் இன்பமணாளரே! எழிலாரும் மாரனை யொத்தவரே! என்போலும் அழகுடைய பெண்கள் இவ்வையகத்தில் கண்டுள்ளீரா? அல்லது பிறர் சொல்லக் கேட்டேனுமிருக்கிறீரா? இதோ இப்படித் திரும்பி இக் கண்ணாடியில் என்னழகைப் பாரும்! இதழ் சுவை தாரும் எனக்கொஞ்சினாள். அவளின்மொழியைக் கேட்ட வேந்தன் உள்ளங் களைந்து கண்ணாடியில் அவளழகை உற்றுநோக்கி உம்பர்பதியிலும் உன்போலும் அழகுடையாரிரார் என்று அவளை விரைந்து தழுவி, முகத்தோடு முகம்வைத்து முத்தந்தந்தான்.

அரசன்மனைவியாகிய ரூபாவதிமொழிந்தமொழியைக் கேட்ட பொற்கூட்டிலிருந்த பஞ்சவர்ணக்கிளியானது கெக்கலித்துச் சிரித்துக் கொக்கரித்துக் குளறியது. அதைக்கேட்ட அரசமாது சிறிது அஞ்சி, நம்மை நாமே வியந்துகொண்டதைக் கேட்டு இக்கிளி நகைசெய்கிறதுபோலு மென்று நினைத்து ஓ அஞ்சுகமே! நீ இப்போது நகைத்ததற் கென்னகாரணம்? நான் எனது நாயகனுடன் கூறிய வார்த்தையி லேதேனும் பிழையுண்டோ? அல்லது வேறு காரணமிருந்தால் ஓ மனிதர்போற் பேசும் அஞ்சுகமே! விரைவிலெனக்குப் பதில் சொல்வாயாக வென்று கேட்க, அக்கிளி ஒன்றும் பேசாமலிருக்கக் கண்டு வெட்கமும் அவமானமுமுடையவளாய்த் தன்புருஷனை நோக்கி அரச! நான் தங்களோடு வார்த்தையாடிக்கொண்டிருந்ததைக் கேட்ட இக்கிளி கொக்கரித்து நகைசெய்ததால் அதன்காரணத்தைத் தாங்கள் கேட்டுணர்ந்து தெரிவிக்க வேண்டுகிறேன். அது நான்கேட்டால் பதிற்சொல்கிறதில்லை. கிளி சிரித்தவிஷயம் தெரியாவிடில், அதனை முறித்துக் கொன்றுவிடுவதல்லாமல் நீரும் என்னுடைய இன்பத்தைஇழந்தவராவீரென்றாள்.

அதற்கந்த இராஜகுமாரன் அவள்கோபத்தையாற்றி அழகிய பேடையையொத்த ஆரணங்கே! அழகும், அன்பும், ஆசையும், இன்

பழமுள்ள இறைவியே! இந்தக்கிளியானது நம்மைப்போற் செவ்வையாய்ப் பேசத்தக்கதுமல்ல; மிக்க விவேகமுடையதுமல்ல. இது ஒருபிடிரோமமுள்ள பட்சியாய் அறிவு குறைந்திருக்கின்றது. ஆகவே அது என்ன காரணத்தினாலோ சிரித்தது; அதை நாம் விசாரிக்கக்கூடாது. விசாரித்தால் ஒருவேளை பிரமாதத்தில் வந்து முடியும். ஆதலா லிதைப் பிய்ப்பானேன்? அப்பால் வருந்தித் தைப்பானேன்? இப்போது நீ கொண்டிருக்கும் கோபந்தணிந்து என்னருகிலுட்கார்ந்து தாம்பூலச் சுருள்மடித்துத் தா வென்றான்.

அதற்கந்தராஜஸ்திரீ சம்மதியாதவளாய் நீர் கிளிநகைத்ததைப் பற்றி எத்தனை நாள் கேளாதிருக்கிறீரோ அதுவரையில் உமக்கு நான் தாம்பூலங் கொடுப்பதுமில்லை. உம்மையடுப்பதுமில்லை. உம்முடன் படுப்பதுமில்லை யென்றாள். அதனா லரசன் வருந்தி, வாடிய மலர்போல் உள்ளஞ் சோர்ந்து வருந்தினான். அரசமாதின் மொழியைக் கேட்டிருந்த பஞ்சவர்ணக்கிளியானது "ஓ இராஜகன்னிகையே! பொறு பொறு. அதிகமாய்ப் பேசாமல் இவ்வளவி லடங்கி உனது நாயகனுக்கொடுங்கியிருக்கப் பிரார்த்திக்கிறேன். இனி நீ வாய்திறப்பாயானால் நானும் வாயைத் திறப்பேன். அதனாற் பலதீங்குகளுண்டாகும்; உன்னழகை யாற்றிடுவேனென்று மொழிந்தது. அதைக்கேட்ட ரூபாவதி மிகச் சினந்து சில வித்தியாசமான வார்த்தைகள் கூறினாள். அதனால் கிளிக்குக் கோபம்பிறந்து ஓ வீரவர்மனென்னு மரசே! இதைச் சிறிது செவிகொடுத்துக் கேள். உன் மனைவி தன்னினுஞ் சிறந்த அழகிய மாதரில்லையென்று மனப்பால் குடிக்கின்றாள். கடவுளினுடைய சிருஷ்டிப்பின் அதிசயச்செயலை நம்பாற் கண்டறிவது கூடாதென்பதை அறிந்தடங்காது எவ்வளவு சொல்லியும் கேளாளாய் கர்வித்தாள். இதென்ன பேதமை! தன் புட்டத்தைப் பார்த்துத் தானே சந்தோஷித்த ஓர் கிழக்குரங்கு போல் நின் மனைவி தன்னழகைத் தானே புகழ்ந்து கூறியதை நீயும் கேட்டனையன்றோ? இது இப்படியிருக்கட்டும். இனி நான் சொல்வதைக் கேள்.

இத்தேசத்திற்கு வடக்கே சொர்க்கலோகத்தைநிகர்த்து விளங்கும் புஷ்பபுரி என்னும் நகரை யாண்டுவந்த [illegible]னென்னுமரசன் பெருந்தவமிழைத்துப் பெற்ற மதனலீலாவதி என்னும் பெயரிய மாதசிரோமணியை என் [illegible] கண்டேனேன். அவள் முகம் இன்னுமென் கண்ணைவிட்டு நீங்கவில்லையே! ஆ! ஆ! அவளது

சந்திரன்போன்ற வட்டவடிவான முகமும், கொவ்வைக் கனிபோன்ற இதழும், செவ்வலரிமலரையொத்த வாயும், நீலோற்பல மலரை நிகர்த்த கண்களும், குமிழம்பூவையொத்த நாசியும், முல்லைமலரையொத்த பல்வரிசைகளும், வள்ளைப்பட்டத்தையொத்த செவிகளும், ஆலிலைபோலு மழகிய வயிறு முடைத்தானவள். அந்தோ! அரசே! பிரமனானவன் தான் இருக்குமிடத்தை விட்டுப்போய் நெடுங்காலம் பெருந்தவத்தைச் செய்து, தன் இரண்டு கைகளும் மனமும் வருத்தங்கொண்டு சிவபெருமானோடு சண்டைசெய்து இறந்துபோன மன்மதனுக்குத் திருமுடிசூட்டுவதற்காகத் திருமுடி வேண்டுமென்று நினைத்து; யானைக்கொம்பையும், அந்தயானையினது கும்பத்தலத்தையும், வட்டவடிவாகிய சக்கிரவாளகிரியையும், மேருமலையையும் சிருஷ்டித்துக் கைதேர்ந்தபின் சிருஷ்டித்தனனோவென் றெண்ணத்தக்க புளகாங்கிதம் நிரம்புதலான இரண்டு தனங்களை யுடையவள். தருமம் விளங்குவதான தவமும், மற்றையாவும் இந்த இடையினாலே அழிந்துபோகுமென்று நினைத்துப் பிரமதேவன் உருவமுண்டாக்காமல்விட்டானோ? அல்லது அவனுடைய சிவந்த கைகள், சிறப்புள்ள வேல்போலும் இந்தக்கண்களை முன்னே சிருஷ்டித்துச் சோர்ந்து இளைத்துப்போயினவோ? அல்லது அக்கண்களின் பார்வையால் மயங்கி அக்கைகள் மறந்துபோயினவோ! அன்றி இவளுருவிலேயே மறைத்துத்தான் வைத்திருக்கின்றனோ! இவளுடைய அழகிய இரண்டு ஸ்தனங்களின் கனத்தைத்தாங்கி உருகுதலாய் இறந்துபோயிற்றோ! அல்லவெனின், இருபாய மிருக்கின்றதோ! முழுதும் இல்லையேயோ! அல்லது இனிமே லுண்டாகுமோ என்று சந்தேகிக்கத்தக்க இடைதோன்றாத ஒரு வனப்புவாய்ந்த மடமங்கையாயிருந்தாள். அரசே! அவளழகைச் சொல்லவும், எழுதவும், புகழவும், மகிழவும், துதிக்கவும், மதிக்கவும் அடங்காமையா யிருக்கும் அவளழகின் சோதியை அச்சோதியின் சேதியை விண்டலத்தவரும், மண்டலத்தவரும், எண்டிசையோரும் கொண்டாடி ஆச்சரியப்படுகின்றார்களென்று அந்தக் கிளி சொல்லிக்கொண்டுவரும்போது வீரவர்மன் விழித்தகண் விழித்தபடி மோகதாகங்கொண்டு அதுமுதல் வேளைக்கு அன்னமுண்ணாமல் உன்மத்தன்போ லிருந்தான்.

எழில்வதனனாகிய வீரவர்மன் பஞ்சவர்ணக்கிளியா லுணர்ந்த மதனலீலாவதி யென்னும் பருவப்பெண்மேற் பாசநேச விசுவாச மோகங்கொண்டு அத்தகைய அழகிய பெண்மணியை இப்போது

காணுதற்கில்லையே என்னும் துக்கமுந் துயரும் அவனைச்சோரவுறச் செய்ததனாற் றுன்பமடைந்து இன்பமான மந்திரிகளெழுபேரையு மழைத்து, அவர்களில் நிர்வாகசாலியாகவும், புத்திமானாகவும், லௌகிக வநுபோகஸ்தனாகவும், சித்திரப்படமெழுதுந் திறவானாகவும், மித்திரர்களிலுயர்ந்த மேன்மையோனாகவுமுள்ள விவேகன் என்னு மந்திரியைப்பார்த்து ஓ சுபகுணமந்திரியே! நீ இப்போதே வர்த்தகனைப்போல் வேடங்கொண்டு அவ் வேடத்துக்குத் தகுந்த சாமான் சரக்குகளுடன் பிரயாணப்பட்டு இந்த நகரத்துக்கு வடதிசையிலிருக்கும் புஷ்யபுரி யென்னும் பட்டணத்துக்குச் சென்று அந்நகரத் தரசன் குமாரத்தியாகிய மதனலீலாவதியின் சௌந்தரிய சொரூபச் சித்திரப்படத்தைக் கொண்டுவந்து காட்டி என்னுயிர்க்கிறுதியில்லாமல் நானடைந்த அபாயத்தையும் மனோசஞ்சலத்தையு மாற்றவேண்டுமென்று தோத்திரஞ்செய்தான்.

அப்போதே விவேகன் என்னு மந்திரியானவன் சற்றுந் தாமதியாமல் மெத்தவும் விலையுயர்ந்த இரத்தினங்கள் பீதாம்பரங்கள் முதலியவும் அற்புதமான வநேக வஸ்துக்களையும் வீரவர்மனுடைய வடிவலங்காரமெழுதிய படத்தையு மெடுத்துக்கொண்டு பிரயாணப்பட்டு முப்பத்தோராநாள் புஷ்யபுரியையடைந்தான். அங்கு மாடமாளிகையுள்ளவீடும், கூடகோபுரமுள்ளநாடும், படைவீரர்களும் கடைவீதிகளும் அப்புறமுள்ள இராஜ வரண்மனையின் நேர்த்தியையுங்கண்டு மகிழ்ந்து ஒரு சிங்காரத்தோட்டத்தி லிறங்கியிருந்து தான் கொண்டுபோயிருக்கிற வஸ்துக்களைக் கண்டவர் களிக்கும்படியாய் ஒருதரங்கண்ணோட்டமிட்டவர்கள் பலதரம் பார்க்க இச்சிக்கும் பாவனைபோற் சோடித்துவைத்துத் தானுஞ் சுந்தரவலங்கார நாணயவர்த்தகனென்னத் துலக்கமுற்றிருந்தான்.

இவனிறங்கிய தோட்டத்துக்கும் அரசனரண்மனைக்கும் சுந்தர வதியாகிய லீலாவதியானவள் வசந்தகாலத்தில் மகிழ்கொண்டிருக்கும்படிக்கு மனமுவந்து அந்தத் தோட்டத்திற்குவந்து பொழுதுபோக்கிக்கொண்டிருந்தாள். அவளுடன் வந்த சேடியர்களிலொருத்தி சில வெள்ளாட்டிகள் சகிதமாய் அந்தத் தோட்டத்தைக் குப்பைகூளமில்லாமற் பெருக்கிச் சாலைகள் முதலியவு மொதுக்கி அலங்காரப்படுத்தி வரும்போது வர்த்தகவேடம் பூண்டிருக்கிற மந்திரியிடத்துக்குப்போய் அவன் கொண்டுவந்திருக்கிற சாமான

கௌப்பார்த்துத் தன்னெசமானிக்குச் சொன்னதுமல்லாமல் அந்த வர்த்தகன் கொண்டுவந்திருக்கிற அற்புதச் சாமான்களைப் பற்றியுந் தும் பேசினாள். அம்மொழியைக்கேட்டு லீலாவதி மிகவும் சந்தோஷப்பட்டு அந்தச் சாமான்களுடன் வர்த்தகனையும் வரும்படிக் கட்டளையிட்டாள். அப்படியே தாதிமார் வந்து அந்த வர்த்தகனை அழைத்துப்போனார்கள். பாகஷாவின் குமாரத்தி வேறோரிடத்திலிருந்து அவன் கொண்டுவந்த சாமான்களில் ஒவ்வொன்றையழைத்துப் பார்த்து அதனதன்விலைதெரிந்து ஒவ்வொருதரமும் தன் தலையசைத்து மனமகிழ்ந்து என்றுங்காணாத வஸ்துக்களையின்று கண்டேனென்று விலைகொடுத்து எல்லாவற்றையும் வாங்கிக்கொண்டு இன்னும் வேறுசாமானிருக்கின்றதோவென்று கேட்டாள்.

இப்போதிவ்விடத்தி லில்லையென்று மந்திரியான வர்த்தகன் சொன்னான் அப்போதவ்விடத்திலிருந்த பாங்கிகள் பூரிப்புடனேங்கி எங்கள் பிராணனுக்கும் இருதயத்திற்கும் மேலாகிய பக்ஷமுள்ள அரசகன்னிகையே! இதுவரையிலும் வாங்கிய வஸ்துக்கள் மிகவுநேர்த்தியாய் மெத்தவும் அற்புதமாயிருந்ததல்லவா? இவற்றையெல்லாம் இந்த வர்த்தகன் மிகவும் அற்பமா யெண்ணிவைத்திருந்தான். இன்னும் ஒரு சொர்னத்தினாற் செய்த பெட்டியொன்று கெட்டிசெய்து வைத்திருக்கின்றான் அதை மிகவும் காவற்படுத்தித் தன்பிராணன்போற் பாதுகாக்கின்றான். ஆதலால் அதற்குள்ளிருக்கும் வஸ்துவானது ஏதோ ஒருவித அதிசயமுள்ளதாயிருக்கவேண்டுமென் றெண்ணுகிறோம். இந்தவர்த்தகன், அதைக் கூடக் கொண்டுவரவில்லை யென்பதை ராஜகுமாரத்திகேட்டு மிகவு மாசைகொண்டு சீக்கிரங் கொண்டுவரும்படி உத்தரவுகொடுத்து வரவழைத்து அதைவர்த்தகனிடத்திற் கனுப்பித் திறந்து காண்பிக்கும்படி கட்டளையிட்டாள். அதற்கந்தவர்த்தன் இதிலொரு இஷ்டனுடைய வஸ்துவிருக்கிறது. வெளியரங்கமாய் காண்பிக்கத்தக்கதல்ல. வாங்குபவரும் விற்பவனும் தனிமையாய்ப் பார்க்கவேண்டுமென்று சொன்னதைக்கேட்ட லீலாவதி ஓ நற்குணமும் விருத்தாப்பியமுமுள்ள வர்த்தகனே! நீ வெகு நேர்நடத்தைக்காரனென்று தோற்றுவதால் நீயென்முன்வந்து பெட்டிக்குள்ளிருக்கிற வஸ்துவைக் காண்பிக்கவேண்டுமென்றாள். அப்போதந்த வர்த்தகன் தாதிமார்கூட பெட்டிசகிதமாய்ப்போய் ராஜகுமாரத்தியை நோக்கி மிகவும் துதித்து வந்தனஞ்செய்து ராஜகுமாரத்தியின் சொரூபத்தைப் பார்த்தவு

டன் மூர்ச்சடங்கிக் கீழேவிழுந்து ஒரு மணிநேரம் பொறுத்துத் தெளிந்திருக்குஞ் சமையத்தில் ஓ வர்த்தகனே! உனக்கிவ்விதமாய் மூர்ச்சையுண்டான விபரந் தெரியப்படுத்தவேண்டுமென்றாள்.

அதற்கு வர்த்தகன் விருத்தாப்பியத்தாலும் பட்டணத்தை விட்டிவ்விடம்வந்ததனால் வழியில்நேரிட்ட அசௌக்கியத்தினாலும் போஜனபாகமின்மையாலும் தேகந் துர்ப்பலமுற்றுப் பித்த மதிகரித்து இப்போதுண்டான மூர்ச்சைபோல் அடிக்கடி வருவது வழக்கந்தானென்று சொல்லிப் பெட்டியைத்திறந்து வீரவர்மனுடைய படத்தையெடுத்து ராஜகுமாரத்தியின் கையிற்கொடுத்தான். அவளதைப்பார்த்துச் சந்தோஷப்பட்டு ஐயா வர்த்தகரே! இப்படம் என் மனதைக் கவர்ச்சிசெய்யும் அழகுடைய ஒரு யௌவன வாலிபனு யிருத்தலாலும், இப்படத்தினால் மன்மத சஞ்சலங்களைப் போக்கி சந்தோஷிப்பிக்கிறதற் கேதுவாயிருப்பதாலும் உமக்கிப் படத்தைக் கொடுக்கமாட்டேன். அதற்குப்பதிலாய் நீர் இதற்கு முன் விற்பனைசெய்த வஸ்துக்களுக்குள்ள கிரயத்துக் கிருபங்கு கொடுக்கிறேனென்று சொல்லி அப் படத்தைத் தான் வெகுநேரம் வரையில் கூர்மையாய்ப் பார்த்துக்கொண் டிருக்கும்போது வர்த்தகன் தான் விற்பனைசெய்த சாமான்களின் கிரயமெழுதுகிற பாவனையாக ராஜகுமாரத்தியின் படத்தையெழுதி முன் படமிருந்த பெட்டியிற்றானே வைத்துப்பூட்டி விற்பனைசெய்த சாமான்களின் கிரயமும் வாங்கிக்கொண்டு ராஜகுமாரத்தியினிடத்தில் செலவு பெற்றுத் தன்னிருப்பிடத்திற்கு வந்து பயணத்துக்குவேண்டிய முயற்சிசெய்து புறப்பட்டு தான் வசிக்கும் பட்டணமாகிய புஷ்பபுரிக்குவந்து சேர்ந்து வீரவர்மன் அரண்மனைக்குட் சென்று மிகவும் பயபத்தியுடனே சாஷ்டாங்கமாய் நமஸ்காரம்பண்ணி கைகட்டி வாய்பொத்தித் தான் வர்த்தகனைப் போயிருந்த பட்டணத்தில் நடந்த சமாசாரங்களை யெல்லாஞ் சொன்னதுமன்றிப் படத்தையுங்கொடுத்தான். அதை வீரவர்மன் பார்த்து மோகமதிகமாகி அன்ன ஆகாரம் நித்திரை முதலியனவின்றி ஒருவரிடத்திலும் பேசாமல் பயித்தியங் கொண்டவனைப்போல் அப் படத்துடன் பேசுகிறதும் சிரிப்பதும் அழுவதுமாயிருந்தான். இவ்விஷயம் தாய்தந்தையருக்குத் தெரிந்து அவர்கள் மிகவுந் துயருற்று வருந்தினர். அரசன் தன்னுடைய மந்திரிகளையழைத்துத் தன் புதல்வன் படுகிற துக்கசரித்திரத்தைத் தெரிவித்தான். அதற் கம் மந்திரிமார்களெல்லாரும் ஆலோசித்து ஸ்திரீகளுக்குள் நேசமாகவே யிருக்கிறகெட்ட

நடத்தைகளைக் குறித்துத் தினம்தினம் இரவில் ஒவ்வொரு மந்திரி சென்று ஒவ்வொருகதையைச் சொல்லுகிறோம்; அதைத் தங்கள் குமாரன் கேட்டால் மோகப்பிரமை யகலுமென்று மந்திரிகள் கூறியதை அரசன் அங்கீகரித்து அப்படியே சொல்லும்படி உத்தரவுசெய்தான்.

1.

முதல்மந்திரி சொல்லிய கதை:—ஞானபானுவென்னும் முதன்மந்திரி, வீரவர்மனுடைய அரண்மனைக்குட்சென்று மஞ்சத்தின் சமீபத்தில் நின்று மிகவுந் துதிசெய்து சுவாமி! தாங்கள் படும் துயரமகலத்தக்க ஒரு திவ்யரசமான கதைசொல்லும் விருப்பினனாய் வந்தேன். பிரபுவினுடைய வுத்தரவாகவேண்டுமென, அரசகுமாரன் "நீ சொல்லப்போகுங் கதை என் துன்பத்தை நீக்கும் வலியுடையதாயின் சொல்லுக" வென, ஞானபானு சொல்லத் தொடங்கினான்.

அரசே! பூர்வத்தில் எவ்வர்ணமும் வாலிபமும் சௌந்தரியமுமுடைய காமி என்பானொருவனிருந்தான். அவன் தனது மனைவியிடத்தில் மிக்க ஆசையுள்ளவனாய்ச்சிறிதுநேரமாவது அவளைவிட்டுப்பிரிய மனமில்லாமல் இரவும்பகலும்மற்றெக்காலமும் அன்றிலும் பேடும்போல ஒரேரீதியாக வாஞ்சையுடனிருந்ததனால்அவர்கள் சரித்திரங்கள் அனேக சபைகளி லலங்காரத்துடன் பிரஸ்தாபமாகிக் கொண் டிருந்தது. அக்காமிக் கிஷ்டனான ஓரதிகாரியின் மகனிருந்தான். அவனிடத்தில் எள்ளளவேனும் கல்மிஷமின்றி இஷ்டவிஷயத்தில் லோகவழக்கப்பிரகாரம் மிக அன்யோன்யமா யிருந்ததுமன்றி, ஒருவருக்கொருவர் பொருள்விஷயத்தில் மிகவும் ஒத்தாசை செய்துகொள்பவர்களாகவு மிருந்தார்கள். இங்ஙன மிருக்குநாளிலோர்நாளுதயத்தில் அதிகாரியின்மகன் காமியின் வீட்டுக்கு வந்து தன் இஷ்டனைக் காணாமையா லவன் வீட்டுக்கதவி லிருந்த துவாரத்தின் வழியாக நண்பனுடைய மனைவியைப் பார்த்து மிக ரூபாவதியா யிருந்ததைக் கண்டு மோகித்துக் குற்றமில்லாதிருந்த மனத்தில் தகாதவெண்ணங்க ளெண்ணி கல்மிஷ முண்டாக்கிக்கொண்டு தன் கருத்தை அவள் தெரிந்துகொள்ளும்படி முகக்குறிகளால் ஜாடையாகத் தெரியக்காட்டியதுமன்றி தினந்தோறும் ஒவ்வொரு அதிசயமுள்ள வஸ்துக்களை அவளுக்கு அனுப்பிக்கொடும்வந்தான். அதையப்பெண் முதலில் ஒப்பாமல் பின்பு அவனனுப்பிக்கொண்டு

வருகிறஅற்புதமன வஸ்துக்களில் தனக்குண்டான ஆசையால் அங்கீகரித்துகொண்டதுமன்றித் தானு மவன்மேல் மிக விருப்பங்கொண்டு சன்னல்வழியாக அவனைப் பார்ப்பதும் கதவின் சமீபத்தில் வந்து அவனிடத்தில் பேசுவதும் சிரிப்பதும் வெட்கமுற்றவள்போல் மார்படையை யிழுத்துத் தன் ரவுக்கையிற் சொருகுவதுமா யிருந்தாள். பின்பொருநாள் தனக்குச் சினேகமாயிருந்த கிழவியை யழைத்து அடி பாட்டி! நீ இன்று சாயங்காலம் ஐந்து மணி சுமாருக்கு ஆவடையார் கோயில் வீதியில் 39-வது கதவிலக்கமுள்ள வீட்டிலிருக்கும் என் ஆசை நேசனாகிய காமியிடஞ் சென்று இவ்வாறு சொல்: அதாவது, "உன் அந்தரங்கநேசியாகிய குணபூஷணி உன்மேற் கொண்டிருக்கும் மோஹத்திற்கு அளவேயில்லை. ஆனால் எப்போதும் எனது கணவன் என்னைவிட்டு நீங்காமலிருத்தலால் என்னுடைய இஷ்டத்தைப் பூர்த்திசெய்துகொள்ள சந்தர்ப்பப்படாம லிருக்கிறது. இன்னு மிரண்டொருநாளில் எனது கணவனை அலுவல்காரணமாக வேற்றூருக்குச் செல்லவேண்டுமென்று சொல்லியனுப்புவதாகவும், அவரையப்போது சர்வஜாக்கிரதையாயிருந்து வேகமுள்ள இரண்டு அராபிக்குதிரைகளுடன் வீட்டண்டைவந்து என்னை இட்டுக்கொண்டு போகும்படிக்கும் நான் சொன்னதாகச் சொல்" என்றுகூறி யனுப்பினாள். குணபூஷணி கூறியபடியே கிழவி அதிகாரியின்மகனாகிய சோமதத்தனிடஞ் சொன்னாள். அதைக் கேட்ட அவன் அங்ஙனமே யாகுக. "என் இன்பரசப் பாகின் உத்தரவுக் கெதிர்பார்த் திருக்கின்றேனென்று சொன்னதாகச் சொல்" லெனக் கூறி விடையளித்துப் பரமானந்த பரிதனாய்க் களித்திருந்தான்.

குணபூஷணியின் எண்ணமே கைகூடிற்று. அவள் கணவன் ஐந்தாநாள் வேற்றூருக்குச் சென்றவன் தீபம்வைத்தும் வாராமை கண்ட அவள் தன் சோரநாயகனை வரும்படி சேதி தெரிவித்தாள். 'குறித்தவேளை தவறாதவர் காமுகர்' என்ற அனுபவமொழி பொய்யாவண்ணம் இரவு பன்னிரண்டரைமணிக்கெல்லாம் சோமதத்தன் குணபூஷணியின் வீட்டுப் பின்புறத்தோட்டத்திற் சென்றிருந்தான். இவனது வரவையறிந்த குணபூஷணி, வீட்டுத் தீபத்தைத் தூண்டி விட்டுத்தான் துகிலையும் தீயிட்டு நித்திரை நீங்கிவிழித்துச் சொல்பவள் போல் ஐயையோ வீடு தீக்கிரையாயிற்றே! என் கணவரும் இங்கில்லையே யென்று கூக்குரலிட, வீட்டாரெல்லாம் விழித்துக்கொண்

அங்காரிங்குமாயோடி சாமான்களையெடுத்தப்புறப்படுத்தும்போது
கூரையில் கொள்ளிவைத்த கோமாட்டி அவர்களுடன் கலந்து
தானுஞ் சின்னேரம் சாமான்களை யெடுத்து வைத்துக்கொண்டே
யிருந்து மாய்மாலமாக மறைந்து வெளிப்புறஞ்சென்று சோரநாய
கனைக்கண்டு குதிரைமேலேறி ஐந்துநாள்வரையில் பிரயாணஞ்செ
ய்து கன்மபுரி யென்னும் பட்டணத்திற்போய்ச் சேர்ந்தார்கள்.
இவர்கள் இப்படியிருக்க.

காமி யென்பவன் தன் மனைவியைப் பார்க்கு மவாவோடு வீட்
டண்டை வந்தபோது வீடு அக்கினிப்பிரவேசமாகி அதிலிருந்த
சாமான்களனேகஞ் சேதப்பட்டுஞ் சில சேதப்படுகிற சமயமாயு
மிருக்கிறதைக்கண்டு நடந்த வர்த்தமானங்க ளென்னவென்று தா
யைக்கேட்க, அவள் அப்பா என்செல்வமே! உன்னுடைய வீட்டுத்
தீபத்துக்குச் சமானமான மனைவி, வீட்டில் தீப்பிடித்தபோது சா
மான்களெடுக்கப் போனபோது அக்கினிபட் டிறந்துபோனா ளெ
ன்று சொல்லி மகன்கழுத்தைச் சேர்த்துக் கட்டிக்கொண் டழு
தாள். அவன் பிரக்ஞைதப்பிக் கீழேவிழுந்து சலத்தினின்றுங் கரை
சேர்ந்த மச்சத்தைப்போல் துடிதுடித்துச் சின்னேரம் பொறுத்
துச் சுவாதீனமுற்றுத் தன் மனைவி தன்பேரில் அத்தியந்தவிசுவாச
மும் வாஞ்சையுமுடையவளா யிருந்ததனால் அவளுடைய அங்கங்
களை யெவ்விதமாவதெடுத்துத் தகனஞ்செய்து கருமாதிமுதலியன
செய்யவேண்டுமென்றும் இனிமேல் மரண மடையும் வரையில்
விவாக மில்லாமலும் ஸ்திரீகளுடைய பெயரைச் சொல்லாமலும்
காஷாயம்பெற்றுப் பரதேசம் போகவேண்டுமென்றும் யோசித்துக்
கூலிக்காரரை வரவழைத்து அக்கினிப்பிரவேசமான தன் மனைவி
யின் எலும்புகளை யெடுக்கும்படி உத்தரவுசெய்தான்.

அவ்வாறே கூலியாட்கள் களேபரத்தைத் தள்ளிப்பார்க்கை
யில் அதில் ஓர் சிறிய என்பும் காணப்படாமையால் காமி மிக ஆச்
சரியப்பட்டு அவ்விஷயத்தைத் தனது இஷ்டனாகிய அதிகாரி மக
னிடஞ்சொல்வதற்கு அவன் வீட்டுக்குச்சென்று விசாரித்தபோது
நேற்றுமுதல் அவ னிவ்விடத்தி லில்லையென்று சொல்லக்கேட்டு
அவன்பேரில் சந்தேகங்கொண்டு அதே ஏக்கமாக வீடுதிரும்பா
மல் காடு வனாந்தரங்களிற் சென்று காய்கனிகள் புசித்து ஓரிடத்தே
னுந் தங்காமல் பயங்கரமான காடுகளிலும், மலைகளிலும் அலைன்று

கொண்டிருக்குங் காலத்தில் ஒருநாள் அவனுக்குத் தாகமதிகரித்து ஒருன்னதமான மெத்தைவீட்டிற்சென்று ஜலங்கேட்க வாயெடுக்கையில் தெய்வகதியாய் அவ்வீட்டில் தன்னுடைய மனைவியின் குரலோசைவருவதைக்கேட்டு ஆசசரியமுற்று குடிக்க சலம் வேண்டுமென்று சத்தமிட்டுக் கேட்கையில், மற்றொரு பெண்பிள்ளை ஒரு செப்பில் தீர்த்தங்கொண்டுவந்து கொடுத்தாள். அவள் மூலமாக வீட்டிலிருக்கிற ஸ்திரீ தன்பெண்சாதி யென்பதற்குத் தகுந்த அடையாளங்களாற் றெரிந்துகொண்டு அங்கேயே வுட்கார்ந்திருந்தான்.

வீட்டுக்குள் இருந்த அவனுடைய மனைவி பின்புறமிருந்து பார்த்துத் தன்னுடைய கணவனென் றறிந்து சோரநாயகனிடத்திற்சென்று முன்வாசலில் உம்முடைய மாற்றான் வந்திருப்பதால் இச்சமையத்தில் பிராணனைக் காக்கத்தக்க ஒருயுக்திசெய்ய வேண்டுமென்றாள். அதைக்கேட்ட சோரநாயகன் குதிரையின்மேல் அப்பெண்ணையேற்றிப் புறவாசல்வழியாய்த் தானொரு அங்கவடியையும், தனது வேலைக்காரன் ஒரு அங்கவடியையும் பிடித்துக்கொண்டு சவாரிசெய்தார்கள். குதிரையோடிய காற்சத்தத்தைக் கேட்ட சொந்த நாயகன் சந்தேகப்பட்டு வீட்டுக்குட் புகுந்துபார்க்கையில் ஒருவருமில்லாமைகண்டு அங்கிருந்த ஒரு வெட்டுக்கத்தியை யெடுத்துக்கொண்டு புறவாசலில் வந்து குதிரையின் காலடியைப் பிடித்தோடி அங்கவடி பிடித்திருந்த யிருவரில வேலைக்காரன்மேல் வெட்டுக்கத்தியை வீசியெறிய அவன் வெட்டுண்டிறந்தான் அதைக்கண்ட சோரநாயகன் குதிரைவசமாக ஸ்திரீயைவிட்டோடிப்போனான். அவள் நாயகன் குதிரையையும் மனைவியையும்பிடித் திட்டுக்கொண்டு தன்பதியைநோக்கிச் சிறிதுதூரஞ்சென்று ஒரு கோட்டத்திலிறங்கி பகல்முழுது மங்கிருந்து அஸ்தமித்த பிறகு அவளை உயிர்வதைசெய்து நரகத்துக்கிரையாக்கித் தானிருக்கிற காஷாயவேஷத்துடனே யிருக்கவேண்டுமென் றாலோசித்துக்கொண்டே வந்து குதிரைமீதிருந்த ஸ்திரீயையிறக்கிக் குதிரையை மேயவிட்டு அனேகநாள் திரிந்த அலுப்பினாலும் சில்லென்று வீசிய காற்றினாலும் நித்திரைவந்ததால் மனைவிமடிமீதில் தலைவைத்து நித்திரைசெய்தான்.

முன்னர் விட்டுச்சென்ற சோரநாயகன் குதிரையினுடைய காலடியைப் பற்றிக் கோட்டத்துக்குள் வந்து அவள் மடியின்மேல் [illegible]தன் தலைவைத்துத் தூங்குவதைக் கண்டு வாளெடுத்து

வெட்டப்போனான். அப்போதந்த ஸ்திரீ அவனைக் கொல்லவேண்டாமென்று தடுத்துத் தன்கணவன் தலையையெடுத்துக் கீழேவைத்து இருவருஞ்சேர்ந்து அவனை இறுகப்பிடித்துக் குதிரைக்கயிற்றாற் கட்டி இருவரும் அவன்முன்னின்று சொல்லத்தகாத துர்நடத்தை செய்தனர். அவள் புருஷன் சிவசிவ வென்று கண்களைமூடி பகவானைத் துதித்தான் பகவத் சங்கல்பத்தல் அம் மரத்தினின்றும் ஒரு கொடியநாகசர்ப்ப மிறங்கி வந்து அவன்காலில் மெல்லெனத் தீண்டிச் சென்றது. சோரநாயகன் யாதோ விஷப்பூச்சி தீண்டிற்றென்று கடித்தவிடத்திற் சொரிந்துகொண்டே யிருந்தவன் விஷந் தலைக்கேறி இறந்தான். தன் சோரநாயகன் இறந்த தறிந்த குணபூஷணி தன் சொந்தநாயகனைக் கொன்றுவிடவேண்டுமென்று கோபத்தோடு தன் கையில் வாளேந்திக் கொல்ல வருவதைக் காமி கண்டு மிகத்தாழ்மையோடு எனதுபிரியமுள்ள நாயகி! நீ இதுவரையிற் செய்த துர்நடத்தைகளைக் குறித்து உன்மேரிலெனக்கியாதொரு கோபமுமில்லை என்னைக்கொல்லவேண்டாம். இவனிறந்துபோனதுபோல என்னையுங் கொன்றுபோட்டால் யாருன்னைக் காப்பாற்றுவார்களென்றும், அவனுயிரோ டிருக்கும்போது என்னைக் கொன்றிருந்தால் அவனாவது உன்னைக் காப்பாற்றுவான் தெய்வச் செயலா லவ னிறந்துபோனமையால் என்னைக் கொல்ல வேண்டாம் இதற்குமுன் நீயுநானுமிருந்த இஷ்டப்பிரகார மினிமேலிருக்கலாமென்று பிரமாணமாய்ச் சொந்தநாயகன் சொன்னதை அவள் அங்கீகரித்து வெட்டாமல் கட்டை யவிழ்த்து விட்டாள். சொந்தநாயகன் காஷாயவேஷத்தோடே சாகிறபரியந்தம் பெண்ணின் சாவகாசத்தையும் ஸ்திரீ யென்கிற நாமத்தையும் நினைக்கிறதில்லை யென்று திடஞ்செய்து கெட்டநடத்தையுள்ள ஸ்திரீயைத் தெய்வத்தின் கோபத்துக் குட்படுத்தி அவ்விடத்திற்றானே விட்டுப் பரதேசம் போய்விட்டானென்று வீரவர்மனுக்கு முதல் மந்திரிசொல்லிச் சுவாமி! பெண்களிடத்தில் அன்பு, விசுவாசமுமில்லாமையால் அவர்கள் துரோகிகளென்றும், அவர்களை நம்பலாகாதென்றும் பெண்களுடன் சேர்ந்து அவர்கள் மனப்படி நடப்பதானது, கைகளையுங் கால்களையுங் கட்டினதற்குச் சமானமாமென்றும், அக்கட்டை மறுபடியும் அவிழ்ப்பது மிகப்பிரயாசமாகுமென்றும் அறிவித்தான். அதைக்கேட்ட அரசன் ஓ மந்திரி! நீ சொன்ன கதையால் என்மனதிலுள்ள காதல் விர்த்தியாயிற்றேயன்றிக் குறையவில்லை. ஆகவே, நீ உன் இருப்பிடஞ் செல்லென்று

அனுப்பிவிட்டு மதனலீலாவதியின் படத்தை அடிக்கடி பார்த்துத் துக்காக்கிராந்தனுயிருந்தான்.

---

II

☞ இரண்டாவது மந்திரி சொல்லியகதை:—திரு பாகரன் என்னும் பெயரினையுடைய இரண்டாவது மந்திரி வீர வர்மனிடம் வந்து வந்தனஞ்செய்து, அடியில்வருமாறுகூறலானுன்

அரசே! மச்சபுரி என்னுமூரில் மிகு மேன்மைதங்கிய உன்னத மான வாசங்கமழும் ஒரு பூங்காவனத்தில் சிலசினேகர்கள் ஒன்று சேர்ந்து சமைத்துண்டு தாம்பூலந்தரித்து மணந்தங்கிய சந்தனம் பூசி, வீணை, மிடல் முதலியனமீட்டிப் பாடிக்களித்திருக்குஞ் சமை யத்தில், மிகத் துன்பமுடைய அன்னியமனித னெருவன் பூங்காவ னத்திலுள்ளவர்களிடஞ் சென்றுன். அவர்கள் அவனைக்கண்டு ஒன் றும் பேசாமல் தங்களுடைய கேளிக்கையை நடத்திக் களித்திருந் தார்கள். வந்தவன் அவர்களைநோக்கி, ஐயா நான் உங்களுடன் களி த்திருக்கலாமென்று தேடிவந்த என்னுடன் வார்த்தையாடா திரு ப்பது தர்மமோவென, அவர்கள் அவனுக்கு அன்னமிட்டு வாச னைத் திரவியங்கள் பூசித் தங்களுடனுட்காரவைத்துக் களிப்பித்து, வாத்தியக்கருவிகளை மீட்டிப் பாடிக்கொண்டிருக்கையில், வந்தவன் கன்னத்தில் பெரிய தழும்பொன் றிருக்கக்கண்ட அக்கூட்டத்தார் 'சினேகனே! உன்கன்னத்தில் இத்தனை பெரிய தழும்புண்டாவா னேன்? அஃதுண்டானதற்குக் காரணமென்ன' வென்று கேட்டா ர்கள். அவன், 'சினேகிதர்களே! இத் தழும்புண்டான காரணத் தைத் தங்களிடம் தெரிவிக்க வெட்கப்படுகின்றேன். மற்றொருதரம் அதைப்பற்றி என்னை வினவாதிருக்கவேண்டும்' என்றுன். அவர் கள் அதை அங்கீகரியாமல் எப்படியும் சொல்லவேண்டுமென்று தொந்தரை செய்ததால், வந்தவன் வேறு விதியில்லையென்று சொல் லத் தொடங்கினுன்.

சிலநாளைக்குமுன் நான் என்மனைவியை மஹாபதிவிரதை யென்றெண்ணித்து வாஞ்சையாயிருக்குங்காலத்தில் ஒருநாளிராத்திரி என்னுடைய மனைவியும் நானும் சப்ரமஞ்சத்தின்மேல் படுத்து நித் திரைசெய்தோம். அன்றிராத்திரி சூரியோதயமாக ஒருஜாமமிருக் குமளவில், அரசனரண்மனையிற்சேவிக்க மேளசத்தத்தால் விழித் துக்கொண்டநான் என்பக்கத்திலிருந்தமனைவியைக்காணுமல்கொ

லேக்கேனும் அல்லது தன் சப்ரமஞ்சத்திற்கேனும் போயிருப்பா ளென்று நினைந்து மறுபடியும் நித்திரைசெய்தேன். மறுநாளும் மூன்று நாளும் மேற்கண்டபடியே விழித்துப் பார்த்ததில் என் பக்கத்திலில்லா திருந்ததால் மிகவும் சந்தேகமடைந்து அதை யறிய வேண்டுமென் றெண்ணி நாலாநாள் இரவில் நித்திரைசெய்பவன் போல் பாவனைகாட்டி விழித்திருந்தேன். அர்த்தராத்திரி வேளையில், என்னுடைய பெண்சாதி சப்ரமஞ்சத்தை விட்டிறங்கித் தலைவாயல் வரையில் மெதுவாய்ப்போய் அப்புறந் துரிதமாய் நடந்துபோனாள். நானும் ஒருகத்தியை எடுத்துக்கொண்டு அவளுக்குத்தெரியாமல் முக்காடிட்டுப் பதுங்கிப்பதுங்கிப் பின்றொடர்ந்து போனேன். ஆ ஆ! என்வயதில்பாராத காட்டுப்பாதையாகச் சென்று அங்கிருந்த குடிசைவீட்டி னருகிற் போனாள். அதற்குச் சமீபத்திலிருந்த ஆலமரத்தடியில் நான் பதுங்கியிருந்துபார்க்கும்போது அக்குடிசைக்குள்ளிருந்து கரடிபோலும் சொரூபமுள்ள ஒரு சந்நியாசி அதிக கோபத்துடன் வந்து இவள் தலைமயிரைப்பிடித்துப் பிரம்பாலும், கையாலும் ஓங்கி யோங்கி யடித்து மிகவைது நான் வெகு நேரமாய் உன் வரவை எதிர்பார்த்திருந்தேனே! நீ சீக்கிரம் வராமலிருந்த காரணமென்னவென்றுகேட்க, அந்த ஸ்திரீ அச் சந்நியாசி காலில் விழுந்து இன்றிராத்திரி எனது புருஷன் நெடுநேரம் விழித்திருந்தமையால் தாமதப்பட நேர்ந்ததென்று சொன்னதுந்தவிர தன்னுடைய புருஷனைத் தூஷணையாய்வைது அதனால் நேர்ந்த தாமதத்திற்காக என்னை மன்னிக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டாள். பிறகு, மன்னித்தோமென்று சந்நியாசி மறுமொழிகூறி அவளை வீட்டுக்குள்ளே கூட்டிக்கொண்டுபோய் ஒருமணிநேரம் பொறுத்து அச்சந்நியாசி சிறுநீர்விட வெளியேவந்து நான் பதுங்கியிருந்தவிடத்தில் உட்கார்ந்தான். அப்போது என்கையிலிருந்த கத்தியினா லவனை இரண்டு துண்டாக வெட்டிக் கொன்றுவிட்டு அவ்விடம்விட் டகன்று சமீபத்திலிருந்த ஒரு மரத்தின்மீதேறி உட்கார்ந்திருந்தேன்.

அந்த ஸ்திரீ இரண்டு நாழிகை கழிந்து சந்நியாசியைத்தேடி வெளியில்வந்து பார்த்ததில் அவன் வெட்டுண் டிறந்திருப்பதைக் கண்டு துக்கப்பட்டழுது சந்நியாசியைக் கொன்றவனைத் தெரிந்து கொல்லவேண்டுமென்று ஒருகையில் வாளையும் மற்றொருகையில் விளக்கையு மெடுத்துக்கொண்டு மதம்பொழியும் யானையைப்போல்

ஆங்காரங்கொண்டு தேடிப்பார்த்ததில் ஒருவரு மகப்படாததால் திரும்பிவந்து அஷ்டி சந்நியாசியைத் துண்டுதுண்டாக வெட்டி ஒரு பையிற் போட்டுக்கட்டித் தலையிற்றூக்கிக்கொண்டு அதற்குச் சமீபமாயிருந்த ஆற்றிற்போட்டுத் திரும்பி வீட்டிற்கு வரும்போது நான் அவளுக்கு முந்தி வீடுவந்து சப்ரமஞ்சத்திற் சயனித்துக்கொண்டேன்.

அப்பா லவள்வந்து என்னுடன்கூடக் கட்டிலிற்படுத்துக் கெட்டியாயழுதாள். நான் அதுதெரிந் தெழுந்து அழவேண்டிய காரணமென்னவென்று விசாரிக்க அவள் எனது பிரியமுள்ள பர்த்தாவே! உம்மைக்குறித்து மிகவுங்கெட்டசொப்பனங்கண்டு அதனாலழுகிறேனென்றாள். அதற்கு நான், பெண்ணே. நீ கண்ட சொப்பனப்பயன் மிக நல்லதென்று சொல்லித் தேற்றி அவளழாமலிருக்கும்படி சமாதானஞ் செய்தும் அவள் கேளாமற் சிறிதுநேரம் அழுதுகொண்டிருந்து நித்திரைபோனாள்

இப்பால் மறுநாட் சூரியோதயத்தில் நான் நித்திரைதெளிந் தெழுந்து மனைவியை யழைத்து தந்தசுத்திக்காகச் செம்பிற் சலங்கொண்டு வரும்படி சொன்னதற்கு ஐயோ! செம்புஞ் சலமுங் கனமாயிருக்கின்றதே! நானதை யெடுத்துத்தரச் சக்தியுள்ளவ ளல்லவென்று சொன்னதைக் கேட்ட நான் அப்படியா? நேற்றிராத்திரி தலைமேற் சுமந்த சந்நியாசியின் பிணத்தைப் பார்க்கிலும் இது கனமா யிராதே! என்றேன்.

அதைக்கேட்ட அந்தஸ்திரீ உடனே வீட்டுக்குட்புகுந்து கத்தியைக் கையிற் பிடித்துக்கொண்டுவந்து எனக்குத் தெரியாமல் முகத்தில் ஒரு வெட்டு வெட்டினாள். மறுவெட்டு வெட்டுகிறதற்கு முந்தி நானவளைப் பிடித்துக் கட்டிவைத்து அவளுடைய பந்துக்களை யழைத்து நடந்த சரித்திரத்தைச்சொன்னேன் அவர்களெல்லோரும் ஒன்றுசேர்ந்து அவளை இரண்டு துண்டாக வெட்டிக் காட்டிலுள்ள நரிகளுக்கும், ஆகாயத்திற் பறக்கும் கழுகுகள்முதலிய பருந்துகளுக்கும் அவள் மாமிசத்தை விருந் தளித்தார்கள். அப்போ தடைந்த தழும்புதான் என்முகத்தி லிருக்கிறது. அதுமுதல் நான் விவாகஞ்செய்துகொள்கிறதில்லையென்று இவ்வாறு பயித்தியகாரனைப்போல் தேசாந்தரிக்குத் திரிகின்றேனென்று அக்கூட்டத்காரிடம் சொன்னேனென்று இரண்டாவது மந்திரிசொல்லிமுடித்தான்.
இதைக் கேட்ட வீரவர்மன் இக்கதையால் என்மனம் பாதொரு

திருப்தியுமடைந்திலதென்று மந்திரியையனுப்பிவிட்டு முன்போல வே மோகசாகரத்தில் மூழ்கினவனு யிருந்தான்

---

III

மூன்றுவது மந்திரி சொல்லியகதை:—சந்திரவர்ணனென்னு மூன்றுவது மந்திரிவந்து மிகவுந தாழ்மையோடு வீரவர்மனைத் துதிசெய்து சொல்லத் தொடங்கினதாவது, அரசே! மிகுந்த நற்குணத்திற் சிறந்த வொருவன் அடியேனுடைய தயவுக்கும் அன்புக்கும் பாத்திரனுய் வெகுநா ளிஷ்டத்துட னுத்தியோகம் பண்ணிக்கொண்டிருந்தான். ஆனு லவ னெப்பொழுதும் சந்தோஷமாயிராமல் அசந்தோஷமாயிருப்பான் அவனை அந்த அசந்தோஷத்திலிருந்து சந்தோஷமா யிருக்கும்படிச் செய்யவேண்டுமென்று வேண்டிய முயற்சிகள் செய்தும் அவன் அசந்தோஷமாகவே யிருந்ததால் ஒருநாள் நானவனை நோக்கி ஓ இஷ்டனே! நீ எப்பொழுதும் அசந்துர்ஷ்டியா யிருக்கிற விபர மெனக்குத் தெரியப்படுத்தினுல் என்னுற் கூடிய முயற்சிசெய்து உன் வியாகூலத்தை நீக்குகிறே னென்றேன். அதற்கவன் சொன்னதாவது,

நானொருநாள் மான்வேட்டைக்காகக் காட்டுக்குச் சென்று ஒருமானின்பின் றொடர்ந்து வெகுதூரம்போனேன். அந்தமான் தப்பி மறைந்துபோனதனுல் எனக்கு வழிதெரியாமல் அதற்குச் சமீபத்திலிருந்த ஒரு தோட்டத்திற் சென்று சுற்றுமுற்றும் பார்த்துக்கொண்டிருக்கையில், மிகவும் விர்த்தாப்பியமுள்ள ஒருகிழவி தேகத்தில் அஸ்தியும் தோலும் நரம்புந் தவிர மாமிசமும் ரத்தமுமில்லாதவளாயும் தலைமயிர் வெள்ளியைப் பார்க்கிலும் வெண்மையாயிருந்ததுமன்றி அந்தக்கிழவி ஒரு மரத்தின்கீழிருந்து சுவாமியைத் தோத்திரஞ் செய்வதைக்கண்டு அவளிடத்திற்குப்போய் மிகவும் வாஞ்சையுடன் நின்று ஓ தெய்வவிசுவாசமுள்ள தாயே! நான் வழிதப்பி இத் தோட்டத்திற்கு வந்தேன; எனக்கு வழிகாண்பிப்பதுந்தவிர தாகந்தணியச் சலமுந் தரவேண்டுமென்றேன். உடனே அக்கிழவி சலங்கொடுத்து இன்றிரவு இங்கிருப்பையேயானுல், நாளையுதயத்தில் உனக்கு வழிகாண்பிக்கிறே னென்ருள். நானதற்குச் சம்மதித்து அங்கிருக்கையில் தாமரைபோன்ற முகமும் இரதியைப் போன்ற அழகும் எவ்வர்ணமும் வாலிபமும் பதினைந்து பதினறு

வயதுமுள்ள ஒரு ஸ்திரீ அத்தோட்டத்திலிருந்து வெளியிற்போய்
காமதேனுவுக்குச் சமானமான ஒருபசுவையும் அதன் கன்றையுங்
கொண்டு வந்து பால்கறந்து கிழவியிடத்திற் கொடுக்க அதை யக்கி
ழவி மூன்றுபங்காக்கி ஒருபங்கு தான் குடித்துமற்றொருபங்கு என
க்கும் அந்தஸ்திரீக்கு ஒருபங்குங் கொடுத்தாள். அதை நாங்கள்
புசித்தோம். அப்பால் அந்தப்பசுவைக் காட்டி லோட்டிவிட்டு அம்
மங்கைப் பருவப்பெண்ணானவள் தானிருக்கு மிடத்துக்குப் போய்
விட்டாள். அங்கிருந்த கிழவி என்னை நோக்கி "மகனே! நான்
வெகுநேரம்வரையில் கடவுளைத் துதிசெய்துவிட்டுப் பின்னர் நித்
திரைக்குப் போவேனாதலால் நீ முன்னதாக நித்திரைக் கேகுவா
யாக" வென்றாள்.

அப்போது நான் ஓ கிழவியே! இந்தச் சந்திரவதனமுடைய
பெண் உனக்கு என்னவேண்டுமென்றும், இப்போது பால்கறந்த
பசு ஏதென்றும் வனாந்தரமானகாட்டில் நீங்கள் தனிமையாயிருக்
கிற காரணமு மெனக்குச் சொல்லவேண்டுமென்றும் கேட்டேன்.
அதற்கந்த ஔவையார் உலகத்தின் பித்தலாட்டங்களைப்பார்த்துச்
சகிக்கமாட்டாமல் காட்டில் வந்திருக்கிறதாகவும், இப் பசுவின்
பாலை யருந்தி நானு மென்னுடைய குமாரத்தியாகிய இப் பருவப்
பெண்ணும் சுவாமியைத்தொழுது காலங்கழிக்கிறோமென்றும்;
ஆனால் கடவுளருளால் நான் மரணமடையுமுன் எனது புத்திரிக்கு
விவாகம் நடத்தவேண்டுமென்றும் சொன்னாள். நானதைக்கேட்டு
ஓ நரைமூதாட்டியே! நான் வாலிபனாகவும் நற்குணமும் நன்னடக்
கையுமுற்று நல்ல கோத்திரவானாகவுமிருப்பதால் உனது குமாரத்
தியை யெனக்கு விவாகஞ் செய்துகொடுக்கவேண்டு மென்கிறேன்.

இதைக்கேட்ட அந்நரைமூதாட்டியான ஔவையார் மிகக்
களித்துச் சம்மதித்து எனக்கு அந்தப்பெண்ணைக் காந்தர்வ விவா
கஞ் செய்துகொடுத்து, அத் தோட்டத்தையும் தோட்டத்தி லிரு
ந்த அரண்மனையையும் எங்களுக்குக்கொடுத்தாள். அதன்பின்
நானும் என் பன்னியும் அன்யோன்யமா யிருந்து காலக்ஷேபஞ்
செய்துவருங் காலத்தில் என்மாமியான கிழவி இறந்துவிட்டாள்.
பிறகு நாங்களக்காட்டில் தனித்திருக்கப் பயந்து அவ்விடத்திற்குச்
சமீபமான ஒரு பட்டணத்திற்சென்று களிப்புடன் கூடி வாழ்ந்தி
ருக்குங் காலத்தில் நான் சிற்சில அசந்தர்ப்பங்களினால் பொருள்
தேடவிரும்பி வீட்டைவிட்டு வெளியூருக்குச் சென்று திரும்பி

வந்தபோது என் மனைவி அதிக துக்கத்துடனிருந்தாள். அவ்வாறிருக்கத் கென்ன காரணமென்று நான் வினவியபோது அவள், 'என் அன்பிற்குரிய இன்பமே! நீர் என்னை இந்நாள்தனையும் தனியே விட்டுச் சென்றதனால் நேர்ந்த துன்பங்கள் இன்னின்ன வென்று விஸ்தாரமாய்ச் சொல்லி என்னைக் கண்ணீர்விட் டழும்படிச் செய்தாள். நான் அவளைக் கற்புடையவளென்று மதித்து அவளுடன் சிலநாள் மருவிவாழ்ந்து பின்னும் பொருட்காரணமாகப் பிரிதலை விரும்பி முன்னே என் மனைவிக்குத் துணையாக வைத்துப்போன கிழவியை அழைத்து மறுபடியுங் காவலாக வைத்து எனது துணைவிக்கு உறுதிசொல்லிப் பிரயாணப்பட்டபோது அக் காவற் கிழவி என்னுடன் தொடர்ந்துவந்து சொன்னதாவது, உன்னுடைய மனைவியின் துர்நடத்தைகளை என்னாற் சொல்லிமுடியாது நீ யாரேனும் வேறொரு காவற்காரியை வைத்தேகென்று கூறினாள். நான் அவளை இந்த ஒரு யாத்திரைவரைக்குமட்டும் காவலா யிருக்கும்படி வேண்டிக்கொண்டதன்பேரில் அவள் சம்மதித்தாள். நான் அன்றையதினமே பிரயாணப்பட்டு அப்பதிக்குச் சமீபத்திருந்த ஓரூரிற் பகல்முழுவதுமிருந்து அஸ்தமித்தபின் மாறுவேஷத்துடன் என் வீட்டுக்குட் சென்று பிறரறியாவண்ணம் மாடத்தில் பதுங்கியிருந்தேன்.

ஐயோ! பின்னர் நிகழ்ந்தவிஷயத்தை என்னென்றுரைப்பேன்? நான் படுக்கும் சப்ரமஞ்சத்திற் கெதிரிலிருந்த மேஜைமேல் சந்தனம் அத்தர்-புனுகு-மல்லிகை-முல்லைமுதலிய புட்பவகைகள், துளிர் வெற்றிலை - வாசனைசேர்ந்த பாக்கு - பால் முதலியனவைத்து நிரப்பப்பட்டிருந்தன. ஒரு யௌவன புருஷன் சப்ரமஞ்சத்தில் உட்கார்ந்து என் மனைவியைத் தன்மடிமீதிருத்தி முகத்தோடு முகம்வைத்து முத்தமிட்டுக் கொஞ்சிக் குலாவி வாசனை திமிர்ந்து ஒருவருக்கொருவர் பூச்சூடி பாலும் பழமும் உண்டனர். கட்டளைக்கலித்துறை: 'கைப்பிடி நாயகன் றூங்கையிலே அவன் கையையெடுத்து, அப்புறந்தன்னில் அசையாமல் முன்வைத்து அயல் வளவில், ஒப்புடன் சென்று துயில்நீத்துப் பின்வந் துறங்குவளை, எப்படி நான் நம்புவேன் இறைவா கச்சி யேகம்பனே!' என்று பட்டினத்தார் பாடிய பாடல் என் நினைவிற்கு வந்தது. பின்பு என் மனைவியும் புருஷனுமிருந்ததை என்வாய்விட்டு எப்படிக்கூறுவேன்? பின்னர் அவள் சோரநாயகன் வெளியில்வந்து கைகால் சுத்திசெய்துகொண் டிருக்

கையில், நான் அவனறியாமல் விரைந்துசென்று பிச்சுவாயால் அவனைக்குத்திக் கொன்று மற்றோரிடத்திற்போய்ப் பதுங்கியிருந்தேன்.

தன் சோரநாயகனைக் காணாத என்மனைவி முற்றத்திற்குவந்து குத்துண்டிறந்துகிடக்கிற இஷ்டநாயகனைப் பார்த்து நெடுநேரம் திகைத்து நின்று மெய்சோர்ந்து கண்ணீர்விட்டழுது ஒரு பெரிய மிடாவில் அவனுடலைப் புகுத்திட்டு, கொல்லையிற் குழிபறித்துப் புதைத்துவிட்டாள். நான் அவ்விடம்விட்டகன்றுயாத்திரைசெய்து வந்தவனைப்போல் இரண்டுவாரங் கழித்து வீடுபோய்ச்சேர்ந்தேன்.

என் மனைவி மிகவும் துக்கத்துடனே விக்கலும் பொருமலுமுடையவளாய் தலைமயிர் மண்ணிற்புரண்டு, முகஞ்சோர்ந்துவீங்கியிருக்கக்கண்ட நான் 'பெண்ணே! கற்புக் கனிகலமே! இதென்ன கோலம்! உன் தேகத்திற் கென்னநோய்? என்று வினவினேன். அச்சிறுக்கி கண்ணீர் ஆறெனப்பெருக்கி 'நாதா! நீர் என்னைவிட்டுப் போனதுமுதல் பல விபரீதமான சொப்பனங்கண்டு பயந்து தனியேயிருந்து தயங்கினேன். என் மாங்கல்யபலத்தால் வந்து சேர்ந்தீர்! அந்தக் கனவை நீங்கள் கேட்டாலும் பயப்படுவீர்! ஐயோ! உங்களுக்கென்னென்ன ஆபத்துகள் நேரிட்டனவோ! என்னென்னசங்கடத்துக்குள்ளானீரோ! ஹா! நான்பாவியிலும் பாவி! என் கண்ணாளரே! நீரொரு கடலோரத்தில் நிற்பதுபோலவும், அவ்விடத்திற் பெரியதோர் கோரமுள்ள ஒருபூதம் வீராவேசத்துடன் உம்மைப் பக்ஷிக்கவந்ததாகவும், நீர் கதறிப் பதறிச்சென்று சமுத்திரத்தில் விழுந்ததாகவும், உம்மை அப்பூதம் மேற்றள்ளி மேலேறிக்கொண்டிருப்பதாகவும், நீர் சோர்வடைந்ததாகவுங்கண்டு அதுமுதலிப்படியே அழுதுகொண்டிருக்கிறேனென்று கூறி, அதன் அர்த்தத்தையும் எனக்குச் சொல்லவேண்டுமென்றுங் கேட்டாள். அதற்கு நான் என துயிரனையநாயகி! இச் சொப்பனத்தில் யாதொரு அவசகுனமுமில்லை. அதாவது, கடல்போற் சொற்பனங்கண்டது, நம்மை ரட்சிக்குங் கர்த்தா. பூதமாகக்கண்டது, எனக்குச் சத்துரு. நான்கடலில் விழுந்ததாகக்கண்டது, கர்த்தாவினிடத்தில் அடைக்கலமாகியது. என்மேல் பூதமேறி உட்கார்ந்தது, உன் நினைவின் கொடுமையின் மறுகலிப்பு. நான் சோர்வடைந்ததாகக் கண்டது; வீட்டுக்கு வந்தசமயம் பார்த்து என்னுடைய சத்துருவை நீ மிடாவிற்போட்டுப் பூமியிற் புதைத்தது. இதுதான் நீ கண்ட சொப்பனத்தின் கருத்தென்றுகூறினேன். நான் மிடாவின்சங்கதி கூறியபோது

அவள் முக்ம்வாடி கடுங்கோபமடைந்து நமது புருஷனுக் கெல்லா வந்தரங்கமுந் தெரிந்துபோயிற்றென்று யூகித்து அன்றிரவு அர்த்தராத்திரியிலெழுந்து பயங்கரமான தீக்கொளுந்தி வீட்டின் நாற்புறமும் வைத்துத் தீக்கிரையாக்கி எங்கோ ஓடிவிட்டாள்.

என் சிநேகனே! இதுதான் எனது உண்மையான சரித்திரம். அதுமுதல் நான் பரதேசியெனத் திரிந்து சரீரசுகத்தைப் பாராட்டாமலிருக்கிறேனென்றான். அதைக்கேட்டு நானும் மிக்க துக்கமுடையவனானேனென்று மூன்றாவது மந்திரிசொல்ல, வீரவர்மன் இத்தகைய சாரமற்ற கதைகளால், இதோ இப் படத்திலுள்ள என் இன்பரசப்பெருக்கை எழிலா ரம்பையைத் தேனைப் பாகைத் தெள்ளமுதைக் கனவிலு மறவேன்! மறவேனென்று லீலாவதியின் மோகசாகரத்தில் மூழ்கியிருந்தான்.

---

## IV.

☞ நான்காவது மந்திரி சொல்லிய கதை:—நாலா நாளிரவில் சுமித்திரனென்னு மமைச்சன் சென்று அரசே! பூர்வத்தில் நீலாயதாக்ஷன் என்னும் ஓரரசன் நீதி தவறாது செங்கோல் செலுத்திவந்தான். அவனினு மேலாகிய செல்வமும் சேனைகளும் உடைய வேற்றரசன் படையெடுத்துவந்தான். அதனை யறிந்த நீலாயதாக்ஷன் மிகப்பயந்து தன்னுடைய பிரதான மந்திரியிடம் ஆலோசித்து அவனோடு சேனைகளைக் கூட்டியனுப்பினான். அம் மந்திரியின் மனைவி கொஞ்ச வயதும் மஞ்சள்நிறக் கட்டழகுமுடையவளாயு மிருந்தாள். இவள் தன் புருஷனிடத்தில் உண்மையான வாஞ்சை யுடைத்தானவளாதலால் அரசன் கட்டளைப்படி தன் கணவன் தன்னைத் தனித்திருத்தி யுத்தகோலத்துடன் சென்றதை யெண்ணிப் பெரிதும் வருந்தி அன்னாகாரம்வெறுத்து நித்திரையின்றித் தன் கணவனை அல்லும் பகலும் நினைத்து அழுதுகொண் டிருந்தாள்.

மந்திரிமனைவி இவ்வாறு துக்காக்கிராந்தளா யிருப்பது கண்ட அவளுடைய தாதி, இரதி தேவியை யொத்த அழகினையுடைய ஜீவாக்ஷிரியென்னும் பெண்ணரசியே! உன் யௌவனதசையில் நின் நாயகனோடு கலந்து சுகித்திருப்பதைவிட்டு இவ்வாறு விசனமுறுவது கூடுமோ? உன்னுடைய புருஷன், கண்டோர்மனதைக் கவரத்

த்தக அழகினையுடைய உனக்கேற்றவனன்று. ஆகையால் இனி நீ துக்கப்படுவதொழிந்து சிவிமுடித்து ஆபரணங்களணிந்து உன் மனோபீஷ்டப்படி யிருப்பதற்குப் பாத்திரவானாகிய இப்பட்டணத்துத் தட்டான் மகனொருவனுளன்; அவன் சவுந்தரியத்திற் சிறந்தவனாகியும் தன்னைப்பார்த்த ஸ்திரீகளினறிவை மயக்கத்தக்கவனாயுமிருக்கின்றான். அவனும் நீயும் ஒன்றாய்க்கூடி யிருந்தால் என் கண்கள் பார்த் தானந்திக்குமென்றும், இன்று தீபம்வைக்கும் வேளையில் ஆடையாபரணாலங்கிருதளாகி என்னுடன் கூட வருவாயாகில் நான் அவனைக் காண்பிக்கிறேன். நீ அவனைப் பார்த்தவுடனே இப்போதுனக்குண்டாயிருக்கின்ற துக்கமெல்லாம் நிவர்த்தியாகுமென்று அவனழகைப்பற்றிப் பலவாறு வியந்துகூறி அவளிடத்தில் அவனுக்கு மோகமுண்டாகும்படிச் செய்தாள்.

இதைக்கேட்ட மந்திரி மனைவியானவள் அவனைப் பார்ப்பதற்கு முன்னமே அவனிடத்து மோகங்கொண்டு தீபம்வைக்கும் வேளையில் ஆடையாலங்கிருதமுடையவளாகித் தன்னுடைய தாதிசகிதமாய் அந்தத் தட்டான்மகன்கடைக்குச்சென்று அவனைப்பார்த்துத் தனக்கேற்ற வடிவழகனா யிருக்கக்கண்டு சற்றுநேரம் புத்திமயங்கித் தெளிந்து தன்னுடைய வடிவழகை அவன் காணும்படி சிறிதருகிற் சென்று காட்டித் தன்னைப்போலவனையும் தன்பேரில் மோகப்படும்படிச் செய்தாள். அத்தட்டான் மந்திரிமனைவியின் பேரழகைக் கண்டு தன்னுள் வியந்து நெடுநேரம் இமைகொட்டாது பார்த்திருக்கையில் மந்திரி மனைவி அவன்மேல் தான் விருப்பங்கொண்டிருப்பதாக ஜாடைசெய்து, அவ்விடத்திருந்த கண்ணாடியை யெடுத்துக்காண்பித்து அதில் கரியைத்தடவிக்காட்டி, அப்பால் மாதுளை இலையை அவ்விடத்திருந்த தண்ணீர்த் தொட்டியிற் போட்டு விடு சென்றாள். இவையெல்லாம் பார்த்துக்கொண்டிருந்த அத்தட்டான், அப்பெண்மணி தன் கட்பார்வையினின்றும் நீங்கியதற்காக மிகவுந் துக்கமடைந்து சுவாதீன சித்தமின்றி ஏக்கங்கொண்டு தட்டுத்தடுமாறி வீடுசென்று தன்னில் ஏதேதோ பேசிக்கொண்டிருந்தான். அந்தத்தட்டான் பெண்சாதி நுட்பமான புத்தியுடையவளானதால் தன் புருஷன் யாரோ ஒரு ஸ்திரீயைப்பார்த்து விரகமுற்றிருக்கிறானென்றறிந்து "என்னுடைய நாதரே! நீர் மனஞ்சோர்ந்திருப்பதற்கென்ன காரணம்" என்று வினயமாக வினவினாள்.

அதற்குத் தட்டான் ஓ என் இன்பநாயகியே! நேற்று சாயரக்ஷை ரதிமேகவிசலாஞ்செய்யத்தக்க பேரழகு வாய்ந்த ஓர் யௌவனமாது என் கடையருகில் வந்து நெடுநேரம் நின்று பலவித சைகைகள் செய்தாள். நான் அவளுடைய ஆடையாலங்கிருதங்களைக் கண்டு அச்சமுற்று அவளழகை உற்று நோக்கிக்கொண்டிருந்தேன். பின்பவள் ஒரு கண்ணாடியைக் காட்டி, கரியைப் பூசினாள். அதன்பின் தண்ணீர்த் தொட்டியிற் சில மாதுள விலையைப் போட்டு வீடுசென்றாள். என் கண்ணே! அதனால் என் உயிரு முடலுந் துடிக்கிறதென்றான்.

அதைக்கேட்ட தட்டாத்தி புன்னகைபுரிந்து இவ்வளவு அற்ப காரியங்களின் தாத்பரியம் தெரிந்துகொள்ளக்கூடாமலிருக்கிற நீர் இக்காரியத்தை எவ்வாறு சாதிக்கப்போகிறீர்! என்று சொல்லிப் பரிகசித்துச் சொல்லுகிறாள். "என் கண்ணாளரே! முதலில் கண்ணாடி காட்டியது பகலில் வீட்டைவந்து பார்க்கும்படியும், கரி தடவிக்காட்டியது இரவில் தன் வீட்டுக்கு வரும்படியும், தண்ணீர்த்தொட்டியில் மாதுளவிலையைப் போட்டது தன் வீட்டுக்கு முன்பாக ஒரு தெப்பக்குள மிருக்கிறதென்றும், அக் குளக்கரையில் ஒரு மாதுளமர மிருக்கிறதென்றும், அம்மரத்தினிலைகள் அக்குளத்துஜலத்தில் விழுந்திருக்குமென்றும் குறிப்பாற் காட்டியிருக்கின்றாள். ஆகையால் நீரெழுந்திருந்து அன்ன முண்டு அடைகாயருந்தி நறுமணந் திமிர்ந்து ஆடையாலங்காரத்துடன் மேற்சொன்னவிடஞ்சென்று அவ்வீட்டைக் கண்டுகொள்ளு மென்றாள். அதைக் கேட்ட சோமாசாரி என்பவன் மிகவுஞ் சந்தோஷப்பட்டு உயர்ந்த ஆடைதரித்து விரைந்துசென்று விசாரித்து அவ்வீட்டைக் கண்டுபிடித்தான். எனினும், அவ்வரண்மனை காவலோடுங்கூடியதாய் அந் நகரத் தரசனிட முள்ள பிரதான மந்திரியினரண்மனையெனத் தெரிந்து உட்செல்ல சாத்தியப்படாமைகண்டு வருந்தி மீண்டும் தன் மனைவியிடம் வந்து சங்கதி தெரிவித்தான்.

அதைக்கேட்ட சோமாசாரியின் மனைவி என் மணாளரே! நீர் அப்பெண்மணியின்மேற் கொண்டிருக்கு மோகத்தைப் பார்க்கினும் அவளும்மிடத்தில் பதின்மடங் கதிகமான மோகமுற் றிருக்கிறாளாதலால் நீர் அவள் வீட்டுக்கருகில் உட்கார்ந்திருந்தால் அவளின்றிரவு கட்டாயமாய் நீ ரிருக்குமிடந் தேடி வருவா ளென்றாள். தட்

டான் அவள் சொல்லைத் தட்டாதவனாய் அங்குசென்று அரண்ம
னைக் கெதிரிலிருந்த ஒருன்னத வீட்டுத் திண்ணைமேற்போய் நெடு
நேரம் உட்கார்ந்திருந்தான். அவ்விராஜவீதியில் ஜில்லென் றடித்த
காற்று இவன்மேற் படப்பட நித்திரைபோய்விட்டான்.

மந்திரிமனைவி அர்த்தராத்திரியில் தீபங்கொண்டுவந்து தேடிப்
பார்க்கையில் ஒரு மூலையில் தட்டார சோமாசாரி படுத்து நித்தி
ரைசெய்வதையும், அவன்முகம் கோடிசூர்யப்பிரகாசம்போல் ஜொ
லிப்பதையுங் கண்டு அருகிற்சென்று தனது கரத்தால் அவன் தேக
த்தைப் பரிசித்தும் எழுந்திராமையால் விசனாக்கிராந்தளாய் சில
வாதுமைக்கொட்டைகளை அவன் உடுத்தியிருந்த சட்டைக்குட்
போட்டு மனமறுகிச் சென்றாள்.

தட்டார சோமாசாரி நன்றாய்க் கும்பகர்ணஞ் செவித்துக்
காலை சுமார் ஐந்துமணிக்குவிழித்துக்கொண்டு மந்திரிமனைவி தன்
னை மோடனஞ் செய்தாளென் றெண்ணி வீடுதிரும்பி வந்துகொண்
டிருக்கையில் தன் சொக்காய்க்குட் கிடந்த வாதுமைக்கொட்டை
யைப்பார்த்து மிகவுஞ் சஞ்சலித்து ஒன்றும் விளங்காமல் வீட்டுக்
குவந்து தன் மனைவியிடத்தில் தான் நித்திரைபோய்விட்டதையும்
தன் சொக்காயில் வாதுமைக்கொட்டை யிருப்பதையும் கூறினான்.
அவன் மனைவி மிகவுங் கடுஞ்சினமடைந்து ஓ பயித்தியகாரரே!
நல்லுணர்ச்சியில்லாத உம்மைப்போன்றவர்க்கு மோகப்பித் தெற்
றுக் கென்று நகைசெய்தாள். அவன் உன்மத்தன்போன்றிருந்த
மையால் அவள் மனமிளகி ஐய, நேற்றிரவு நீர் சயனித்திருந்த விட
த்திற்கு அவள் வந்திருந்தபோது நீர் நித்திரை செய்திருந்ததனால்
குழந்தைபோலும் விளையாட்டுத்தன்மை யுள்ளவர்க்கு மோகப்பிர
மை யாதுக்கென்னும் பொருள்பட வாதுமைக்கொட்டையைச்
சேபியிலிட்டுச் சென்றா ளென்றாள். அதைக்கேட்ட தட்டார சோ
மாசாரி பெருமூச் செறிந்து கிலேசப்படுவதை யறிந்த அவன்
மனைவி 'நல்லது இன்றிரவும் போய் நித்திரைசெய்யாமல் ஜாக்கிர
தையாயிரும்' என்றனுப்பினாள். அங்ஙனமே அவ னவ்விடத்திற்
சென்று காத்திருந்தபோது நடுச்சாம வேளையில் மந்திரி மனைவி
யின் காரியானவள் காவல்கடந்து தந்திரமாகவந்து தட்டானைக்
கூட்டிக்கொண்டுபோய்த் தனது எஜமானியிடம் விட்டாள். அவள்
மதனைக்கண்ட மயிலேபோலுங் கூடிக் களித்து இருவரும் இன்ப
சாகரத்தில் அமிழ்ந்தினவர்களாய் நித்திரை போயினர்.

'கேடுவரும் பின்னே மதி கெட்டுவரும் முன்னே' என்றபடி இன்பமேலீட்டால் வாசற்கதவடையாமல் இருவரும் ஒருவர்மே லொருவர் காலிட்டுப்பள்ளியறையில் நித்திரைசெய்திருப்பதை அப் பட்டணத்துக் கொத்தவால், மந்திரிவீட்டு வழியாக நகர்சோதனை வரும்போது சண்டைமேற் போயிருக்கிற மந்திரி வீட்டுவாசற் கதவு திறந்திருக்கக்கண்டு திடுக்கிட்டு உள்ளே நுழைந்து பள்ளி யறைக்குச் சென்று பார்த்தபோது இருவரும் படுத்திருக்கும் அலங் கோல ரீதியைப் பார்த்து சகிக்கமாட்டாமல் ஓ ஓ! மந்திரிமனை வியே! என்று உரத்துக்கூவினான். அக்கூச்சலால் இருவரும் அலறி எழுந்தார்கள். மந்திரி மனைவி இனி என்செய்வதென்று பெருந் திகிற்பட்டு கொத்தவால் காலில்விழுந்து பதினாயிரம் வராகன்கொடு ப்பதாகவும் தன்செய்கையை வெளிப்படுத்தாமல் மன்னிக்கவேண்டு மென்றும் வேண்டிக்கொண்டாள். கொத்தவால் அதற் கொவ்வா மல் கண்சிவக்கக் கோபித்துத் தட்டானைப் பிடித்துப் பின்கட்டாகக் கட்டி மந்திரிமனைவி சகிதமாய் காவற்கூடத்துக் கனுப்பிவிட்டான். தட்டான் பெண்சாதியின் சாதுரியத்தையறிந்த மந்திரிமனைவி முன்னர்த் தன்னைத் தட்டானிடமழைத்துச் சென்ற அந்தரங்க நேசியாகிய தன் தாதியிடம் வெள்ளித் தாம்பாளமொன்றைக் கொண்டுபோய்த் தட்டான் வீட்டி லோசையுண்டாகப் போடும்ப டிச் சொல்லியனுப்பினாள்.

அவளவ்வாறே செய்ய, தட்டாத்தி திடுக்கிட் டெழுந்து தாம் பாளத்தைக் கண்டு ஓகோ மந்திரி மனைவியின் செய்கை ஊரார்க்கெ ல்லாம் பட்டப்பகலெனத் தெரிந்துபோயிற்றுபோலு மென்று கத வைத்திறந்துகொண்டு வெளியில்வந்து அந்தத் தாதியினிடத்திற் சென்று அவர்களிருவரும் இப்போதெவ்விடத்தி லிருக்கிறார்களெ ன்றுகேட்டுத் தெரிந்துகொண்டு சிறிதுநேரம் யோசித்துத் தன் வீட்டுக்குட்புகுந்து அப்போது ஆஜராயிருந்த கோதுமை மாவை யும் சர்க்கரையையும் நெய்யையும் சேர்த்துப் பலகாரம்பண்ணி அப் பலகாரத்தைத் தாம்பாளத்தில்வைத்து, சிறிது பொருளு மெடு த்துக்கொண்டு காவலறையை நோக்கிச் சென்று அங்குள்ள சேவ கரை யழைத்து ஐயன்மீர்! என்மேல் நேரிட்ட ஒருவித பொய்க் குற்றம் நிவர்த்தியானால் இவ்வூர்க் காளிக்குப் பலகாரம் நிவேதித்து அதனைக் காவளாளர்களாகிய உங்களுக்கு விநியோகிப்பதாகப் பிரா ர்த்தித்துக் கொண்டேன். அது சித்தியாயினமையின் உங்களுக்கு

அப் பலகாரங் கொடுக்கக் கொணர்ந்தேன். பெற்றுக்கொள்ளுங்க ளென்று அவர்களுக்குக் கொடுத்துக்கொண்டே போகையில் பலகாரம் ஆய்விட்டமையின் சிலருக்குப் பொருள் கொடுத்து சினேகித்துப் பாராக்களைக் கடந்து தனது நாயகனிருக்கும் சிறைச்சாலையுட் புகுந்து, மந்திரி மனைவியினிடம் தாம்பாளத்தைக் கொடுத்துத் தன்னைப்போல் வேஷந்தரித்து வீட்டுக் கேகும்படி யனுப்பினாள்.

மறுநாட் காலையில் அவ்வூரரசனும் அமைச்சரும் சேர்ந்திருக்குங் கொலுக்கூடத்துக்குக் கொத்தவால்சென்று பிரதம மந்திரியின் றேவியின் தீயநடத்தையை வெளிப்படுத்தினான். அதனை அரசன் முதலிய யாவரும் நம்பாமையால், கொத்தவால் 'சுவாமி! அவர்களிப்போது நமது காவற்கூடத்தி லிருக்கின்றார்கள்; தாங்கள் வந்து பார்த்து அடியேன் சொன்னபடி யில்லாவிடில் எனக்கு மரணதண்டனை விதியுமென்று உறுதியாகக்கூறினான். அதைக்கேட்ட அரசன் வியப்புற்று மந்திரிகளும் தானுமாகக் காவலறைக்குள்வந்து பார்க்கையில் தட்டானும் தட்டான்பெண்சாதியும் எழுந்திருந்து அரசனை நோக்கி நமஸ்கரித்துக் கைகட்டி 'நற்றவர் புகழும் சற்சன வரசே! துற்சனரோடத் தொடுக்கும்விற்கரத்தோய்! நானும் எனது மணாளனும் எங்களுடையவீட்டில் காற்றுக்காகத் தெருக்கதவைத் திறந்து படுத்திருந்தோம். என்னகாரணத்தாலோ இனைத்தெனத் தெரியேன். தங்களரசாக்ஷியிலுள்ள துஷ்டக்கொத்தவால் எங்களைக் கஷ்டப்படுத்திப் பிடித்தடித்துக் கட்டி காவற்படுத்தி யிருப்பதைக் கொட்டமடக்குங் கோமானாகிய தேவரீர் விசாரிக்கவேண்டுமென் றறைந்து நின்றாள்.

வீரவர்மனென்னும் சீர்பெறுமரசே! தட்டாத்தியின் மொழி கேட்டு அரசன் பரிதவித்துக் கொத்தவால் கூறியதற்கு மாறுபட்டமையால் அவன் முன் ஒப்புக்கொண்டபடி தூக்குத்தண்டனை விதித்துத் தட்டாத்திக்கும் அவள்புருஷனுக்கும் இன்மொழி கூறியனுப்பினான். அரசே! பெண்பிள்ளைகள் புருஷர்களுடைய உயிரைக் கொள்ளைகொள்ளும் யமனையொத்தவர் கண்டீர்! என்று மூன்றாவது மந்திரி கூறிமுடித்தான். உடனே வீரவர்மன் தன் னெதிரி லிருந்த மதனலீலாவதியின் உருவமெழுதிய படத்தைக் கையிலெடுத்துக்கொண்டா னானமையால் மந்திரியெழுந்து வீடுசென்றான்.

ஐந்தாவது மந்திரி சொல்லிய கதை:—ஞானாகரன் என்னும் ஐந்தாவது மந்திரியானவன் அரசனிடம் வந்து நமஸ்கரித்து அரசர் தலைய! நான் சொல்வதைக் கேட்டருளல் வேண்டுமென்று சொல்லத்தொடங்கினான்.

பங்கஜபுரி யென்னும் பட்டணத்தில் ஓரேழைக்குடியிற் பிறந்த குணாகர னென்னு மொருவன் வித்யாபாரங்கதனாய் எல்லா நன்னடக்கையு முடைத்தாயிருந்தான். அவனது கல்வித்தேற்றத்தால் கல்வி விருப்பமுடைய பல பெரியமனிதர் வீட்டுப் பிள்ளைகள் இவனுக்கு வேண்டும் பொருளளித்துக் கல்விகற்றுக்கொண்டிருந்தார்கள். இதல்லாமல் அவ்வூ ரதிகாரிகளும் இவனுடைய நன்னடையை நோக்கி வலிதில்வந்து சிநேகிக்கலாயினர்.

இப்போது குணாகரனுக்கு வயது முப்பதாகியும் இன்னும் விவாகஞ்செய்துகொள்ளாமல் பிரமசரியவிரத மனுஷ்டித்துவந்தான். ஒருநாள் அவனுடைய இஷ்டர்கள் ஒன்றுசேர்ந்து விவாகஞ் செய்துகொள்ளும்படி வேண்டிக்கொண்டார்கள். குணாகரன் தனது நண்பர்களுடைய இதமொழியைக் கேட்டு "நண்பீர்! 'நோய் கொண்டா லுங் கொளலாம் நாறுவாய தாமளவும், பேய்கொண்டா லுங்கொள லாம் பெண்கொள்ள லாகாதே!' என்னும் பாடலை அறிவுடையோ ரறைந்திருக்கின்றனர். ஏனெனில், பெண்களிற் பெரும்பாலும் நற்குணமும் நன்னடக்கையுமின்றி, பொய்யும் மோசக்கருத்தும், துரோக சிந்தையு முடையவர்களாய் கணவனுக்கு வரும்படி யுள்ளபோது அவனுடன் கூடிக்களித்து இன்ப நுகர்ந்து அவன் சொற்படி நடப்பதும், வருமானங் குறைந்தபோது புருஷன் மனத்திற்கு மாறுபட நடத்தலும், அவனை வஞ்சித்துத் தகாதசெய்கைக் குடன்படுதலும் ஆகிய இவைபோன்ற தீங்குணங்கள் ஸ்திரீகளுக்கு இயல்பி லமைந்த குணங்களா யிருத்தலால், அவருடனிருந்து இல்லற நடாத்தலினும் இரந்துண்டு கஷ்டப்படுதலே இனிதாகும். இவைகளெல்லாம் யோசித்தே பிரமசரியவிரதம் பூண்டுள்ளேன்" என்றான்.

அவனது நண்பர்கள் "ஐய! மனைவியில்லா வீடும், மக்களில்லாத செல்வமும் பாழ் எனப் பெரியோர்கள் கூறியிருக்கிறார்களே! அதற்கென்ன கதி? நீர் சொல்லியது சரி யெனினும், எல்லோரு மப்படி யிரார்கள். வானம் பொழிந்து பயிர்வளம்பெறுவதும், ஞானம் பாரில் நனிநிலைத்திருத்தலும், காலக்கிரமப்படி சூரியன்காய்வதும், சந்திரன்

றவிழ்வதூர் மற்றைக் காரியங்கள் நடை பெறுவதூர் பதிவிரதா ஸ்தீ ரத்தினங்கள் இல்லாவிடி லிருப்பதனுமில்லையே யன்றி வேறன்று. ஆக வே நாங்க ளெல்லோரும் களிக்குமாறு சற்குலத்துதித்த ஓர் மங்கை யை நீர் கடிமணஞ்செய்துகொள்ளவேண்டும்'' என்றுபக்ஷமோடு கூறி னார்கள். சிநேகிதர்கள் கருத்திற்குக் குணாகரன் சம்மதித்தான். பின் னர் மந்திரிகளும், நண்பர்களுமாகவிருந்து மன்னன் பெண் விசாரித் தல் முறையாக கல்வியும் அழகு முடைய கோமளாங்கி என்னும் பெயரிய ஒரு பெண்ணைப் பேசி நிச்சயதார்த்தம் செய்து நல்ல சுப வேளையில் மங்கலவாத்தியங்கள் முழங்க, மிக விமரிசையாய் விவா கம் நடப்பித்தனர். பின்னர்ப் புருஷனு மனைவியும் அன்றிலும் பேடு மெனக் கூடி வாழ்ந்திருந்தார்கள்.

ஒருநாள் வெளியூரிலிருந்து குணாகரன் விலாசத்திற்கு ஒரு கடி தம் வந்தது. அதில் எழுதியிருந்ததை அடியிற் கூறுகிறோம்.

கொல்லாபுரம்.
1872௵ மாசி௴ 4௳.

ம-ா-ா-ஸ்ரீ, நனிகனம்பொருந்திய பிரசங்கரத்நாகரம்,
குணாகரமுதலியார் அவர்கள் திவ்ய சமுகத்தினுக்கு:—
க்ஷேமம்; க்ஷேமத்திற் கெதிர்பார்க்கிறேன்.

1872௵ மாசி௴ 6௳ நமது வீதியில் திருக்கோயில்கொண் டெழுந்தருளியிருக்கும் விநாயகர் சந்நிதியில் சிவாதிக்யம் என்னும் விஷயத்தைத் தங்களால் பிரசங்கிக்கப்படப்போவதாகப் பிரகடனஞ்செய்திருப்பதனால் நாங்கள் தயைசெய்துவந்து தக்க சமயமா ஆநந்தமார்க்க சைவத்தைப் பிரஜைகள் களிக்க உபதேசித்து என்னை ஆநந்திக்கச் செய்வீர்களென்று கோருகிறேன்.

இப்படிக்கு:
தங்கள் சிஷ்யன்.
நஞ்சுண்டமுதலியார்.

என் றெழுதியிருந்ததை வாசித்த குணாகரன் தன் மனைவியிடந் தெரிவித்து அவளுடைய உத்தரவுபெற்று மறுநா ளுதயத்தில் புகைவண்டி யிலேறிக் கொல்லாபுரத்தைக் குறுகினான்.

குணாகரன் மனைவியாகிய கோமளாங்கி கணவனிடத்தில் அத் யந்த பிரீதியுள்ளவள்; தன்கணவனையன்றிச் சித்திரமெழுதிய படத் தையும் பாராத பதிவிரதையாதலால் வெளியூர்சென்ற அவனது கொழு

னது பிரசங்ககாருட்டியத்தையும் ஆழ்ந்த கருத்துடைய சொற்சாதுரியத்தையும் கேட்டுப் புத்திமான்கள் வியந்து பற்பல விஷயங்களைக் குறித்துப் பிரசங்கம் செய்யும்படி வைத்துச் சிரவணித் தானந்தித்து குணகரனை அவனூர் செல்லவிடற்கு மனமின்றி ஆதரித்து வந்தார்கள். இவனிங் கிப்படியிருக்க.

ஒருநாள் குணகரனுடைய நண்பன் அவனைக் காணும்படி வீட்டண்டை வந்தபோது, குணகரனுடைய மனைவியாகிய கோமளாங்கி எதிர்ப்பட்டாள். அவளது பேரழகையும் அன்னநடையையுங்கண்ட அவ்வாலிபன் காமமென்னுங் கனலில் மூழ்கி சித்திரப்பிரதிமை போல் அப்பெண்மணிமேல் வைத்தகண் ணசையாமல் தன்னை மறந்து பின்னர்த் தெளிந்து பார்த்தபோது தன் கண்முன் தோன்றிய காரிகையைக் காணமல் வருந்தி எப்படியேனும் அவள் கையைப் பிடித்து இதழ் கடித்துச் சுவைக்கவேண்டும்; கிட்டாதாயின் நம்முயிரை மடித்தல்வேண்டுமென்று தீர்மானித்து வீடுசென்று ஒருவர்க்கொருவரை சிநேகஞ்செய்வித்தலில்வல்ல ஓர் வயதுசென்றகிழவியிடத்தில் தான் காதல்கொண்டதையும் அவள்வாழும் வீட்டையும் தெரிவித்துத் தங்களிருவர்க்கும் நேசஞ்செய்வித்தால் நூறுவராகன்கொடுப்பதாய்க் கூறினான். அக்கிழவி, தனக்குப் பெருந்தொகை கிடைப்பதை யெண்ணி மகிழ்ந்து முறிந்தோடும் விமானத்துக்குப் பறந்தோடி ஒட்டிப்போடுகிறசக்தியுண்டென்றும், ஒருவரோடொருவரைக் கூட்டிவைக்குந் தொழிலிற் பிரவேசித்துப் பேசிப் பேசித் தன்னுடைய தலைமயிர் வெளுத்துப்போயிற்றென்றும், லட்சாதிலட்சம்பேருடைய அந்தரங்கத்தை நிறைவேற்றிக் கொடுத்ததாயும், அநேகங்கோடி பெண்களுடைய கர்ப்பக்கருவைக் கெடுத்திருப்பதாயும், கடவுள் தன்னை இதற்காகவே சிருஷ்டித்தாரென்றும், கோமளாங்கி தன்னுடைய தந்திரவார்த்தையினின்றும் ஒருக்காலும் தப்பிப் போகாளென்றும் தன் சார்த்தெல்லாம காமவிகாரங்கொண்ட அவ்வாலிபனிடங் கூறினள். அவன் ஆ வென்று வாயைப் பிளந்துகொண்டு கேட்டு 'பாட்டீ! சீக்கிரம் காரியம் கைகூடவேண்டும். இதோ இருபத்துவராகனை வைத்துக்கொள்' என்று கொடுத்தான். குடிகேடியாகிய அக்கிழவி அதைப் பெற்றுக்கொண்டு சென்றாள்.

அக்கிழவி மறுநா ளுதயத்தி லெழுந்து கோமளாங்கி வீட்டைக் குறுகி அவளைக் கண்டு 'ஹா பெண்களுக் கரசே! எழில்வதனி!

உன்போலும் அழகுடைய பெண்ணை இதுவரையிற் கண்டிலேன்! ஆனால் உன்னிலும் மீசூரப்பட்ட அழகுடைய புருஷனைக் கண்டிருக்கிறேன். அவன் இவ்வூரி லிருப்பவன்தான். அது போகட்டும். இக்காலத்தில் புருஷர்க்கேற்ற பெண்ணும், பெண்ணுக்கேற்ற புருஷனும் அமைகிறதில்லை. என் கண்ணே! உன்பேர்தானே கோமளாங்கி? என்றாள். சிறிதும் கபடறியாத அப்பெண் 'ஆமாம் பாட்டி' என்றாள். ஐயோ! நின் புருஷன் கொல்லாபுரஞ் சென்று அங்கோர் கூத்தியாளை வைத்துக்கொண் டிருப்பதாகவும் உன் புருஷனுடைய சிநேகர் பேசிக்கொண் டிருக்கையில் கேள்விப்பட்டேன். அன்னமே! இந்திராணியினும் மிக்க எழிலுடைய என் மகளே! உன்னைப் பார்க்கும் போதே எனக்குந் துக்கமுண்டாகிறது. ஆண்பிள்ளைகள் எப்போதும் சலசித்தமுடையவர்கள். மனைவியை வஞ்சித்து மற்றொருத்தியைமருவி மகிழும் பாதகர். ஆ ஆ! சீசீ கொடிது கொடிது! கோமளாங்கி! நீயானதனால் இதுவரையிற் பொறுத்திருந்தாய்; நானானால் என் கண்ணுக்கிசைந்தவனை மருவி அவன் வாயில் மண்ணைத் தெள்ளிப் போட்டுவிடுவேன் என்று கிழவி சொல்லிக்கொண்டிருக்கையில், அவள் சொல்லியவெல்லாம் உண்மையென்று நம்பிய கோமளாங்கி கண்ணீர்விட்டுக் கோவென்றழுது கிழவி கழுத்தைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டாள். கிழவி வந்தகாரியம் முக்காற்பங்கு அனுகூலமாயிற்றென்று மகிழ்ந்து தானும் அவளோடு நீலியழுகையழுது 'மகளே! அவன் கெட்டான் முண்டம்! தேவடியாள் வலையிற் சிக்கியவன் மீண்டுந் திரும்புவதேது? இனி உன் புருஷன்மேல் வைத்துள்ள ஆசையை அறவொழித்துவிடு. மகளே உன்னையொன்று கேட்கிறேன்; தெரிந்திருந்தாற்சொல். அதாவது, இவ்வீதியி லுள்ள செல்வந்தர்வீட்டுப் பிள்ளையாகிய ஞானசுந்தர னென்னும் பேரழகினையுடைய வாலிபனை நீ கண்டிருக்கிறாயா வென்றாள். கோமளாங்கி தனக்குத் தெரியாதென்று தலையசைத்துவிட்டாள். அந்த ஞானசுந்தரனன்றோ உனக்கேற்ற மணவாளன்! அவனன்றோ நின் தோளுக்கிசைந்தவன். நீ அவனைக் கண்டாயானால் கட்டிக்கழுவி முத்தமிடுவாயென்று அவனைப்பற்றி அளவுகடந்து புகழ்ந்தாள். இதைக்கேட்ட கோமளாங்கி பதிலொன்றுங் கூறாதிருந்துவிட்டாள்.

அக்கிழவி, மறுநாட் காலை சுமார் பதினொருமணிக்குத் தன்னுடன்கூட ஞானசுந்தரனையழைத்துக்கொண்டுவந்து கோமளாங்கி

வீட்டில் நுழைந்து ஓரறைக்கதவைத்திறந்து அவ்வீட்டில் அவனை யிருக்கச்செய்து கோமளாங்கியைக்கண்டு மெல்ல அவளை யழைத்துக்கொண்டு வந்து ஞானசுந்தரமிருக்கும் அறைக்குட் சென்று அறைக்கதவைச் சாற்றி, "மகளே! இச் சுந்தரபுருஷனைப் பார்! உன் சிறுவயதில் நீ தனியே படுத்து வருந்துவதைக் கண்டு என் மனம்பொறுமல் எவ்வளவோ கஷ்டப்பட்டுவருந்தி இச்சீமானைக்கொணர்ந்தேன். இவன்தான் உனக்கேற்ற புருஷன் என்று கூற, கோமளாங்கி தலை குனிந்து நின்றிருந்தாள். கிழவி மகளே! இவர் உனக்குக் கிடைக்கத் தக்கவரன்று என்று ஞானசுந்தரத்தின் வலதுகையைப்பற்றி யெடுத்து கோமளாங்கியின் தோண்மேற் சேர்த்தாள். அவ்வாறு சேர்த்த அவன்கை கோமளாங்கியின் குஜத்திற்பட அவள் அவனை இறுகத் தழுவிப் பிடித்தாள். அதையறிந்த கிழவி மெல்ல நகர்ந்து வெளியில் வந்து அறைக்கதவைச் சாற்றித்தாளிட்டாள்.

"வலிய வந்த சுகம்போல" என்று பஞ்சரத்னத் திருப்புகழிற் கூறப்பட்டிருப்பதுபோல அப்போது ஞானசுந்தர மனுபவித்த சுகத்துக்கு எச்சுகமும் ஈடல்ல. பின்னர் இருவரும் மதனு மிரதியுமெனக் கூடிக் களித்தனர். அதுமுதல் ஒருவரையொருவர் விட்டுப் பிரியாவண்ணம் சுமார் இரண்டுமாதம்வரை கூடிக் களித்தார். பின்பு வெளிச்சென்ற கோமளாங்கியின் கொழுநன் வீடுவந்துசேர்ந்தான். புருஷன் வருகிறானென்பதைக் கடிதமூலமா யறிந்ததுமுதல் கோமளாங்கி மனச்சோர் வடைந்து லீலாவிநோதங்கள் செய்யும் தன் சோரநாயகனை இனித் துறக்கவந்ததே யென்று வருந்தி பெருநோயிற் பிணிப்புண்டு பாயிற் படுத்தபடிக் கிடைந்தாள். தன் புருஷனிடம் ஒரு வார்த்தையாவது பேசிலள். துணைகரனுக்குத் தன் மனைவியின், செய்கை விபரீதமாகத்தோற்றியதெனினும், அவள் அவ்வாறு தன்னுடன் வார்த்தையாடாதிருத்தற்குக் காரணம் தான் நெடுநாள்வரை அவளைத் தனித்திருத்திச் சென்றதும், தேகம் குணமில்லாமையுமேயாமென்று அவன் தன் மனைவியிடம் வலிந்து வார்த்தையாடினும் கோமளாங்கி சரியாய் பதின்மொழி யுரையாதிருந்தாள்.

இங்ஙன மிருக்குநாளி லோர்நாள் கோமளாங்கி தன் கணவனை யழைத்துவரும்படி வேலைக்காரியை யனுப்பினாள். சிறிதுநேரத்திற் கெல்லாம் அவன் தன்மனைவியிடம் வந்து, "கோமளம்! இன்றுதான் உனக்கு என்மேற் றயவுவந்ததுபோலுமென்று அவளருகிற்போ யுட்

கார்ந்து பெண்ணே! உன்னை நான் கடிமணம்புரிந்தபின் என்மீது நீ வைத்திருந்த அன்பையும், யான் பத்தினிசெய்துவந்ததின் என்னுடன் நீ வார்த்தையாடிய அருமையுந் திருப்பமையும் நினைந்து போது என்னையறியாமலே எனக்கு விசனமுண்டாகிறது. நீ என்னிடம் பேசாதிருக்க உனக்கு யான்செய்த கொடுமை யென்னவென்று துணைகான் கேட்கும்போது அவன் கண்களினின்றும் இரண்டு நீர்த்துளிகள் தோன்றி ஒன்றையொன்று பற்றுவதுபோது பொழுகின.

அவன் கண்களில் நீர்த்தாரை ஒழுகுவதைக்கண்டும் அக்கொடும்பாவி மனமிளகாமல் வெகு பரிவுள்ளவள்போல அடியில் வருமாறு கூறலானாள்.

என் கண்ணாளரே! ஏனழுகிறீர்? உம்முடைய பிரேமைபாக்கியையால் உண்டான விபத்துதானே இது! நாளைக்கோ இன்றைக்கோ இன்னும் சற்றுநேரத்திலேயோ இறக்குந்தறுவாயிலிருக்கும் எனது சிநேகம் தங்களுக் கென்னத்திற்கு? என் துரையே! தங்களை யொன்று கேட்டுக்கொள்ளுகிறேன். என் வாக்கைத் தட்டாதிருங்கள். அதாவது, "நான் இறந்தபின் என்மேல் யாரும் விழுந் தழாமலும், என்மேற் சலம்விட்டுக் கழுவாமலும் சீக்கிரமாக நீங்களும், நமது வீட்டுவேலைக்காரியுமாகத் தூக்கிப் பாடையில் வளர்த்தி சுடலை சென்றபின் பெருந்தீக்கிரையாக்கும் தகனக்கிரியை நடத்தாமலும், மிக ஆழ வெட்டிய குழியிற் புதையாமலும் சீக்கிரந் தோண்டிப் புதைத்து விடும்படி கோருகிறேன்" என்று அவள் சொல்லிக்கொண்டிருக்கையில் துணைகான் தேம்பித்தேம்பிக் கண்ணீர்விட் டழுதான். அவன் எவ்வளவு பொருமி யழுதும் கோமளாங்கி யுள்ளம் கொஞ்சமேனுங் கரையவில்லை.

அரசே! ஒரு ஸ்திரீயின் மனவன்மையைக் கண்டீர்! பின்னர்க் கோமளாங்கி தன் வீட்டு வேலைக்காரிக்குச் சிறு பொருள் தந்துக் கைவசப்படுத்திக்கொண்டு தான் இறந்த பாவனையாகக் கண் மூடியிருப்பதாகவும் அதற்கிசைவாக யாவருந் தன்னைப் புதைக்கும்படி செய்து சீக்கிரம் சுடலைக்கனுப்பிப்புதைத்தானபின் தன் சோரநாயகனிடஞ்சென்று மண்ணைத் தோண்டித் தன்னை யழைத்தேகும்படி சொல்லிச்சொல்லித் தயார்செய்துவைத்தாள்.

ஒருநாள் இரண்டுநாள் மூன்றுநாளுமாயின. கோமளாங்கி வேலைக்காரிக்குச் சைகைசெய்துவிட்டு இறந்த பாவனையாகக் கண்ணை

ருபு புர்சாடக்கினாள். சிறிதுநேரத்திற்கெல்லாம் அழுகுரல் உண்டாயிற்று. குணாகரன் தன்மனைவி தன்னிடம் சொன்னவண்ணமே அநிஜாக்கிரதையாக விருந்து விரைவிற் சவத்தை யெடுப்பித்துக்கொண்டு காட்டிலே சென்று சிறிதாழந்தோண்டிப் புதைத்துப்போயினான்.

அன்றிரவு கோமளாங்கியின் சோரபுருஷன் வந்து மண்ணைத் தோண்டி கோமளாங்கியின் கையைப்பிடித்துத் தூக்கி அவள்மேற் பட்டிருந்துள்ள மண்ணைத் துடைத்து பார்போடணைந்து முத்தமிட்டுச் சபாஷ்! நீயன்றோ பெண்ணென்னும் பேருக்குடையவள் என்றுவியந்து கூறி இருவரும் கைகோர்ந்துக்கொண்டு வேற்றூர் சென்றனர்.

குணாகரனோ தனக்கு அத்யந்தபிரியளாகிய மனைவி தன்னாலே யே இறந்தாளென்று மிக்க விசனமுற்று எந்நேரமும அவளுடைய சமாதியருகிற்போ யுட்கார்ந்து அவள் தந்த இன்பத்தை யெண்ணி யெண்ணி யேங்கியிருந்தான்.

இங்ஙனமிருக்கையில் ஓர்நாள் வளையல்விற்கு மொருவன் குணாகரனிடம் விரைந்துவந்து 'குணாகா! நேற்றையதினம் நான் உனது மனைவியைக் கண்டேன். நீ அதைப்பற்றி ஆச்சரியப்படாமல் இப்போதே என்னுடன் கூடவருவாயாயின் உன் கையிற் பிடித்துத் தருகிறேனென்று அழைத்தான். அதற்குக் குணாகரன் 'ஐய! உமக்கென்ன பயித்தியமோ! என் மனைவி யிறந்து எட்டுமாத மாயிற்றே! இப்போ தெங்கோவந்து நட்டுக்கொண்டிருக்கிறா ளென்கின்றீரே! என் மனைவிபோலும் சாயலுடைய வேறொரு மங்கையை நீர் பார்த்திருக்கலாம்; அவளென் மனைவியாகா ளென்றான். அதற்கு வளையற்காரன் 'என் கண்ணிற் கண்டது உன்மனைவியேயாம்' என்று உறுதியாகக் கூறவே குணாகரன் அவளைக் காண்பேனென் றவனுடன் சேர்ந்து நடந்தான்.

அன்று பொழுதுபோந்தனையும் நடந்து மறுநாள் சாயரக்ஷை சோரபுரியை நணுகி ஓர் வீட்டினுள் இருவரும் நுழைந்தார்கள். ஹா! அவ்வீட்டிலிருந்த கூடத்தில் புதிய கோரைப்பாய்மீதில் கோமளாங்கியும், ஞானசுந்தரரும் எதிரெதிருட்கார்ந்திருக்கக்கண்டான். அப்போது குணாகரனுடைய மனம் இன்னவிதமா யிருந்ததென்றெவ்வால் எடுத்துச்சொல்ல முடியாது. துடித்தான். பதைத்தான். ஓடினான். கூடத்திலுட்கார்ந்திருந்த தன் சிநேகனை இடுப்பி லெட்டியுதைத்துத் தன்மனைவி கையைப்பிடித்துத் தெருவில்வந்து அடி கள்ளீ!

காதகி! என்றுரைத்தான். கோபமாங்கி ‘ஐயையோ பிரஜைகாள்! இவனோ ஒரு அன்னியனிதோ என்னைப்பிடித்திழுக்கிறான்பாருங்க’ ளென்றுகூக்குரலிட, துர்ப்புகழுற்று. இதற்குள்ளாக இராஜசேவகர்கள் வந்து யூவனையும் அழைத்துக்கொண்டுபோய் அதிகாரி முன்விட அவர்களை விசாரித்து உண்மை தெரிந்து இப்படிப்பட்ட பெண்ணை உயிரோடு உலகத்தில் வைத்தால் நாசமாகுமென்று கோபமாங்கிக்குத் தூக்குத்தண்டனையும், ஞானசுந்தரத்துக்கு ஆயுள்பரியந்தம் தீவாந்தரசிக்ஷையும் விதித்தார். அரசே! பெண்களுடைய குணங்கள் இவ்வாறிருத்தலால் அவர்கள்மேல் ஆசைவைத்து மயங்கலாகாதென்றுகூறி அரசனிடம் விடைபெற்றுச் சென்றான்.

---

❧ ஆருவது மந்திரி சொல்லிய கதை:—ஜெகத்பிரசித்தன் என்னும் அறிவிற்சிறந்த மந்திரியானவன் அரசனிடம் வந்து ‘பெண்ணை நம்பாதே, பெருமை யிழவாதே’ என்னும் பழமொழியொன்றிருத்தலால் அதைப்பற்றியோர் கதைகூற விரும்பி வந்தேனென்று சொல்லத்தொடங்கினன்.

“பெண்ணை நம்புவது பிசகு” என்கிறார்களே அதேன்? அவர்கள் அறியாமை யென்பதையே ஓர் ஆபரணமாக அணிந்திருக்கிறார்களாதலால் அவ்வாறு யாவரும் கூறநேர்ந்ததாகத் தெரிகிறது. அழகிய சட்டிப்பானையை அவர்கள் பார்த்துவிட்டால் அதை விட்டு அப்புறம் இப்புறம் நகரமாட்டார்கள். ஏனெனின், அந்தச் சட்டிப்பானைகளில் அவர்களுக்கு அவ்வளவு பிரீதியுண்டாய்விடும். எவளேனும் ஓர் பெண் கொஞ்சம் அதிக நகைகள் பூண்டு தெருவழியாக நடந்தால் அவளை நெடுநேரம் இமை கொட்டாமல் பார்ப்பார்கள். பின்பு நமது புருஷன் இவ்வகைய நகைகளெல்லாம் நமக்குச்செய்துபோடவில்லையே! அவன்கெட்டான் என்று உள்ளுக்குள்ளே அச்சமையம் கொழுநனை அவமதிப்பாக நினைத்துவிடுவர். அதோடு விடாமல், அன்றிரவு கணவனுடன் சயனிக்கிறபோது, பக்கியானவள் நகைகள் பூண்டு நடுத்தெருவில் நடந்தவளுடைய பெருமைகளை எடுத்துக்கூறி அப்படிநகைகள் தனக்குச் செய்துபோட வேண்டுமென்று பல்லைக்காட்டிக் கெஞ்சிக் கொஞ்சுவர். அழுவர். கோபித்துக் கொள்வர், சிறிது எட்டப்படுப்பர். இன்னும் இதைப்போன்ற அநந்தகோரங்களெல்லாம் செய்வர். மல்லிகையைக் கண்டால் இச்சிப்பர். மகராசியைக்கண்டால் வெட்கப்படுவர். இத்தகைய ஆபாசமிகுந்த குண

ங்களெல்லாம் பெரும்பாலும் பெண்களிடத்தில் குடிகொண்டிருப்பதால் அவர்களுடைய மனம் உடனுக்குடன் வேறுபட்டுத் தகாத செய்கைகளுக்கு உடன்படுகிறார்கள். அஃது எவ்வாறென்னில்,

சோழவளநாட்டிலே குலோத்துங்க சோழனென்னும் பெயரிய அரசன் அரசாண்டுகொண்டிருந்தான். அவன் நாள்தோறும் இரவில் மாறுவேடம் பூட்டு நகர்சோதனைவருகிற வழக்கம்போல் ஒருநாள் நகர்சோதனை வருகையில், தன் அரண்மனை உத்தியோகஸ்தனாகிய ஒருவனுடையவீட்டில் அம்மாடீ என்னுஞ் சத்த முண்டாயிற்று. இதைக் கேட்ட அரசன் அச்சத்தத்தின் விவரத்தை அறியவேண்டி அங்கேயே நின்றுகொண்டிருக்க, சற்றுநேரத்திற்கெல்லாம் "அவ்வீட்டுக்காரன் மனைவி புறக்கடைக்குப்போனபோது கொல்லையிலிருந்த தென்னமரத்தின்மீது ஒருகாகம் இருந்து அந்த இருட்டில் ஆள்நிழலைக்கண்டு மருண்டு கர் என்று சத்தம் செய்யவும், அதற்கு அவள் மிகவும் பயந்தோடிவந்து தனது நாயகனைக் கட்டித் தழுவிக் கொண்டதாகவும் தெரிந்துகொண்ட அரசன் 'காகம் கர் என்றால் ஆம்படையானை அப்பாடாவென்று கட்டிக்கொள்வாள்' என்னும் பழமொழிக்கு ஒக்கவிருக்கிறதே இவள் செய்கை. ஆ! ஆ!! பெண்களின் மனம் இவ்வளவு பேதமை யுடையதா? இச் சிறிய தொனிக்குப் பயப்படும்படியான அச்சம் பெண்களிடத்தி லிருக்கிறதல்லவா! பெண்கள் மிகவும் இளகிய மனதையுடையவர்கள். இவர்களுக்குத் தைரியபலம் புருஷர்களால்தான் கிடைக்கவேண்டும் போலும்! இல்லையானால் மங்கையர் வாழ்வு கேவலமாமென்பதற் கையமென்ன? இதனால்தான் பெண்களுக்குத் தங் கணவரே தெய்வமென்று அநுபோகிகளெல்லாம் அறைந்திருக்கின்றனர்போலும் எனப் பலவாறு தன்னுள்ளே யோசித்துக்கொண்டு இன்னம் என்ன நடக்கிறது பார்க்கலாமென அவ்வீட்டின் பக்கத்திலேயே ஒளிந்து இமைகொட்டாமல் பார்த்துக்கொண்டிருந்தான்.

"மீன்பதத்தைக்கண்டாலும் மின்னார்மனதைக் காண்பதரிது" என்றபடி, புருஷன் பக்கத்தில் படுத்துக்கொண்டிருந்த அந்த ஸ்திரீ சுமார் பதினொருமணிக்கு எழுந்திருந்து கணவன் நல்ல நித்திரையிலிருக்கிறானென் றறிந்து தான் பொழுதோடு சேகரித்துவைத்திருந்த சில பண்டு பலகாராதிகளோடு பயணமாய்ப் புறக்கடைக்கதவைத் திறந்து வெளிப்பட்டு அன்றிருந்த பேரிருளுக்கும் அஞ்சாதவளாய்

வரப்புக்கொல்லையின் வழிபிடித்து நடந்தனள். அரசனும் அவள்பின் தொடர்ந்தான். அவள் அவ்வாறு நடந்து செல்கையில் சப்தமேகங் களும் ஒன்றாகூடி பெருமழை சொரிந்தன. 'முட்டநனைந்தவட் கீர மில்லை. முக்காட்டுக்காரிக்குத் துக்கமில்லை' என்னும் பழமொழிப் படி. அவள் அதற்குச் சிறிதும் அஞ்சாமல் நடந்து அங்கிருந்த ஓர் சுடலையுட் சென்றனள். அப்போது வருஷித்த மழையினால் அம் மயானத்திற் கருகிலுள்ள ஓர் ஓடையில் வெள்ளப்பிரவாக மதிகரித் திருந்ததை அவள்கண்டு மிகவும் துக்கித்துச் சிவசிவ ! இன்று இவ் வாற்றை எவ்வாறு கடப்பதென்று எண்ணிச் சுற்றுமுற்றும் பார்த் தாள். இவளுக்கு ஒரு ஆதாரவும் காணப்படவில்லை.

“சாகத் துணிந்தவர்க்குச் சமுத்திரம் முழங்காலளவு” என்ப தோர் பழமொழியன்றோ ? இதற்கொப்ப, அப்பெண் தன் உயிர்போ யினும் போகுக வென்று துணிந்து மனந்தேறி அச் சுடுகாட்டில் அன்று மாலைதான் கொண்டுவந்துவைத்துத் தீமூட்டிய ஒரு பிணம் மழையினால் பாதி வெந்ததும் வேகாததுமா யிருந்ததைக் கண்டு அதை இழுத்துக்கொண்டுபோய் அந் நீரோடையில் மிதவைபோல் மிதக்கவிட்டு அதன்மேல் அவளேறிக்கொண்டு கையால் ஜலத்தைத் துழாவிக்கொண்டே அக்கரைபோய்ச் சேர்ந்தாள்.

இவள் நடத்தை முழுதுங் கண்டறியவேண்டுமென்று அரச னும் மழையில் நனைந்து தட்டுத் தடுமாறி வெகு சமர்த்தாய் அவ் வோடையைக் கடந்துசென்று ஒருமூலையில் பதுங்கிக்கொண்டிருந் தான். ஆற்றைக் கடந்து கொஞ்சதூரம் போகவும், அங்கொரு சிறு குடிசையில் ஓர் பெருவியாதியஸ்தனாகிய முடவ னிருந்தான். இம் மங்கை அவனிடம் வெகு ஆவலாகச் சென்று, ஹா ! என் துரையே ! இன்று நான் ஓடையி லிறந்திருந்தால், மன்மதன் சவுந்தரியத் தக்க நின் வடிவழகை நான் கண்டிருக்க முடியுமோ ? என் தேனே ! கற்கண்டே ! என்று அவனைத் தழுவி நெடுநேரம் விடாமற் பிடித்தி ருந்து என் இன்பரசப்பாகே என்று தழுவியகைகளையெடுத்துத் தான் கொண்டுசென்ற பல்கார வகைகளைக் கொடுத்துக் கூடிக் குலாவ, முடவன், 'பெண்ணே ! இந்தப் பேரிருட்டிலும் பெரு மழையிலும் ஏன் வந்தாய் ? நாளைக்கு வருவதுதானே, என்று வினவினான்.

“ரங்கு நேர்ச்சின முண்ட பொங்க நேரதா” என்று தெலுங் கில் ஓர் பழமொழி வழங்குகின்றது. அதுபோல் அந்தப் பெண் ஆ

நாயகர்! நல்லவேலைசெய்தீர்! நீர் இங்கே பசியோடு தனிமையா யிருக்க நான் எனதுவீட்டில் சுகமா யிருக்கிறதா? என் பிராணன்போனாலென்னவோ சொல்ல மாட்டேன்; என் உயிருள்ளளவும் ஒருநாளிரவேனும் என் இன்பரசப்பாகாகிய உம்மைக்காணாமலிருக்க என் மனம் இணங்குமோ? ஒருக்காலு மிணங்கா தென்று அம் மூடவன் கன்னத்தில் முத்தமிட்டுப் பல இன்பமொழிகள் புகன்று உபசரித்துக்கொண்டிருந்து விடிய இரண்டு நாழிகைக்குமுன் னெழுந்து மூடவனிடம் செலவுபெற்றுக்கொண்டு வீடு திரும்பினாள்.

அரசே! முன்னே சொன்ன ஓடையில் ஜலம் கொஞ்சம் வடிந்தது. அவள் ஜலத்தில் இறங்கி நடந்து விடலாமென்று துணிந்து ஒரு காலைத் தூக்கி ஜலத்தில் வைத்தாள். அப்போ ததிலிருந்த முதலை இவள் ஒருகாலைக்கௌவிக்கொண்டது. உடனே தைரியசாலியாகிய அப்பெண் மற்றொருகாலைத் தூக்கி வெகு வேகமாய் முதலையின் கன்னத்திற்படும்படி ஓர் உதை யுதைத்தாள். அவள் காலிலணிந்திருந்த பாதகொலுசு முதலையின் கன்னத்தில் சுரீலென்றுதாக்கவே வலியெடுத்து முதலை ஆவென்று வாயைத் திறந்தது. உடனே அம்மாது காலை வாங்கிக்கொண்டு ஓடையைக்கடந்து துரிதமாய் நடந்து வீடு வந்து பழயபடி தன் புருஷன் பக்கத்தில் படுத்துக்கொண் டுறங்கினாள்.

இச் சோரவதிசயத்தை மிகப் பிரயாசத்தோடு அப்பெண்ணுடன் சென்றுகண்ட அரசன் தனது அரண்மனைபோய்ச்சேர்ந்து இதே கவலையாய் மறுநாளுதயத்தில் தனது நீதி சபைக்கு வந்தவுடனே, வித்வரத்நங்களும் மந்திரிகளும், பெரியமனிதர்களும் நிறைந்திருக்கும் அச் சபையில் தானே இவ்விஷயத்தை எடுத்துச் சொன்னால் நம்பிக்கையற்ற சங்கதியாய் விடுமென் றெண்ணி, தனது சமஸ்தானவித்வானாகிய கம்பரை நோக்கி, ஏ புலவர்பெருமானே! இன்றிரவு ஏதாவது அதிசயசங்கதி நடந்திருந்தால் அதைக் கண்ட சுத்தியாகப் பாடுமொன்று கேட்க, கவிச்சக்கிரவர்த்தி யாகிய கம்பர்,

[“ கரண்டகண் டத்தொனிக் கஞ்சிய மான்பருங் கங்குலிலே
திரண்டவெள் ளத்திற் பிணமீது சென்றங்கு சேர்ந்தவனை

என்னுங் கட்டளைக்கலித்துறையிற் பாதியைப்பாடி விட்டுவைத்தார். அதன் மறுபாதியையும் கண்டசுத்தியால் பூர்த்தி செய்யும்பொருட்டு கம்பர் குமாரராகிய அம்பிகாபதி யென்பவர் அவ்வேளையில் இராஜ

சபைக்கு வந்து முன்னே கப்பர் "நேர்ந்தவனை" என்று விட்ட கடைச்சீரைக்கொண்டு மேற்படி எதுகையாகவே,

"ஆண்டவின் பங்கொடி மீளக் கரைபற்ற வங்கொடுஞ்சாற்
குராண்டகண்டத்திலுறைந்தனள் காணங் குலேந்துங்கனே."]

என்று பாடி முடித்தான். சபையோர்களெல்லாம் அதைக் கேட்டு வியப்புற்றவர்களாய் அதன் அர்த்தத்தை அரசன் வாக்காற் சொல்லக்கேட்டு ஸ்திரீகளிலும் இப்படிப்பட்ட ஜெகஜாலக்காரிகளுமிருக்கிறார்களல்லவா! என்று நாசிமேல் விரல்வைத்தார்கள், பின்னர் அரசனேவலால் அந்த சோரஸ்திரீயையும், அவளது நாயகனையும் சபைக்குமுன் கொண்டுவந்து நிறுத்தினார்கள். அரசன் அவளது தீய நடத்தையைப் புருஷனுக் கறிவித்து அவளைக் கழுவிலேற்றத் தீர்மானித்தான். வீரவர்ம வரசே! இக் கதையால் பெண்கள் விஸ்வாஸகாதகர்களும் கொலைபாதகத்திற் கஞ்சாத கொடியவரென்றும் விளங்குகின்றமையின் அவர்களை நம்பி மோசம்போவது சரியற்ற காரியமாகும் என்று மந்திரி கூற, அரசகுமாரன் அவன் சொல்லை அசட்டை செய்து அவனுக்குச் செலவுகொடுத் தனுப்பிவிட்டுப் படத்தை யெடுத்து முகத்தணைத்து என் உடலினின்று முயிரைப் பிரிக்கும் எனதன்பிற்குரிய லீலாவதி! உன்னை யென் கண்களாற் பார்க்குநாளெது? அதுவன்றோ சிறந்தநாள் என்று படத்திற்கு முத்தமிட்டிருந்தான்.

---

ஏழாவது மந்திரி சொல்லிய கதை:—மதிசேகரன் என்னும் ஏழாவது மதிமந்திரி வீரவர்மனைப் பணிந்து சொல்லியதாவது,—எனது வேந்தர் பெருமானுக்கு இரண்டு நேத்திரங்கள்போலும் விளங்குகின்ற வீரவர்ம வரசே! நான் இப்போது நின்பாற்சொல்ல உத்தேசித்துவந்த விசித்திரமும் வியப்பும் தரத்தக்க கதைகளைச் செவிகொடுத்துக் கேட்கப் பிரார்த்திக்கின்றேன். அதாவது,—அந்த கேரளம், கன்யாகுப்தம் சாசுவதம், உற்கலம், மைதிலை, யென்னும் பஞ்சகௌடத்திலடங்கிய கந்தகோளதேசத்தில் விலாசநகரமென்னும் ஓர் பதியுளது. அந்நகரில் யௌவன பருவமுடைய மித்திரசர்மனென்னும் பெயருடைய ஒரு பிராமண னிருந்தான். அவன் தன் குலமுறைக்கேற்ற வேதபாராயண முதலியன செய்யாது எப்போதும் உல்லாசமாகக் காலங்கழிக்கவிலேயே மனத்தைச் செல்லவிட்டு வாணாளை வீணாளாக்கிவந்தான்.

இவனுடைய மனைவியோ தில்லும் பில்லும் செய்வதில் சிறந்த வளாயிருந்ததல்லாமல் அழகிற் சிறந்த ஒருவாலிபனைத் தனக்கு இன்பநாயகனாகக்கொண்டிருந்தாள். தன் கணவன் வீட்டிலிருப்பதனால் எப்பொழுதும் பரபுருஷனோடு கூடிச்சுகித்திருத்தற்குப்பல அசந்தர்ப்பங்களுண்டாவதை யெண்ணித் தன்னுள் ஒருவித தந்திரத்தை யூகித்து அவ்வாறே செய்ய உறுதிசெய்து கொண்டிருந்தாள். அவள் அன்றிரவு தனது நாயகனோடு மஞ்சத்திற் சயனித்துக்கொண்டிருந்தபோது அவள் நாயகன் தன்னை மருவவந்ததை யறிந்த புஷ்பாவதி என்னும் அவன் மனைவி அவனைச் சினந்து சிறிது எட்டப்படுத்தி என்னைத் தீண்டவேண்டாமென்று கடுகடுத்துக்கூறிக் கண்ணீர் விட்டழுது 'படிப்பென்ப தறியாத முழுமூடனுக்கு என்னைப் பாபிகள் கொண்டுவந்து கவிழ்த்துவிட்டதனாலல்லவோ இப்போது கண்டநாய்களெல்லாம் உன்னைப்பற்றி இகழ்ந்து கூறவும், நான் அதனைக்கேட்டு துக்கிக்கவுமாயிற்று. ஐயோ என்போலும் பாபஞ்செய்த ஜன்மம் உலகத்திலிராதென்று பலவாறு தன்னைத்தானே வெறுத்துக்கொண்டழுதாள். புருஷன் அவள் கண்ணீர் துடைத்துப் பெண்ணே புஷ்பாவதி! திடீரென்று உனக்கு இப்படிப்பட்ட விசனம் உண்டாவானேன்? நமக்கோ திரண்ட செல்வமிருக்கிறது. அதல்லாமல் வீட்டுக்காரியங்கள் முதலிய வெல்லாம் நீயே பார்க்கும்படி உன்னிஷ்டம்போல் விட்டிருக்கின்றேனே இன்னு முனக்கென்ன குறை? என்னால் உனக்கு நேர்ந்த அவமானமென்ன? அதைச் சொல். உன்னிஷ்டம்போல் நடந்துகொள்கிறேனென்றான்.

புஷ்பாவதி, என் அன்பிற்குரிய அனங்கனே! நான் நேற்றையதினம் உண்டானதும் அடுத்தவீட்டு அமராவதியிடஞ் சென்றிருந்தேன். அங்கு அவளுடன் ஐந்தாறு ஸ்திரீகள் உட்கார்ந்திருந்தார்கள். நானும் அவர்களுடன் போயுட்கார்ந்திருந்தபொழுது ஒவ்வொரு ஸ்திரீகளும் தங்கள் தங்கள் ஆம்படையான்மாருடைய கல்வித்திறத்தைப் பற்றி வெகுவாய் சிலாகித்துப் பேசினார்கள். பாபியாகிய நானும் என் பர்த்தாவாகிய தங்களைப்பற்றிப் பேசுவதற்கு வா யெடுத்தபோது அத்தாந்தா அமராவதி யிருக்கிறாளொன்னோ, முண்டை: அவள் வாழாதேபோக. என் வாயையடக்கி சீசீ நீயும் பந்தியில்வந்து வெட்கமில்லாமல் பேசவருகிறாயே! உன் ஆம்படையா னென்ன வேதங்களெல்லாம் கரைகண்ட கனபாடியோ? ஸாஸ்திரப்பரீக்ஷை யென்

பதே யறியாதவனென்று இவ்வூர் முழுதும் அறியுமோன்னே? உனக்கு திட்டமிருந்தால் அதில் நெருப்பிட்டுக்கொளுத்து. கேவலம் பஞ்சா னிடத்திலுங்கூட இராவியிருக்கிறது. அதிலென்ன பயன்? புருஷ னைப்பிரிந்தவள் அதிலும் பிராமணகுலத்தில் ஜனித்தவன் ஸகல சா ஸ்திர பாரங்கதனா யிருக்கவேண்டாமா? அதுதானே புருஷனுக்குக் கீர்த்தி. உன் புருஷன் பிராமணஜாதியிற் பிறந்தவனாயின் வேத மோதக் கற்றிருப்பான் என்றும், தங்கள் கணவரைப்பற்றி லோக முழுதும் அறியுமென்றும் உயர்வாய்ப் பலவாறு இழித்துக்கூறி, தங்கள் கணவரை உயர்த்திப் பேசிக்கொண்டனர். நான் அவர்க ளெதிரில் கண்ணீர்விட் டழுது அவர்கள் சொன்னவெல்லாம் சரியென்றெண் ணி என் விதியை நொந்து வீடுவந்து சேர்ந்தேன். என் கண்மணி யே! உமக்குத் திரண்ட ஸ்திதியிருந்தும் கல்வியில்லாமையாலன்றோ உமக்கு வாழ்க்கைப்பட்ட எனக்கு அவர்களுடன் சரியொத்த மேன் மையில்லாதுபோயிற்று. என்னுடைய துரதிர்ஷ்டம் உம்முடனே கல ந்துவாழப் பண்ணிற்று. இவ்வளவு அவமான மடைந்தபின்னும் என் னுடலை நெடுநாள் இவ்வுலகில் சுமந்துகொண் டிருக்கப் போவதில்லை யென்று சொல்லி பாசாங்காயழுது தனது புருஷன் தன்னுடன் கண்ணீர்விட்டழுகிறவரையில் தானும் புலம்பினள்.

மித்திராவசுவுக்கு ஒரு நிமிஷத்தி லெழுந்த சிற்றின்பப்பெருங் காமது மறுநிமிஷத்தி லொழிந்து துக்கமாய் முடிந்தது. உடனே மஞ்சத்தைவிட்டெழுந் துட்கார்ந்து என தன்புக்குரிய புஷ்பாவதி! என் கண்மணி! நீ வருந்தாதே. நான் இப்போதே சென்று சகல ஸாஸ்திர பாரங்கதனாய் வந்து என்னை யவமானப்படுத்தியவர்களை யெல்லாம் உனக்கு முன்பாக அவமானப்படுத்துகிறேனென்று கூறி மறுநாளுதயத்தில் பிரயாணப்பட்டுச் சென்றான்.

கணவன் வெளிச்சென்றபின்னர் புஷ்பாவதி தன் மோகநாய கனை வரவழைத்துக்கொண்டு மஞ்சத்திருந்தி மருவியிருந்தாள்.

'போனமச்சான் திரும்பிக்கொண்டான் பூமணத்தோடே' என் றபடி ஸகல ஞானத்தையும் பெற்று ஒருநாள் மாலை நல்லமயம் பார் த்து மித்திராவசு வென்பவன் தன் வீடுவந்து சேர்ந்தான். அவனைக் கண்ட புஷ்பாவதி மிக அன்புள்ளவள்போல் நடித்து அவன் பிரிவால் தான் அதிக விசனமடைந்தவள்போல அந்தரங்கத்தில் துக்கமும் பஹிரங்கத்தில் சந்தோஷவார்த்தையு மாடிக்கொண்டிருந்தாள்.

புஷ்பாவதியின் கணவன் வந்திருப்பதை யறிந்த அவளது சோரநாயகன் ஓராள்வசம் தான் இன்றிரவு பத்துநாழிகைக்குமேல் கட்டாயமாய் வருவதாகவும், வரவைத் தடுக்கும்பக்ஷத்தில் தான் உடனே உயிர்மாய்த்துக்கொள்வதாகவும் சொல்லியனுப்பினான். அதைக்கேட்ட புஷ்பாவதி ஐயோ என்செய்வேன் என்று மார்பிலடித்துக்கொண்டு யாத்திரைபோயிருந்த தன் புருஷன் வந்திருப்பதால் தயைசெய்து இன்று பொறுத்துக்கொண்டிருந்து மறுநாளிரவில் வரும்படி சொல்லியனுப்பினாள். அதற்கு அச் சோரநாயகன் சம்மதியாமல் ஒரு க்ஷணப்போதும் பொறுக்கமுடியாதாதலால் வழக்கப்படி ஆடையாலங்கிருதளாய் மஞ்சத்தின்மீதிருக்கவேண்டுமென்று மறுபடியும் சொல்லியனுப்பினான். புஷ்பாவதி அவன் சொல்லை மறுக்க அஞ்சி அவனிஷ்டமதுவானால் வரும்படிச் சொல்லென் றனுப்பினாள்.

புஷ்பாவதி சிறிது நேரம் தனித்திருந்து சிந்தித்துப் பின்னர் தன்புருஷனிடஞ்சென்று அருகிலுட்கார்ந்து சரசவார்த்தைகளாடிக் கொழுநன் யாத்திரைபோனதைப்பற்றி விசாரித்து என் கண்ணாளரே! தேவரீர் என்னென்ன ஸாஸ்திரத்திற் பயின்றுள்ளீரோ அவற்றையெல்லா மெனக் கறிவிக்கவேண்டுமென்றாள். மித்திராவசு தன் மனைவி கேட்டதற்குச்சந்தோஷித்து ஓ பெண்கள்நாயகமே! நான்கு வேதங்களும் ஆறு சாஸ்திரமும் பதினெண் புராணங்களும் வாய்ப்பாடமாயிற்று. இனி யாரும் எனக்கு நிகரில்லை. எல்லா ஸாஸ்திரங்களுக்கும் பாஷைகளுக்கும் நானே உற்பத்தி ஸ்தானமா யிருக்கிறேனென்றும் கூறினான். அதற்கவள் ஐயையோ! நானென்செய்வேன்? அட நாசகாலா! இதற்குத்தானா ஐந்துவருஷகாலமாக என்னைவிட்டகன்றுபோயிருந்தாய். ஐந்தாவதுவேதம் படிக்காவிட்டால் அவன் அரைக்காசுக்கும் உதவியில்லையே யென்றாள். மித்திராவசு, இதென்னபுதுமை! ஐந்தாம்வேதமென்று மொன்றிருக்கிறதா? லோகத்திற் பிரசித்தியாக விளங்குவது நான்கு வேதங்கள் தானே என்றான். ஐந்தாம்வேதம் படியாத உம்மை முன்போலவே மூடனாகக் கருதுவேன். ஏனெனில், ஐந்தாம்வேதம் படியாவிடில் வேதத்தின் உட்கருத்து விளங்காதென்று இத்தேசத்தரசன் ஐந்தாவது வேதத்தைச் சாரதாம்பாவாகச் சொல்பவர்க்கு வெகுமானமும், அது உணராதவனை அவமானப்படுத்தி மரணதண்டனையும் விதிப்பதாய்ப் பிரசித்தப்படுத்தியிருப்பதால் வேதப் பிராமணர்களெல்லாம் ஐந்தாம்வேதம்

படிக்கவேண்டிய அவசியம் நேரிட்டுப் படித்துவருகிறார்கள். நீர் இப்போது ஊரில் வந்திருப்பது ராஜாதிகாரிகளுக்குத் தெரியுமானால் உடனே உம்மை நிபந்தனையுடனழைத்துச்சென்று உமக்குத் தெரிந்திருக்கும் ஸாஸ்திரங்களைக் கேட்டுக்கொண்டே வந்து கடைசியில் ஐந்தாம்வேதம் தெரியாதென்பீரானால் தண்டனைக் குட்படுத்துவார்கள். ஐயோ! என் ஆசைக்குகந்த நாங்கள் துக்கமனுபவிப்போமேல் நான் அதனைப்பார்த்துச் சகிப்பதெப்படி? என்று மனமுருகித் தேம்பித்தேம்பியழுதாள். இவற்றையெல்லாங்கேட்ட அந்தணன் அரசதண்டனைக்குப் பயந்து வீட்டிலிருந்த அன்னத்தில் தயிர்விட்டுக்கட்டுச்சாதம் கட்டித்தரப் பெற்றுக்கொண்டு இரவு பதினொருமணிக்கெல்லாம்பிரயாணப்பட்டு நடந்தான்.

புஷ்பாவதி சோரநாயகன் தன்னிடம் வருமுன்னமே தான் தோழியையனுப்பிக் கள்ளநாயகனை விரைவிலழைத்துக்கொண்டு வரச்செய்து தான் தன் புருஷனை வீட்டைவிட்டுத் துரத்திய சாமர்த்தியத்தை அவனிடங்கூறி இருவருங்கூடி இன்பநுகர்ந்து களித்திருந்தனர். ஐந்தாம் வேதம் கற்கச் சென்ற அந்தணன் சிந்தாகுலமுற்றுத் தியங்கித் திரிந்து அன்றிரவு நித்திரையின்றி விழித்திருந்து பொழுதுபுலர்ந்ததே சந்தியாவந்தனஞ் செய்துகொள்ள ஓர் குளக்கரையில் பல் துலக்கிக்கொண்டிருந்தான். அக்குளத்து நீரை முகந்துகொள்வதற்காக அழகிய ஐந்து பெண்கள் செப்புக்குடத்தை இடுப்பில் வைத்துக்கொண்டுவந்து குளக்கரையை யடைந்து அங்கு முகவாட்டத்தோடு உட்கார்ந்திருக்கும் வைதிகனைக் கண்டார்கள். அதிலொருத்தி மற்றொருத்தியிடம் அடி கோகிலா! இந்தப்பிராமணன் முகக்குறியாற் கவலையுற்றிருப்பவன்போலக் காணப்படுகிறானென்றாள். மற்றொருத்தி அடி ஜானகி! நீ சொன்னது சரியே. ஆனாலிவன் கல்வியைக் குறித்துக் கஷ்டப்படுவதாகத் தோற்றுகிறதென்றாள். இன்னொருத்தி இவன் பெண்ஜாதியாற் புத்திபேதலித்தவன்போற் காணப்படுகின்றனென்றாள். வேறொருத்தி இராஜ தண்டனைக்குப் பயந்திருப்பவனாகத்தோற்றுகிறதென்றாள். மற்றொருத்தியோ இவன் நீங்க புத்தியில்லாமற் றியங்கித் திரிபவனென்றாள்.

இவ்வாறு பேசிக்கொண்ட ஸ்திரீகளைவரும் அந்தணனிடஞ் சென்று [illegible] ஓ மஹாபிராமணா! நீரெங்குள்ளவர்? உங்கள் முகத்தில் விசனக்குறி தோன்றவிருப்பானேன்? என்று வினவினார்கள்.

அதற்கு அந்தப் பிராமணன் அம்மா! நான் அநுஷ்டானஞ் செய்துகொள்வதற்காக இங்கு வந்துள்ளேன் என, அப்பெண்கள் இல்லையில்லை; நீர் மறைத்துப்பேசுகிறீர். உண்மையை வெளியிடுமென்று தொந்தரைசெய்ய, அந்தணன் தனக்குந் தன்மனைவிக்கும் நடந்தவிஷயங்களை ஆதியோடந்தமாகக் கூறிமுடித்தான். அதைக் கேட்ட அப்பெண்களனைவரும் அந்தோ! இவன் வெகு சாதுவாயிருக்கிறான். அதனாற்றான் இவன் மனைவி இவனை ஏய்த் தனுப்பிவிட்டுத் தன் மனதிற் கினிய சோரநாயகனோடு கூடிக் களித்திருக்கிறாள். இவனச் சூதறியாமல் வந்து தியங்குகிறான். ஆகவே நாம் ஒவ்வொருவரும் அவன் கருத்தைத் திருத்தவேண்டுமென்று தீர்மானித்துக்கொண்டு நீர்குடைந்து செல்கையில் அவர்களிலொருத்தி அந்தணனை விளித்து ஐயா, பிராமணரே! நீர் சகலவேதபாரகராயிருந்தும் ஸ்திரீகளுடைய மோசடியான தந்திரங்களைத் தெரிவிக்கும் நூல்களைக் கல்லாமையால் நீர் இத் துன்புறலானீர். நீவிரினி அத்தகைய துன்மார்க்கிகளின் வஞ்சவலையிற் சிக்காதிருக்கும் மார்க்கத்தை அறிவிக்கின்றோம். இனி நாங்கள் உமக்குக் கற்பிக்கப்போவதுதான் ஐந்தாம் வேதம். அதனைக் கவனமாகக் கற்றுக்கொள்ளுமென்று கோகிலாளென்னும் பெண் அநதணனை யழைத்துக்கொண்டு தன் வீடுசென்று அவனுக்கு உண்டி முதலியன உதவிக் காத்துவந்தாள்.

---

(1) ☞ **கோகிலாளின் துயுக்தி**:—அந்தணன் இங்கிப்படி யிருக்க, கோகிலாளின் புருஷனும் பந்துக்களும் புதிதாக வந்துள்ள பிராமணன் யாரென்று வினவ, தன் தமக்கை குமாரனென்று கூறினள். அதன்பின் அவனை அவ்வீட்டாரெல்லாம் அன்போடு உபசரிக்கலானார்கள். ஐந்தநாளிரவு எல்லோரும் உண்டாயிற்று. அன்றிரவு சுமார் பதினொருமணிக்குக் கோகிலாள் உயர்ந்த ஆடை தரித்துச் சுகந்த பரிமள கந்தந் திமிர்ந்து, மித்திராவசு வென்னும் அந்தணன் சயனித்திருக்கும் படுக்கை யறையுட் சென் றுட்கார்ந்து தாம்பூலச் சுருள் மடித்துத் தந்து, சரசவார்த்தைகளாடித் தன்னை மருவும்படி மேல்விழுந்து தழுவினள். அதற் கவன் உடன்படாமல் ஐயோ! சிறிது நாழிகைக்குமுன் என்னை உன் றமக்கை மகனென் றுரைத்தாயே! இப்போ திந்த அக்கிரமத்துக் குடன்படச்சொல்வது உனக்குத் தருமமாகுமா வென்று கண்ணைப் பொத்திக்கொண்டான். அப்போதவள் உரத்துக்கூவி ஐயவோ! அநியாயமே! யாரோ ஒரு பாதகன்

என்னைப் பெண்டாளப் பிடித்துக்கொண்டானே ! இனி என் செய்வேன் ? எல்லோரும் சீக்கிரம் ஓடி வாருங்கள். என்னை வந்து பாருங்கள். என் மானத்தைக் காருங்கள் என்று இரைந்தாள்.

இவளோசையிட்டதைக் கேட்ட வீட்டாரும், அண்டையயல் உள்ளவர்களும் கையில் தடியும் தாம்புங்கொண்டு ஓடோடியும் வந்து வீட்டிற் புகுந்து சூழ்ந்துகொண்டு என்ன சங்கதி ? கோகிலா ! எனப்படி கூச்சலிட்டனை ? என்று கேட்பதைக் கண்ட பிராமணன் திகிற்பட்டு நடுங்கி மெய்சோர்ந்து வியர்வை சிந்த ஒன்றுந் தோன்றாது தலையைக் குப்புறக்கவிழ்ந்து படுத்துக்கொண்டான். ஜனங்கள் வந்து சூழ்ந்துகொண்டபின் கோகிலாள் கண்ணீர்விட்டழுது 'ஐயோ அண்ணா! மாமா ! தம்பி ! என்னென்று சொல்வேன் ! நெடுநாள் பொறுத்து என்னைப் பார்க்கவந்து இதோ படுத்திருக்கிற எனது தமக்கை மைந்தனுக்குப் போஜனஞ்செய்தானபின்னர் திடீரென்று ஜன்னிபாதவலி கண்டுவிட்டதே ! இனி என்செய்வேன் ? (கையை முறித்துக்கொள்ளல்) பாவியைப் பார்க்கப்போய் இறந்து விட்டானென்னும் பழி என்மேற் சுமராதபடி எல்லோரும் சீக்கிரமாக ஓடிப்போய் சதுர்முகமாத்திரை வைத்திருக்கும் நாலைந்து வைத்தியரை யழைத்துவாருங்கள். அவ்வொருமருந்துதான் இந்நோயைச் சீக்கிரமாக ஸ்வஸ்தஞ் செய்யவல்லது என்றாள். இதோ இதோ அழைத்துவருகிறோ மென்று மூலைக்கொருவராய் ஓடினார்கள். போனவர்கள் போக, அங்கு நின்றுகொண்டிருந்த சிலரை ஒவ்வொருவேலைமேலனுப்பிவிட்டு அறைக்கதவைச்சாற்றித் தாளிட்டு 'ஓய் அசட்டுப்பிராமணா ! ஐந்தாம் வேதத்தின் ஆரம்பம் எப்படியிருக்கிறது பார்த்தீரா ? இனியாவது என் கருத்திற்கிணங்கிக் கலவிசெய்கிறீரா, அல்லது எமகிங்கரர்கள்போல வைத்தியர்கள் உன்னைச் சூழ்ந்துகொண்டு அவுஷதங் கொடுக்கவும், ஒத்தடமிடவும், பத்துப்போடவும், சூட்டுக்கோல் பிரயோகஞ் செய்யவும் செய்யட்டுமா ? இதில் உனக்கு எது சம்மதமோ அதைச் சொல் என, பிராமணன் அவள் சாதுரியத்திற்கு வியந்து அவளைக் கட்டித் தழுவி முத்தமிட்டுக் கலந்து இன்பம் விளைத்து மகிழ்ந்தான்.

சிறிது நேரத்திற்கெல்லாம் ஐந்தாறு வைத்தியர்கள் அங்குவந்து சேர்ந்தார்கள். கோகிலாள் அவர்களைச் சிறிதுநேரம் சும்மாவிருக்கும்படி கையமர்த்தி, பண்டிதர்காள் ! நீங்களிங்குவருவதற்குமுன் நான் சிறிது உபசாரசிகிச்சைசெய்தேன் ; அதனால் சற்றுக் குணமாயிருக்கிற

தென்கிறா ரென்றாள். கபாடசிகிச்சை யென்பது இன்னதென் றறியா மல் விழித்தும் அவளைக் கேட்டால் தங்கள் கௌரவத்திற்குக் குறை வுண்டாமென்றும் வைத்தியர்கள் நினைத்து, அப் பிராமணன் கை நாடியைப் பார்த்து இனி வரவர குணப்படுமென்று கூறிச்சென்றனர்.

கோகிலாள், பார்த்திரா ஐயரே ! முதன்முதல் உன்னைத் தமக் கைமக னென்றேன். பின்னர் ஆசைநாயகனென்று அணையவந்தேன். அதன்பின் என்னை துராக்கிரதமாய்ப் புணரவந்த துஷ்டனென்றிரைந்து கும்பு கூட்டினேன். பிற்பாடு வியாதியஸ்தனென்று மெய்ப்பித் ததற்கேற்ப வைத்தியர்கள் கைபிடித்துப்பார்தது இனி இறங்குமுக மென்று சொல்லிப்போயினர். இத்தனைபேருக்கு முன்பாக உன்னை யும் பொறுமையாகக் கலந்து களித்துப் பதினமர் மெச்சும் பதி விரதையாகவு மிருக்கிறேன். பெரும்பாலும் இத்தகைய சாமர்த்திய மான வித்தைகள் ஸ்திரீகளிடத்துண்டு. இதைப் பிரமனாலும், ஆயி ரங்கண்ணுடைய இந்திரனாலும் கண்டறிய முடியாது. இப்படியே உன் மனைவியும் தனக்கேற்ற ஒருவனைக் கூடிக் களிக்க நிமித்தம் உன்னைத் துரத்திவிட்டாளென்றறி. அன்று என்னுடன் கூடவந்தவர் களில் இன்னும் நான்கு ஸ்திரீக ளிருக்கின்றன ராதலால் அவர்களி லொருத்தி வீட்டைக் காண்பிக்கிறேன். நீ அவளிடஞ்சென்று அவள் செய்யுந் தந்திரத்தைக் கண்டு மகிழ்வாயாக வென்று மற்றொருத்தி வீட்டிற் கொண்டுபோய் விட்டுச்சென்றாள்.

---

(2) ☞ ஜானகியின் சமர்த்து:—தெருச்சுவற்றின்மேல் நின்றிருந்த மித்திராவசுவென்னும் அந்தணனை வாசலிலிருந்து கண்ட ஜானகி யென்பவள் மனமகிழ்வோடு வெளியேவந்து அந்தணனைத் தன்பிறகே வரும்படி சைகைசெய்து இருவரும் பக்கத்துவீட்டி லிருந்து வரு வதுபோல் வந்துகொண்டிருக்கையில் அவள் புருஷன் கண்டு ஜா னகீ ! இந்தப்பிராமணன் யாரென்றுவினவ, அவள் ஆத்துக்குவாருங் கோளென்று உட்சென்றாள். அவள் புருஷனும் மித்திராவசுவும்பின் சென்றனர். ஜானகி தன் மோவாய்க்கட்டையில் வலதுகையை வளை த்துவைத்துப் புன்னகைசெய்து 'கேட்டீர்களா ஓர் அதிசயத்தை ! உங்கள் போஜனவேலையைத் தீர்த்துவிட்டு அண்டைவீட் டபிராமி யிடஞ் சென்றேன். அங்கு சில பெண்களிருந்து சந்தோஷ வார்த் தைக ளாடிக்கொண் டிருந்தார்கள். அதைக்கண்ட நான் என்ன விசேஷமென்று வினவியபோது, அவர்கள் தங்களுடைய புருஷர்கள்

யாரும் வியக்கத்தக்க சாமர்த்தியமுடையவ ரென்றனர். அதை நான் விவ ரித்துக் கூறவேண்டுமென்றபோது, அவர்களிலொருத்தி தன் புருஷனுடைய கண்களைக் கட்டிவிட்டுப் பால் கறக்கச்செய்தால் ஒரு துளி கூடக் கீழேசிந்தாமல் கறப்பானென்று புகழ்ந்து கூறினள். நான் இது ஒரு பெரியகாரியமல்ல; என் கணவர் கண்ணையுங் கட்டி அவர் முதுகின்மேலொருவர் சார்ந்துகொண்டு உலுக்கிக்கொண் டிருந்தாலும் ஒருதுளிபால்கூடச் சிந்தாமல் கறந்து காட்டுவா ரென்று சொல்லித் தங்களுடைய சாதுரிய புத்தியையும், அதியற்புத வல்லமையையும் அவர்களிடம் புகழ்ந்துகூறவே, அவர்கள் நம்பாமல் இந்தப் பிராமணனை யனுப்பி நான்முன்னே சொன்னபடி பால்கறப்பதைப் பார்த்துவரச்சொன்னா ராதலால் இவரும்மைப் பரீக்ஷிக்கவந்திருக்கிறார் என்றாள். அதைக் கேட்ட அவள் புருஷன் நகைசெய்து அடி பயித்தியகாரி! இதுவுமொரு சமர்த்தாகுமா? கண்களைக்கட்டி யசைத்தாலும் கைநிதானமில்லாமலாய்போகும்? என, ஜானகி வாயாற்சொல்வதிற் பயனில்லை. கையாற் செய்துகாட்டி அவர்கள் வெட்கும்படிச் செய்து, உங்கள்சமர்த்தைநிறுத்தி, என்னைக் கௌரவப்படுத்த வேண்டுமென்றுவேண்டினள். அவனதற்குடன்பட்டுத் தன் மனைவியுடன் வந்த வேதியனை மாட்டுக்கொட்டாரத்துக் கழைத்துக்கொண்டுபோய் பால்குடத்தை யெடுத்துக்கொண்டு பசுவினிட முட்கார்ந்து தன் மனைவியைக்கொண்டு ஓர் வஸ்திரத்தால் கண்ணைக் கட்டும்படிச் சொல்ல அவளப்படியே இழுத்துக் கட்டினள். பின்னர் அவன், 'ஜானகீ நீ என் முதுகின்மேற் சார்ந்து, விடாமல் அசைத்துக்கொண்டிரு; வேண்டுமானால் அந்தப் பிராமணனும் அசைக்கட்டுமென்றான்.

ஜானகி தன்புருஷன்முதுகில் மல்லாந்து சார்ந்து தானசைத்து வந்த பிராமணனைத் தன்னெதி லீலைசெய்யச் சைகைசெய்தாள். பிராமணன் அவளிஷ்டத்திற் கிணங்காவிடில் தீங்குநேருமென்றெண்ணி அவளிஷ்டத்தை நிறைவேற்றிக்கொண் டிருக்கையில் பால் கறந்த பிராமணன் இன்னும் அதிகமாயசையுங்களென்று பால் கறந்துகொண்டிருந்தான். பிந்தாமை யென்னும் பிராமணன், தன் கணவன்மீது மல்லாந்து சார்ந்திருந்த ஜானகியைக் கூடி சுக்கிலப்பாலைச் சொரிந்தான். அவன்பால் கறந்த பிராமணனும் கீழே சிந்தவில்லையென்று காட்டித் தன்னைத் தானே புகழ்ந்துகொண்டான். அவன் மனைவியும் புருஷனைக்கட்டித்தழுவி என் கண்ணாளா! தங்களுடைய சாதுரியமும் புத்திநுட்பமும், சாமர்த்திய புத்தியும் யாருக்குவருமென்று கொண்

டாடி, தான் அழைத்துவந்தவேதியனை நோக்கி என் ஆம்படையான்
சாமர்த்தைப் பார்த்தீரா! என, அவன் ஆமாம்: நாமிருவரும் சேர்ந்து
பலமாக அசைத்தும் ஒரு துளிபால்கூடச்சிந்தாமற்கறந்ததற்கு ஆச்
சரியப்படாதார்யார்? என்றுபுகழ்ந்தான். பின்னர் ஜானகி, முன்னே
முடியாதென்றுகூறிய முட்டாள்சிறுக்கிகளிடம் என் புருஷன் பால்
கறந்த பக்குவத்தைச் சொல்லென் றவனை யனுப்பிவிட்டுத் தன்
புருஷன் மகிழும் பூவையாயிருந்தாள்.

---

(3) ☞ **சுந்தரியின் தந்திரம்:**—மூன்றாவது ஸ்திரீயாகிய சுந்தரமெ
ன்பவள் மித்திராவசுவென்னும் பிராமணனைச் சமீபத்திருந்த குளக்
கரையண்டையழைத்துப்போய் 'நீர் இங்குட்கார்ந்திரும். சிறிதுநேர
த்திற்கெல்லாம் ஓர் பெண்பிள்ளை வருவாள். அவள்சொற்படி கேளு
மென்றுசொல்லிவிட்டு வீடுசென்று ஸ்நானஞ்செய்துதன்புருஷனுக்
குணவளித்துத் தானும் உண்டு, ஆடையாபரணலங்கிருதளாகிச்
சுமார் பகல் பன்னிரண்டுமணிக்குத் தன் கணவனோடு கட்டிலின்மே
லுட்கார்ந்து தாம்பூலந் தரித்துக்கொண்டிருந்தவள் திடீரென்று கட்
டிலின்மேற் காலை யுதறிக்கொண்டு கூகூ வெனக் கத்தினாள். எதிரி
லிருந்த கணவன் திடுக்கிட்டுப் பயந்து என் கண்ணே! என்ன ஆப
த்து! ஐயோ இப்போது நன்றாயிருந்த உனக்குச் சம்பவித்த வியாதி
யென்ன? அழாதே! சுந்தரம்! வாய்திறந்து சொல்: வயித்தியரை
யழைத்துவருகிறேன் என்று கண்களில் நீரொழுகப் பரிதபித்தான்.
சுந்தரம், ஐயோ நானென்னசெய்வேன்! என் அரை இழுத்துப்பிடித்
துக்கொண்டதே! அப்பா நோய்பொறுக்கக்கூடவில்லையே! சீக்கிரம்
போய் அண்டைவீட்டு ஆச்சியை யழைத்துவாருமென் றலறினாள்.
அவன் ஓடோடியும் சென்று அவளையழைத்துவந்தான். சுந்தரி தன்
புருஷனைச் சிறிது மறைவாயிருக்கச் சொல்லி வந்தவளிடம் தான்
குளக்கரையில் குந்தவைத்திருப்பவனுக்குப் பெண்வேஷ மிட்டுப்
பெருமாள் கோயிலண்டையுட்காரவைத்துத் தன் புருஷன்வந்தழைக்
கையில் அவனுடன் வரும்படிச்சொல்லி உன் வீடுசெல்லென் றனுப்
பினாள்.

சுந்தரம் சின்னேரம்பொறுத்து மறுபடியுங்கூச்சலிட அவன்புரு
ஷன் உட்சென்று காதலி! ஆச்சி வந்தாளே என்னசங்கதி? மருந்து
கொடுத்தாளா? நோய் இப்போதெப்படியிருக்கிறது என்று வினவ,

உன் கையால் தொடாதே! பாபம் சித்திக்கும் என்றாள். அதற் கவன் எளியமுகங் காட்டி அவள் சேலைக்கட்டைப் பற்றிப் பெண்ணே! உன்மே லெனக்கு மிகுந்த காதலிருக்க அபாண்டஞ் சொல்ல என்மனந் துணியுமா? ஒருபோதுந் துணியாது. அந்தப் பாழும் மாமரத்தி லேறியதனால் வந்த கேடு இது. நீ ஓர் அன்னிய புருஷனுடன் கூடுவதுபோல என் கண்ணுக்கு நெடுநேரம் தோற்றியதால் அவ்வாறு கூறினேனே யன்றி வேறன்று. நீ வேண்டுமானால் அம்மரத்திலேறிப் பாரென்றான். இந்திராணி நான் அவ்வுண்மையைக் கண்டறிவேனென்று மீண்டு மவ்விடத்திற்கு வந்து அம்மாமரத்திலேறி ஹா! பாபி! சண்டாளா! புருஷனோடு புணருகிறாயே! இதென்ன அநியாயம்! பெண்ணோடு ஆண் சேருவது ஸஹஜம். ஆணோடு ஆண் கூடுவதை நான் எங்குங் கண்டதும் கேட்டதுமில்லையே யென்று பாசாங்கடித்தாள். அவள் புருஷன் என் கஷ்டத்தை யகற்றிய இஷ்டநாயகி! இரையாதே! நானும் உன்போல்தான் மோசம்போனேன். என்கண்ணே! இறங்கிறங்கு. என்னைத் தவிர இங்கு அன்னிய ராருமில்லை. அம்மரத்திற் பேய்க ளிருப்பதால் அவ்வாறு தோற்றுகிறதென்று கூற, அவள் கீழிறங்கிவந்து அவனைக் கட்டித்தழுவி முத்தமிட்டு என் அன்புக் கினிய ஆருயிரே! நீங்கள் சொன்னது சரிதான். அம்மரத்திலுள்ள பேயின் சேஷ்டையால் நம் மிருவருக்கும் அவ்வாறு தெரிந்தது. உங்கள்மேற் குற்றமில்லை யென்றாள். அவன், பெண்ணே! இப்போது நம்மில் நடந்த விஷயத்தை வெளியிடாதே. அதனால் உனக்கு மெனக்கும் அவமானமுண்டாகுமென்று கூறி இருவருஞ் சேர்ந்து வீடுசென்று சுகித்திருந்தார்கள்.

---

(5) ஸ்ரீ வனஜாக்ஷியின் வல்லமை:—மித்திரசேனனைக்கண்ட வனஜாக்ஷி யென்பவள் அவன் செவியில் மறைவாய் யேதோ வொன்றை யோதிச் சென்றாள். அந்தணன் பூணூநூலை மடியில் மறைத்து, நெற்றியில் பெரிய குங்குமப்பொட்டிட்டு, கையில் ஓலைச் சுவடியொன்றை பற்றி மாந்திரீகனைப்போல் ஆடைமுதலிய சின்னங்கள் தோன்ற வனஜாக்ஷி வாழும் வீதிவழியே வந்துகொண்டிருந்தான்.

அதோ அந்த மெத்தைவீட்டில் பெருங்கும்பல் காணப்படுவதேனோ? அவர்க ளென்ன அங்கிருந்து வாடுகிறார்கள்? அதோ பெருங் கோஷ்டமும் கேட்கப்படுகிறதே அதென்னவென்று காணச்

சென்றபோது, அவ்வீட்டிலிருந்து ஐந்தாறு புருஷர்கள் தலைவிரிகோலமாய் ஓடோடியும் வந்தார்கள். அவ்வீட்டு வாசலில் ஒரு பெண்பிள்ளை அப்பணமாய் நின்று தலைசுழற்றியாடி அங்குமிங்கு மோடி முகம் வாடி பாட்டுகள் பாடிக்கொண் டிருந்தாள். அவளார்? வனஜாக்ஷி யென்னும் மங்கையேயாம். மாந்திரீகன்போல் வீதிவழியே வந்து கொண்டிருந்த மித்திராவசு வென்னும் அந்தணன் அவ் வீட்டெதிரில்வந்து நின்று வாசற்படியை முறைத்துப் பார்த்தவண்ண மிருந்தான். உள்ளிருந்தவனஜாக்ஷி ஹுங்காரமிட்டுப் பாத்திரங்களைவாரி ஒன்றன்மே லொன்றாகப் போட்டுடைத்துப் பல்லைநெறநெறவென்று கடித்து ஆர்ப்பாடஞ் செய்துகொண்டிருந்தாள்.

வீதியிலிருந்த அந்தணன் அங்குள்ளவர்களை நோக்கி, "ஐய! இவ்வீட்டில் பெருங்கோஷ்டம் கேட்கப்படுகிறதே அதென்ன" வென்று வினவினன். அவர்கள்; இவ்வீட்டில், வனஜாக்ஷி யென்னும் பெண்மணி யொருத்தியிருக்கின்றாள். அவள் சிறந்த குணவதி, புருஷன் சொல்லை ஒருபோதும் மீறி நடப்பவளல்லள். அங்ஙனமாக, திடீரென்று அப்பெண் என்னகாரணத்தினலோ நாமறியோம்! சின்னேரத்திற்குமுன் நன்றாயிருந்தவள் தான் கட்டியிருந்த ஆடைகளைக் களைந் தெறிந்துவிட்டு தலைவிரிகோலமாய் வாயில்வந்தபடி துர்ப்பாஷைகள் பேசி அங்குமிங்குமோடியாடித் திரிகிறாள். கண்டோர் மையல்கொள்ளத்தக்க சுந்தரரூபியாகிய அவளை இப்போது பார்க்கப் பயமாயிருக்கிறது. அவள் செய்கையைக் கண்ட சிலர் பேய்பிடித்த தென்று கூறுகிறார்கள் என்று சொல்ல, அந்தணன் 'அது எதுவாகுனு மாகுக. நான் ஐந்து நிமிஷத்தில் குணப்படுத்துகிறேன்' என, அங்கிருந்த யாவரும் அகமகிழ்ந்து அவனை உள்ளே அழைத்துக்கொண்டுபோனர்கள். மித்திராவசுவென்னும் அந்தணனைக்கண்ட வனஜாக்ஷி வீராவேசங்கொண் டெழுந்து 'அடா அந்தணா. நீயோ என்னை ஓட்டுபவன்? நீ இப்போதே வீட்டைவிட்டு ஓட்டம்பிடித்தாலன்றி உன்னை வேட்டையாடி உன் ஊட்டியைக் கடித்து உதிரத்தைக் குடிப்பேன். இது நிச்சயம். இச்சகம்பேசும் பிச்சைப்பிராமணா நச்சுநச்சென்று பேசாமல் அச்சமுற்றோடிப்போ' வென்று கண்களை விழித்துருட்டி முறைத்து நின்றாள். அந்தணன் உண்மை தெரிந்தவனகையால் தன் கையிலிருந்த ஓலைச்சுவடியால் அவள் தலையிலடித்து ஓ பிரம்மராக்ஷஸி! என்றபோது, அவளொருவீரமாகாளிபோலும் அவன்மேற் பாய்ந்து இரண்டு கையாலும் பிடித்தழுத்

உன் கையால்தொடாதே! பாபம் சித்திக்கும் என்றாள். அதற்கவன் எளியமுகங் காட்டி அவள் மேலாக்கட்டையைப் பற்றிப் பெண்ணே! உன்மேலெனக்கு மிகுந்த காதலிருக்க அபாண்டஞ் சொல்ல என்மனந் துணியுமா? ஒருபோதுந் துணியாது. அந்தப் பாழும் மாமரத்தி லேறியதனால் வந்த கேடு இது. நீ ஓர் அன்னிய புருஷனுடன் கூடுவதுபோல் என் கண்ணுக்கு நெடுநேரம் தோற்றியதால் அவ்வாறு கூறினேனே யன்றி வேறன்று. நீ வேண்டுமானால் அம்மரத்திலேறிப் பாரென்றான். இந்திராணி தான் அவ்வுண்மையைக் கண்டறிவேனென்று மீண்டு மவ்விடத்திற்கு வந்து அம்மரத்திலேறி ஹா! பாபி! சண்டாளா! புருஷனோடு புணருகிறாயே! இதென்ன அனியாயம்! பெண்ணோடு ஆண் சேருவது ஸஹஜம். ஆணோடு ஆண் கூடுவதை நான் எங்குங் கண்டதும் கேட்டதுமில்லையே யென்று பாசாங்கடித்தாள். அவள் புருஷன் என் கஷ்டத்தை யகற்றிய இஷ்டநாயகி! இரையாதே! நானும் உன்போல்தான் மோசம்போனேன். என் கண்ணே! இறங்கிறங்கு. என்னைத் தவிர இங்கு அன்னிய ராருமில்லை. அம்மரத்திற் பேய்க ளிருப்பதால் அவ்வாறு தோற்றுகிறதென்று கூற, அவள் கீழிறங்கிவந்து அவனைக் கட்டித்தழுவி முத்தமிட்டு என் அன்புக் கினிய ஆருயிரே! நீங்கள் சொன்னது சரிதான். அம்மரத்திலுள்ள பேயின் சேஷ்டையால் நம்மிருவருக்கும் அவ்வாறு தெரிந்தது. உங்கள்மேற் குற்றமில்லை யென்றாள். அவன், பெண்ணே! இப்போது நம்மில் நடந்த விஷயத்தை வெளியிடாதே. அதனால் உனக்கு மெனக்கும் அவமானமுண்டாகுமென்று கூறி இருவருஞ் சேர்ந்து வீடுசென்று சுகித்திருந்தார்கள்.

---

(5) ஸ்ரீ வனஜாக்ஷியின் வல்லமை:—மித்திராவசுவைக்கண்ட வனஜாக்ஷி யென்பவள் அவன் செவியில் மறைவா யேதோ வொன்றை யோதிச் சென்றாள். அந்தணன் பூணுநூலை மடியில் மறைத்து, நெற்றியில் பெரிய குங்குமப்பொட் டிட்டு, கையில் ஓலைச் சுவடியொன்று பற்றி மாந்திரீகனைப்போல் ஆடைமுதலிய சின்னங்கள் தோன்ற வனஜாக்ஷி வாழும் வீதிவழியே வந்துகொண்டிருந்தான்.

அதோ அந்த பெத்தைவீட்டில் பெருந்துர்ப்பல் காணப்படுவானேன்? அங்கே யென் அந்தரிக்கும் வாடுகிறார்கள்? அதோ பெருங் கோஷ்டமும் கேட்கப்படுகிறதே அதென்னவென்று காணக்

சென்றபோது, அவ்வீட்டிலிருந்து ஐந்தாறு புருஷர்கள் தலைவிரிகோலமாய் ஓடோடியும் வந்தார்கள். அவ்வீட்டு வாசலில் ஒரு பெண்பிள்ளை அம்பணமாய் நின்று தலைசுழற்றி யாடி அங்குமிங்கு மோடி முகம் வாடி பாட்டுகள் பாடிக்கொண் டிருந்தாள். அவளார்? வனஜாக்ஷி யென்னும் மங்கையேயாம். மாந்திரீகன்போல் வீதிவழியே வந்துகொண்டிருந்த மித்திராவசு வென்னும் அந்தணன் அவ் வீட்டெதிரில்வந்து நின்று வாசற்படியை முறைத்துப் பார்த்தவண்ண மிருந்தான். உள்ளிருந்தவனஜாக்ஷி ஹுங்காரமிட்டுப் பாத்திரங்களைவாரி ஒன்றன்மே லொன்றாகப் போட்டுடைத்துப் பல்லைநெறநெறவென்று கடித்து ஆர்ப்பாடஞ் செய்துகொண்டிருந்தாள்.

வீதியிலிருந்த அந்தணன் அங்குள்ளவர்களை நோக்கி, "ஐய! இவ்வீட்டில் பெருங்கோஷ்டம் கேட்கப்படுகிறதே அதென்ன" வென்று வினவினன். அவர்கள்; இவ்வீட்டில், வனஜாக்ஷி யென்னும் பெண்மணி யொருத்தியிருக்கின்றாள். அவள் சிறந்த குணவதி, புருஷன் சொல்லை ஒருபோதும் மீறி நடப்பவளல்லள். அங்ஙனமாக, திடீரென்று அப்பெண் என்னகாரணத்தினாலோ நாமறியோம்! சின்னேரத்திற்குமுன் நன்றாயிருந்தவள் தான் கட்டியிருந்த ஆடைகளைக் களைந் தெறிந்துவிட்டு தலைவிரிகோலமாய் வாயில்வந்தபடி துர்ப்பாஷைகள் பேசி அங்குமிங்குமோடியாடித் திரிகிறாள். கண்டோர் மையல்கொள்ளத்தக்க சுந்தரரூபியாகிய அவளை இப்போது பார்க்கப் பயமாயிருக்கிறது. அவள் செய்கையைக் கண்ட சிலர் பேய்பிடித்த தென்று கூறுகின்றார்கள் என்று சொல்ல, அந்தணன் 'அது எதுவானாலுமாகுக. நான் ஐந்து நிமிஷத்தில் குணப்படுத்துகிறேன்' என, அங்கிருந்த யாவரும் அகமகிழ்ந்து அவனைஉள்ளே அழைத்துக்கொண்டுபோனார்கள். மித்திராவசுவென்னும் அந்தணனைக்கண்ட வனஜாக்ஷி வீராவேசங்கொண் டெழுந்து 'அடா அந்தணா. நீயோ என்னை ஓட்டுபவன்? நீ இப்போதே வீட்டைவிட்டு ஓட்டம்பிடித்தாலன்றி உன்னைநடு வேட்டையாடி உன் ஊட்டியைக் கடித்து உதிரத்தைக் குடிப்பேன். இது நிச்சயம். இச்சகம்பேசும் பிச்சைப்பிராமணா நச்சுநச்சென்று பேசாமல் அச்சமுற்றோடிப்போ' வென்று கண்களை விழித்துருட்டி முறைத்து நின்றாள். அந்தணன் உண்மை தெரிந்தவனாகையால் தன் கையிலிருந்த ஓலைச்சுவடியால் அவள் தலைமேலடித்து ஓ பிரம்மராக்ஷஸி! என்றபோது, அவளொருவீரமாகாளிபோலும் அவன்மேற் பாய்ந்து இரண்டு கையாலும் பிடித்தழுத்

திக் தூக்கிக்கொண்டு பின்கட்டிற் கோடினாள். அந்தண னிறந்தா னிறந்தா னென்னும் சத்தம் எங்கும் பரவியது.

தூக்கப்பட்டுச் சென்ற அந்தணன் வனஜாக்ஷியை இறுகத்தழுவிப் பிடித்து மார்போடணைத்து முத்தமிட்டு அவளுடைய சிவந்த இதழைக் கடித்துச் சுவைத்து ஆநந்தித்தான். அவ்வீட்டிலுள்ளோர் யாவரும் உள்ளேசெல்ல அஞ்சி வெளியே நின்றுவிட்டார்கள். சிறிது நேரத்திற்கெல்லாம் பிராமணன், வனஜாக்ஷியின் நீண்ட கூந்தலைக் கையிற்பிடித் திழுத்துக்கொண்டு வாசலுக்கு வந்து, விபூதி கொண்டு வரச்சொல்லி பூமியில் பஞ்சாக்ஷரச்சக்கரமிட்டு அதில் ஸ்ரீயும் - க்ரீயும்-ஐயுங்-கிலீயும் - சௌவு மென்றெழுதி 'ஓ பிரம்மராக்ஷஸமே! நீ இப்பீடத்திலுட்கார்ந்து உன் சமர்த்தைக்காண்பி' யென்று அதன் மேலுட்காரவைத்து ஒரு முறத்தில் விபூதியிட்டுத் தேய்த்து மிணமிணவென்று வாயில் மிணறிக்கொண்டேயிருக்கையில் வனஜாக்ஷி தலை சுழற்றி யாடினள். அந்தணன் அத் தெய்வத்தின் வரலாற்றைச் சொல்லும்படிப் பலதரம் கேட்டும் அம் மனிதப்பேய் வாய்திறவாமையால், அவள்முன் மிளகாய் நெடிபோட்டு, ஒரு ஓலைநறுக்கில் யாதோ வொன்றை யெழுத்தாணிகொண்டு கிறுக்கி, அதோடு புளிய மலாறிட்டு உரலிற்போட்டு இடிக்கச்சொன்னான். அவர்க ளவ்வாறே செய்தபின் வனஜாக்ஷி ஒருதரம் வாய்விட் டலறினள்.

அந்தணன்:—கண்டகண்ட பெண்களைப்பற்றி திண்டுமிண்டு செய்யும் ஓ ஓ அலகையே! நீ இன்னும் துன்பமுறுவண்ணம் சீக்கிரமாக ஒழிகிறாயா இல்லையா? இந்தப் பெண்ணை எப்போது பற்றினாய்?

பேய் (தலைசுழற்றிக்கொண்டே) அடே! இந்தப் பெண் குளக்கரைக்கு வந்திருக்கும்போது அழகாயிருப்பது கண்டு நான் ஆசைப்பட்டுப்பிடித்துக்கொண்டேன். இப்போதுன்னுடைய சம்மதப்படி விட்டுவிடுகிறேன். ஆனால் எனக்கொரு இஷ்டமிருக்கிறது; அதை நீ பூர்த்திசெய்வதானால் விடுவேன். இல்லையானால் விடேன் விடேன்: முக்காலும் விடேன்.

அந்:—உன் இஷ்டமாவது யாது?

பேய்:—அடே! என் இஷ்டத்தையா கேட்கிறாய்? இந்தப்பெண்ணை ஆடையாலங்கிருதமாகச் சிங்காரித்து ஓர் அழகிய மூடுபல்லக்கில் நீயு மவளு மேறிக்கொண்டு, இவளைப் பெற்ற தந்தையும் சகோ

தாரும் புருஷனும் அதைச் சுமந்துகொண்டு வீதிப் பிரதக்ஷிணம் வந்தால் நான் விட்டுத்தொலேவேன். இல்லையானால் என்னை ஓட்டுவதற்கு உன்னாலும் உன்னைப்படைத்த நான்முகனாலும் முடியாதென்றறிதி! என்றுசொல்லி அட்டகாசஞ் செய்தது.

அந்:—அங்ஙனமே யாகுக. ஆனால் நீ இந்தப் பெண்ணைவிட்டு நீங்கியதற்கடையாளமாகவும் இவ்வீட்டார்க்குநம்பிக்கையுண்டாகும் பொருட்டும் நீ இவளைவிட்டுப்போகையில் இதோ இங்குள்ள மூன்று முருங்கைமரங்களில் நடுவிலுள்ள பெரியமரத்தில் ஒருகிளையை முறித்துவிட்டுப் போகவேண்டும்.

பேய்:—ஆ ஹா! அப்படியே செய்கிறேன்.

வனஜாக்ஷியின் கணவன் எப்போது இப்பேய் தொலையுமென்றிருந்தானாகையால், உடனே மூடுபல்லக்கொன்று தயார்செய்தான். அது வீதியில் வந்திருந்தது. வனஜாக்ஷி ஸ்நானஞ்செய்து விலையேறப்பெற்ற ஆபரணங்களணிந்து உயர்ந்த ஆடையுமணிந்தாள். ஈரான் முதலிய வாசனைத் திரவியங்கள் திமிர்ந்தாள். இப்போது அந்தணனும் வனஜாக்ஷியும் பல்லக்கிலேறி அதிலுட்கார்ந்தார்கள். உடனே முற்குறித்த நால்வரும் பல்லக்கைச் சுமந்துகொண்டு வீதிப்பிரதக்ஷிணம் செய்தார்கள்.

இங்ஙனம் பட்டப்பகல் சுமார் ஒன்றரைமணிக்கு அவர்கள் பல்லக்குச் சுமந்து போய்க்கொண்டிருக்கையில் வனஜாக்ஷி அதன்மேற் படுத்துக்கொண்டு தன்னைக் கூடும்படி வற்புறுத்தினள். பிராமணன் அவளிச்சையைப் பூர்த்திசெய்துகொண்டிருக்கையில் பல்லக்கு மிக அசைய, அதனைச் சுமப்போர் தாங்கமுடியாமல் ஓய் மாந்திரீக பிராமணா! ஏன் இப்படிப் பல்லக்கசைகிறதென்று கேட்க, அந்தணன் 'ஐயன்மீர்! நானென்ன செய்வேன்? வனஜாக்ஷியைப் பற்றியிருக்கும் பேய் என்னைக் கீழேதள்ளி மேலேறி இம்சிக்கிறது' என்றான். அதற்கவள் புருஷன் முதலிய நால்வரும் எப்படியேனும் சரிப்படுத்திக் குணமாக்கவேண்டுமென்று வேண்டிக்கொண்டார்கள்.

மையல்கொண்ட தையலாள் இன்பமனுபவித்தபின்னர் புன்னகைபுரித்து ஐயரே! என் தந்தை-கணவன்-சகோதரர் - முதலினோர் பல்லக்குச்சுமக்கவும், என்னிச்சையைப் பூர்த்திசெய்துகொண்டேன் கண்டாய்! நீ பழையபடி குளக்கரை சென்றிரு. நாங்களெவரும் அங்குவந்து காண்கிறோமென்று சொல்லி பல்லக்குவிட்டிறங்கி வீட்டி

னுட் சென்றாள். ஒரு நிமிஷத்திற்கெல்லாம் மரக்கிளையொன்று மள மளவென்று முறிபட்டு வீழ்ந்தது.

உள்ளே சென்ற வனஜாக்ஷி தன் நாயகனைக்கண்டு கோபித்து 'நீ என்னை ஒரு அன்னியமனிதனுடன் உட்காரவைத்து ஊர்வலம் வரச்செய்தது தகுதியாமா? நீ ஆண்பிள்ளையல்லவா? உன் முகத்தி லிருப்பது மீசையல்லவா?' என்றிகழ்ந்தாள். அவன் வெட்கித் தலைகுனிந்தான். அருகிருந்த அவனது சுற்றத்தார்கள் அவளிடம் நடந்தவிஷயங்களைச் சொல்லி சமாதானஞ்செய்தார்கள். அவள் சங் கதி தெரியாதவள்போல் வாளாவிருந்தாள். பேயோட்டிய அந்தண னுக்கு வேண்டும் பொருளளித்துக் களிப்பித்தனுப்பினர்.

மறுநாளுதயத்தில் வழக்கம்போல் ஐவரும் செப்புக்குடத்தை இடுப்பில் வைத்துக் குளக்கரையணுகி வேதியனைக் கண்டு, ஐயரே! குற்றம்பார்க்கிற் சுற்றமில்லை' என்றபடி நாம் குடும்பவாழ்க்கையி லுள்ள ஒவ்வொரு காரியத்தையும் நுழைந்துபார்த்து ஆராயப் புகுந்தால் பெரும்பாலும் குற்றமாகவே முடியுமாதலால் நீர் உமது மனைவியை வெளிவிவகாரத்தில் செல்லவிடாமல் காத்திருந்து காலத் தைக் கழித்துவிடும். நாயகன் மனைவியைக் கட்டுப்பாடு செய்வதனால் யாதொரு பயனு மடையான். இதனை மெய்ப்பிக்கவே 'அறக்காப் போன் பெண்டிழந்தான்' என்னுமோர் பழமொழியும் வழங்குகின் றது. மடக்கிமடக்கிக் கூறுவானேன்? பெண்களாவார் தாமே பச் சாத்தாபப் பூததயாளங்கொண்டு நடந்தாலன்றிப் புருஷராவார் பெண்களை வேறுவிதத்தில் ஜயிக்கமுடியாதென்றுகூறி அவரவர் கொண்டுவந்த குடங்களில் நீர்முகந்து வீடு சென்றார்கள்.

வைதங் கைவந்த வேதியனை தன் மனைவியும் இத்தகைய சாக் கிருத்தியமுடையவளோ வென்று துணிந்து விசனாக்கிராந்தனாய் வீடு சென்று தன் மனைவியிடம் நன்றாய்ப் பேசாமலிருந்தான். அதனால் வனஜாக்ஷி தன் அந்தரங்கம் புருஷனுக்குத் தெரிந்துவிட்டது போலு மென்று ஐயுற்றவளாய் கணவனுக்குச் செய்யவேண்டிய பணிவிடை களை அதிஜாக்கிரதையோடு செய்துவந்தாள். ஒருநாள் அவளது சோரநாயகன் அன்றிரவு தான் வருவதாக ஒராள்வசம் சொல்லியனு ப்பினான். அதற்கவள் 'என்நாயகன் தன்னுடைய நீசெயமுந் தங்களைத் தெரிந்துகொண்டிருக்கிறானென்றும் ஆகவே இச்சமயம் வரவேண்டாமென்றும் சொல்லியனுப்பினாள். 'ருசிகண்ட பூனை

அடுப்பங்கரையைச் சுற்றும்' என்னுமாப்போல, அச்சோரநாயகன் தாளவசமல்லவென்றும், தப்பாமல் வருவதாகவும் தயாரா யிருக்கும் படியும் தெரிவித்தனுப்பிய செய்தியை மீண்டுங் கேட்ட வனஜாக்ஷி மனமுடைந்து தன்னிடம்வந்துசொன்ன தூதனிடம் தானே தன் சோரநாயகனிடம் வந்து சுகந்தருவதாகச் சொல்லி யனுப்பினாள். வனஜாக்ஷி அன்றிரவு புருஷனுக்கு அன்னம்படைத்துச் சுகந்த பரிமளங் திமிர்ந்து மஞ்சத்திலிருந்து மருவினள். சிறிதுநேரத்திற்கெல்லாம் பிராமணன் கொறட்டைவிட்டுக்கொண்டு கும்பகர்ணஞ்சேவிப்பதை யறிந்த அவன் மனைவி அடுத்த வீதியிலுள்ள ஓரிழையம்பட்சியை வரவழைத்து அவளிடம் பத்துவராகனெடுத்துக்கொடுத்து அடியே! சிறிதுநேரத்திற்குமுன் நானும் எனது நாயகனும் கூடிச்சுகித்தோம். நான் இப்போது ஒரு காரியார்த்தமாக வெளிச்செல்லவேண்டி யிருந்ததலால் நான் வருந்தனையும் நீ என் நாயகனிடம் சயனித்திரு. இனி அவருன்னைப் புணரார் என்றுசொல்லி அவளைக் கட்டிலின்மேற் சயனிப்பித்து முன்னமே தயார்செய்துவைத்திருந்த பலகார வகைகளையெடுத்துக்கொண்டு குறித்தவிடஞ்சென்று சோரநாயகனோடு கூடிச் சுகித்திருந்தாள்.

இவளிங்கிப்படியிருக்க, அந்தணனிடம் சயனித்திருந்த அம்பட்சியின்மேல் பிராமணன் தன் கையைச்சேர்த்துச் சரசவார்த்தைகளாடியபோது, அம்பட்சி எட்டயெட்டப்போய்ப் படுத்தாள். அந்தணனுக்குக் கோபத்தீ ஜொலித்து தலையணையின்கிழிருந்த கத்தியையெடுத்து அவளைச் சேர்த்துப்பிடித்து மூக்கையரிந்துவிட்டான். அம்பட்சி 'உப்புக்கண்டம் பறிகொடுத்த பிராமணத்தி' யைப்போல் வாய்பேசாமல் ஓடினாள். உதிரப்பிரவாகத்தால் மஞ்சமுழுது நனைந்தது. பின்னர் வனஜாக்ஷி வீடுவந்தபோது அம்பட்சி குய்யோமுறையோவென் றழுது நடந்ததை நடந்தபடி யறிவித்து அடிபாவி. உன் பத்துவராகனுக்கு ஆசைப்பட்டுப் பாவிநான் மூக்கிழந்தேனே யென்று கதறிக்கொண்டே மூக்கைக் கையி லெடுத்துக்கொண்டு வீடு சென்றாள்.

வனஜாக்ஷி கைகா லலம்பிக்கொண்டு தன்புருஷன் படுத்திருக்கும் பஞ்சணைக்குச் சிறிதருகில் நின்று "ஓ காலகண்ட திரிநேத்திரமான்மழு சதுர்ப்புஜங்களுடைய சிவபரம்பொருளே! ஆகாயவாணியே! பூமிதேவியே! மற்றுமுள்ள தேவர்களே! நான் என் கணவ

னையன்றி வேறு புருஷனை மனத்திலும் நினையாதவளாயிருந்தால், என் ஆசைநாயகன் கோபித்தறுத்த இந்த மூக்கானது பழயபடி காயந்தெரியாமல் ஒட்டிக்கொள்ளக் கடவதென்று உரத்துக்கூவினாள். மறுகணத்தே தன் இஷ்டத்தைப் பூர்த்திசெய்த தெய்வத்துக்குப் பல கோடி வந்தனஞ் செய்கிறேன் என்று விளக்கேற்றிக் கண்ணாடியில் தன் முகத்தைப் பார்த்துக் களித்தாள். இதையெல்லாம் அவள் புருஷன் நித்திரை நீங்கிக் கேட்டும் பார்த்துமிருந்தனனாதலால் திடீரென்று மஞ்சத்தைவிட் டெழுந்திருந்து மனைவியிடம் வந்து அவள்முகத்தில் தன்னால் அரியப்பட்ட நாசியானது ஒட்டிக்கொண்டிருப்பதைக்கண்டு ஆச்சரியமும் பயமுங்கொண்டு 'என் அன்புக்குரிய அணிகலமே! உன்னுடைய கற்பின் பெருமையை யுணராமல் உன்னைத் துன்பத்திற் காளாக்கினேன். இப்போ துன்பெருமையையறிந்தேன். உன் வாயா லென்னை யொன்றுஞ்சொல்லிச் சபியாதிருக்க வேண்டுகிறே'னென்று அவள் பாதத்தை இறங்கிப் பிடித்துக்கொண்டான். வனஜாக்ஷி, நாதா! என் காலைப் பிடித்து என்னைப் பாபத்துக் குள்ளாக்கவேண்டா மென்று அவனைக் கட்டித் தழுவி முத்தமிட்டு யாத்திராவிசேஷத்தைப்பற்றி நாயகனை வினவ, அவன் பெண்கள் ஐவர் தன்னிடங்காட்டிய தந்திரத்தைக் கூறினன். வனஜாக்ஷி அவர்கள் கெட்டார்கள் அவிசாரிமுண்டைகள் என்று கூறி (இனி என்னை உன் குலதெய்வம்போற் பாவித்து என் பாதத்தை வணங்கிக்கொண்டிரு) வென்று தன்னுளெண்ணி அன்றுமுதல் தன் சோரநாயகன் வீட்டுக்குத் தாராளமாய்ச் செல்லலானாள். இஃதிப்படி யிருக்க,

மூக்கறுப்புண்ட வண்ணாத்தி தன்கணவனிடஞ்சென்று படுத்து கூகூவென்று கூவினாள். அது பொழுதுவிடியுஞ் சமயமாயிருந்தமையால் அண்டை யயலிலுள்ளோர் ஓடோடியும்வந்து படுக்கையறையில் இரத்தஞ் சிந்துண்டிருந்ததைக்கண்டு பயந்து அவளை என்ன விஷயமென்றுகேட்க, அப்படச்சி தன்புருஷன் அன்றிரவு தன்னை ஒரு தரமணைந்தது போதாமல் மறுதரமுங் கூடுவதற்குத் தொந்தரை செய்ததாகவும், அதற்குத் தானிணங்காமையால் மூக்கை வெடுக்கென்று கடித்துவிட்டதாகவும் சொன்னாள். இதற்குள் அங்கு சேவகர்கள் வந்து இருவரையும் பிடித்துச் சென்றார்கள். அவர்களைச் சூழ்ந்து சென்ற ஜனங்கள் கணக்கிறந்தவர்களாயிருந்தனர். அப்படச்சியின் புருஷன் திப்பிரமை கொண்டு நடந்துசென்றான். அவனைப் பலரும்

பலவாறு தூஷித்தார்கள். சிறிதுநேரத்திற்கெல்லாம் சேவகர்கள் அவர்களை மேலதிகாரியிடம் கொண்டுபோய்ச் சேர்த்தார்கள். அவர் அம்பட்டச்சியைத் தந்திரமாக விசாரிக்க அதற்கு மறுமொழிகூற முடியாமல் நடந்தவிஷயத்தைக் கூறி முடித்தாள். அதிகாரி, பிராமணன் பிராமணத்தியையு மழைத்து நடந்த சங்கதியை உள்ளபடி சொல்லும்படி கேட்க, அந்தணன் ஆதியோடந்தமாகக்கூறினன். வனஜாக்ஷி இனி மறைப்பதிற் பயனில்லையென்று தன் யோக்யதையைச் சொல்லி யொழித்தாள். மேலதிகாரி எல்லாங் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து முன்னர்த் தங்கள் கணவர்களை ஏமாற்றி அன்னியபுருஷனைப் புணர்ந்து தங்கள் வல்லமையைக் காட்டிய ஸ்திரீகளைவரையும் பிடித்துவரச்சொல்லி அவர்கள் வாய்மொழியையுங் கேட்டு அம்பட்டனை விடுவித்து, அந்தணனுக்கு ஸ்வல்பதண்டனை விதித்து ஏனையோர்க்குத் தூக்குத்தண்டனை உறுதிசெய்தார்.

அரசே! வீரவர்ம! யான் இப்போது ஸ்திரீ விஷயமாகச் சொல்லியவற்றைத் தாங்கள் கவனித்திருப்பிரேல் அதன் முடிபு இன்னதெனவிளங்காமற்போகாது. உலகத்திலுண்டாகுந்துன்பங்களெல்லாவற்றினும் ஸ்திரீகளாலுண்டாகுந் துன்பமே கொடிதும் மிகப்பெரிதுமாம். ஸ்திரீகள் எப்போதும் வஞ்சநெஞ்ச முடையவர்கள். எங்கள் அரசர்பெருமானது செல்வப் புதல்வரே! பெண்களினுடைய உண்மை இப்படியிருக்க, நீர் முகமறியாத ஒரு பெண்ணின்மீது காதல்கொண்டு வேளைக்கு உணவு முதலியன ஏற்றுக்கொள்ளாமல் கிள்ளியெறிந்த மலர்போல் வாடியிருத்தலால் நீர் கடைசியில் அடையும்பயனென்னை? ஆசைகொண்டு மோசம்போதலேயன்றி வேறொரு பிரயோஜனமுமின்று. தங்கள்கருத்து யாதெனவறியேன் என்று மந்திரி கூறிப் பேசுவதை நிறுத்தினன்.

வீரவர்மன் தன்னிடமுள்ள படத்தையெடுத்துக்காட்டி 'மந்திரீ! நீ சொல்லிவந்த கதைக்கு, என் ஆசைவெள்ளத்தைச் சுவரச்செய்யும் ஆற்றலின்மையால் அது வீண்கதை யாயிற்று. (படத்திற்கு முத்தந்தந்து) என் உயிரைக் கவளீகரிக்கும் வல்லமை வாய்ந்துள்ள உன்னை எப்போது காண்பேன்! என்று அரசன் அப்படத்தைச் சின்னேரம் உற்றுப்பார்த்திருந்து கீழே சாய்ந்து மறுபடியுமெழுந்து யாதொன்றும் பேசாமலிருந்தான். மந்திரி பயனின்றெனத்தெளிந்து அவ்விடம்விட் டகன்று வீரவர்மன் வீடு சென்றான்.

பின்னர் மந்திரிமார்களியாவரும் வீரவர்மன் றந்தையிடஞ் செ
ன்று நமஸ்கரித்து நின்று அரசே! எங்கள் முயற்சி முற்றும் விழ
லுக்கிறைத்த நீர்போல் அவமாகியது. நாங்கள் கற்ற கல்வியளவு
பல இனிய கதைகளும், சமயோசிதமான யுக்திவார்த்தைகளும் பழ
மொழிகளுமெடுத்துக்கூறி ஸ்திரீகளினுடைய சேர்க்கை மிகக்கொடி
தென் றெடுத்துக்காட்டியும் செவிடன்காதிற் சங்கொலிபோல முடி
ந்தது. ஆகவே இனி வாய்ச்சொல்லாற்காரியமில்லை. கருமானுலையிற்
காய்ச்சிய இரும்புண்ட சலமும், அணைகடந்த வெள்ளமும், யானை
தின்ற கரும்பும், பாம்பு விழுங்கிய தேரையும், எமன் கைக்குள்ளான
உயிரும் ஒருவேளை திரும்பினுந் திரும்பும். தேவரீருடைய செல்வக்
குமாரனாகிய வீரவர்மன் மதனலீலாவதியின்மேல் வைத்துள்ள மனம்
நமது பக்கம் ஒருக்காலுந் திரும்பாது. இன்னுஞ் சிலநாள் இம்மோ
கத்திலேயே முழுகவிட்டிருந்தால் முதலுக்கே மோசம்வரும். ஆகவே
ஆலசியஞ் செய்யாமல் வனஜாக்ஷியின் றந்தைக்கோர் கடிதமெழுதி
அச்சுந்தரவதியைத் தங்கள் புத்திரனுக்கு விவாகஞ் செய்வித்தலே
உத்தமமாகும் என்றார்கள்.

அரசன் அம்மந்திரிகளின் கருத்துக் கிணங்கி அடியில் வரு
மாறு கடித மெழுதலானார்.

**கடிதம்.**

சுகந்தபுரி.
தைமாதம் 14உ

சுபம். நீர்வள நிலவள முதலிய குறைவின்றிச் செழித்தோங்கா
நின்ற புஷ்பபுரியை நீதியோடு அரசாண்டு பெருங்கீர்த்தியுற்று விள
ங்கும் தினகர னென்னும் அரசர்பெருமானே!

அண்டசராசரங்களனைத்தும் தந்திரட்சிக்கும் தனிப்பெருஞ்
சிவத்தின் றண்ணருளால் இவிடம் க்ஷேமம்; அங்ஙனமே தங்களு
டைய க்ஷேமாதிசயத்தைத் தெரிந்துகொள்ளப் பெரிதும் விருப்புறு
கின்றேன். நிற்க, தம்முடைய செல்வப்புதல்வியாகிய சௌபாக்கிய
வதி மதனலீலாவதியை, அரசர்க்குரிய வித்தையிலும் கல்வியிலும்
யோசனைசக்தியிலும் வெற்றியிலும் மற்றெல்லாப் பெற்றியிலுஞ் சிறந்த
எனது தவக்குமாரனாகிய வீரவர்மனென்பவனுக்கு விவாகஞ் செய்வி
க்கவேண்டுமென்னுமெண்ணம் எனக்குப் பெரிதுமிருப்பதால் அதனை
இன்று தங்களுக்குத் தெரிவித்துக்கொண்டேன். நாமிருவரும் சம்
பந்தஞ் செய்துகொள்வதற்கு ஜாதி குலம் - கோத்திர முதலியவை

களைப்பற்றியேனும், செல்வத்தைப்பற்றியேனும் விசாரிக்கவேண்டிய தின்மையால், நம்முடைய சம்பந்தம் நீடூழிகாலம் இந் நிலவுலகத்தில் விளங்கும்படி யெண்ணி என்னுடைய கருத்தை நிறைவேற்றுவீர்களென்று நம்பியுள்ளேன்.

உடனே பதில் தெரிவிக்கக் கோருகிறேன்.

இங்ஙனம்:
சுசீலசக்கரவர்த்தி.

இவ்வாறெழுதியகடிதத்தை ஓர்வேவுகாரனிடங்கொடுக்கஅவன் முப்பதுநாள்வரையு நடந்துபோய் புஷ்பபுரியை யடைந்து தினகரனென்னுமரசன் கொலுமண்டபஞ்சேர்ந்து அரசனை நமஸ்கரித்துத் தன்கையிலிருந்த கடிதத்தைநீட்டினான். தினகரன் தன் சமீபத்திருந்த முதன்மந்திரியைக் கடைக்கண்ணாற் பார்க்க, அம்மந்திரி கடிதத்தை வாங்கி அரசனுக்கு வாசித்துக்காட்டினான். சின்னேரத்தில்அரசனுடைய அழகிய முகம் சிவந்தது. புருவம் நெற்றிமேலேறியது. மீசை துடித்தது. வலதுபுஜம் படபடத்தது. உடனே அரசனுக்குக் கோபநகையுண்டாகி 'அடே! ஆ! ஆ! உன்னுடைய தீரத்வத்துக்கு மெச்சினேன். அட மசகமே! என்னும் வார்த்தைகள் அவன் வாயினின்றும் தட்டுக்கெட்டு வந்தன. அப்பொழுதே அருகிருந்த மந்திரியை நோக்கி, 'அமைச்ச! எமது யோக்யதாம்ஸத்தைச் சிறிதும் கவனியாமல்எமது புதல்வியைத் தன்மகனுக்குக்கேட்டனுப்பிய சுகந்தபுரியரசனுக்கு வெட்கமுண்டாகும்படி ஒரு கடித மெழுதியனுப்பென்றுகூற, அவன் அடியில்வருமா றெழுதலானான்.

புஷ்பபுரி.
பதில்கடிதம். மாசிமீ 15வ

சுகந்தபுரியிலிருக்கும் சுசீலனுக் கெழுதிய உத்தர மாவது,— உன்னுடைய பூர்வஸ்திதியை யோசியாம லெழுதிய கடிதத்தைப் பார்த்துப் பூரித்தேன்! ஹா! உன் மனோகர்வத்தை நினைக்குந்தோறும் கோபமும் பெருநகையும் தோள்நமையு முண்டாகிறது. உனக்கு மெனக்குமுள்ள ஏற்றத்தாழ்வானது சிங்கத்திற்கும் நரிக்கும் எவ்வளவுண்டோ அதனினு மதிகமென்னலாம். மேலும் நீ என்னைப் பெண்கேட்கப் புகுந்தது எத்தன்மைத்தெனின், சிறுகாலனென்னுங் குள்ளநரி யொன்று பெண்கேட்கப் புகுந்த கதையை யொத்துளதேயன்றி வேறன்று. அஃது எவ்வாறென்னில்,

[பிணைக்கைதந்தின்னூர் ஒருநரியானது, ஓர் ஆண்சிங்கத்தை நோக்கி 'நீயுங் கொடுங்காட்டில் வாஸம். நானும் சுடுகாட்டில் நிவாஸம். உனக்கும் நாலுகால். எனக்கும் நாலுகால். உனக்கும் தோகைவால். எனக்கும் தோகைவால். நீயுங் கூவுகின்றாய். நானுங் கூவுகின்றேன். ஆனால் உன்னிலும் நான் சிறிது அதிகம். அதென்னெனின், நீ மலையி லிருக்கிற யானையை யடிக்கிறாய். நான் வலையிலுள்ள நண்டைப் பிடிக்கிறேன்! நீ யானை யுதிரத்தைப் பருகுகிறாய். நான் மனிதத்தசையை யுண்கிறேன். இக் காரணத்தால் உன்னைப் பார்க்கிலும் நான் வல்லமையுடைத்தானவன்தான். எனக்கு உன் பெண்ணைக் கொடுக்கயாதுதடை என்று நரி சொல்லியதைக் கேட்ட மிருகராசன் சந்தோஷித்துப் பெண் கொடுப்பதாகக் கூறி, சம்பந்தி நரியைத் தன்னுடன் அழைத்துக்கொண்டு வனத்தை நோக்கிச்செல்கையில் தனக் கெதிரிட்ட யானையைக் கண்டு சிங்கம் கர்ஜித்தது. அச் சத்தத்தால் யானை நடுநடுங்கி லத்தையிட்டு பூமியிற் சாய, அப்போது நரியானது விரைந்து பாய்ந்து அந்தயானையின் குதத்தைப்போய்க் கவ்வியது. சிங்கம் உடனே அவ்விடம்விட் டகன்றது. தன்னைச் சிங்கம் விட்டுச்சென்றதைக் கண்ட யானை லத்தையிட்ட குதத்தைச் சுருக்கிக்கொண் டெழுந்திருக்கையில் நரியின் கழுத்து யானையின் அபானத்துக்குள் அகப்பட்டுக்கொண்டு அரைத்தூக்குப் போட்டதுபோல் தொங்கிக் கொண் டிறந்த தென்பர்.]

* * * * * * * *

ஓ சுசீலனே! நீ என்னைப் பெண் கேட்டது இக் கதையையே ஒத்திருக்கிறது. இனியேனும் உனக்குள்ள கர்வத்தை யொழிக்கிறேனென் றெழுதி, அரசன் கைந்நாட்டிட்டு, முன் கடிதங்கொண்டுவந்த ஆள்வசம் கொடுத்தனுப்பினான்.

வேலைக்காரன் ஒருமாதங் கழித்து நந்தாபுரிவந்து சுசில வாசனிடம் கடிதத்தைக் கொடுத்தான். அதனை யரசன் பிரித்துப் பார்த்து துக்காக்கிராந்தனாய்ச் சின்னேரம் சித்திரப்பாவைபோல் அசைவற்றிருந்து தன் புத்திரனுடைய துரதிர்ஷ்டத்தை யெண்ணியிருந்தான். மந்திரிமார்கள் கடிதவிஷயமொன்றும் புலப்படாமல் ஐயுற்றிருந்தனர். சின்னாள் சென்றபின் கடிதவிஷயம் எப்படியோ அரசகுமாரன் செவிக்கு எட்டியது.

---

### வீரவர்மன் தன் தந்தையைக் காணல்.

ஒருநாள் சுசீல னென்னு மரசன், புஷ்பபுரிக்கரசனாகிய தினகர னெழுதிய கடிதத்தை நினைத்து மனம்வருந்தியிருக்கையில், சுசீல னுடைய புதல்வனாகிய வீரவர்மன் தந்தையிடம்வந்து அவன் காலில் விழ்ந்து பணிந்து 'அண்ணா! தினகரனெழுதிய கடிதத்தால் என தெண்ணத்திற்கிடையூறு நேர்ந்ததுபோலும்! நமக்கோ அவனை எதிர்த்துச் சயிக்குமாற்றலில்லை. இவ்வெல்லாவிஷயமும் துன்பத்திற்கேது வாயிருத்தலால், நான் சிலநாள்வரை யாத்திரை செய்யுமாறெண்ணித் தங்களிடம் விடைபெற்றேக வந்தனன். உத்தரவுசெய்யவேண்டு' மென்றான். அவ்வாறு கூறிய மகனைச் சேர்த்தணைத்து முத்தமிட்டு ஆ! மகனே! வீரவர்மா! என்கண்ணே! யாதுகூறினாய்? மற்றொருதரம் சொல். யாத்திரையா செய்யப்போகின்றனை? அப்பனே! உனக்கு இங்கு யாதுகுறை நேர்ந்தது? உன்னை யான் புத்திரனாக அடைதற்கு உன் தாயும் நானுமாக எத்தனையோநாள் விரதங்க ளிருந்தும், யாகங்க ளியற்றியும், சத்திரங் கட்டுவித்து இரவும் பகலும் ஓயாமல் அன்னதானஞ்செய்தும், ஆலயங்கள் புதுப்பித்தும், பிற சற்கருமங்களெல்லாம் செய்தும் பலநாள் சென்று நீ ஒருவனே எங்களுக்கு மகனாகத்தோன்றி எங்களைக் களிப்பித்தாய். நீ எங்கள் வயோதிகதசையில் விட்டுப் பிரிதல் புத்திரனாகிய உனக்குத் தக்கதாமோ? எங்களுக்கு ஈமக்கட னியற்றி நற்கதிக் குள்ளாக்கவேண்டி யல்லவோ பன்னாள் பட்டினி கிடந்ததும் விரதங்கள் புரிந்ததும்? மகனே! எங்களைத் தனியேவிட்டு உன்னுடைய செல்வத்தையும் சுகத்தையுந் துறந்து செல்ல உன்மனம் எவ்வாறு சம்மதித்தது? எழில்வதனா! நீயோ சிறுவன். இந்நாள் தனையும் எங்களைவிட்டுப்பிரிந்து வேற்றூர்சென்றறியாய். எங்களுக்குப்பின் நீ உன்னிஷ்டப்படி நடந்துகொள்வது தக்கதன்றி, நாங்களிருக்கையில் உன்னிஷ்டப்படி நடக்கவிடுவது எப்படிக்கூடும்? மகனே! 'தந்தைசொன் மிக்க மந்திரமில்லை' என்னும் நீதிவாக்கியத்தைக் கடைப்பிடித் தொழுகுவாயாக. என் சொல்லைத் தடுத்துச் செல்வாயாகில், ஒன்றையொன்றுவிட்டு நீங்கிய மாடப்புறாவுக்கு நேர்ந்த அவதிபோல் நீ துன்பத்துக்குள்ளாவாய் என, வீரவர்மன் மாடப்புறாவுக்கு நேர்ந்த ஆபத்தென்னென்று வினவ, சுசீலன் சொல்லத் தொடங்கினான்.

மாடப்புறாக்கதை—மகனே! கேள். பல்வகை மரஞ் செடிகள் அடர்ந்ததோர் கானகத்திலிருந்த நிலவிருக்ஷத்தில் மாடப்புறாக்க

திக்கு வியந்து மகிழ்ந்து, அடங்காப்பசியா லுள்ளுடைந்து அங்கு நின்றும் பறந்துபோய் ஒரு காட்டி லிறங்கி இரை தேடிக்கொண்டிருக்கையில், முன் பாம்பு தீண்டி உயிர் துறந்த வேடன் அங்கே ஒரு கண்ணிகுற்றிவைத்து அதனடியில் தான் வளர்த்துப் பழக்கிய ஒரு தீபகப் புறாவைக்கட்டி கூவக்காட்டி இரை தெளித்திருந்தான். அச் சூதை இப் புறா வறியாமல் அங்குத் தன் இனமிருப்பதாக வெண்ணிப் பசியாறும்படிப் பறந்துசென் றுட்கார்ந்து இரை மேய்ந்து கண்ணிக்குட் சிக்கிக்கொண்டது. படபடவென்றடித்துப் பறக்கப் பார்த்து முடியாமல் இறந்ததுபோல் வீழ்ந்து மீண்டெழுந்துஅங்குக் கட்டியிருக்கிற தீபகப்புறாவைப் பார்த்து ஐயோ! என்னைச்சேர்ந்த இனமே! உன்கர்மவினையால் நீதா னகப்பட்டுக்கொண்டாய்! நான் தெரியாமல் வந்தபோது என்னைத் தடுத்திடலாகாதா வென்று சினந்து அதனை மூக்காற் கொத்தியது. தீபகப்புறா நோய்பொறுக்க முடியாமல் படபடவென்று இறகையடித்துக்கொண்டதனால் காலிற் கட்டியிருந்த கயிறறுந்து பறந்தோடியது. புறா கண்ணியை இழுத்துக்கொண்டு பறக்கையில் அக்கண்ணி எங்கோ ஓரிடத்தில் ணைந்திருந்தமையின் அறுந்துவிழுந்தது. புறா மேலே பறந்து மற்றோர் கொல்லையிற்போய் கம்பைக்கொத்திக்கொண்டிருக்கும்போது அதற்குக் காவலாயிருந்த பையன் கவண்டுக்கல்லா லெறிந்தான். அது புறாவின்மேற்றாக்கி ஒருபக்கத்து இறகுமுறிந்து பக்கத்திலிருந்த பாழுந்துரவில் விழுந்து பதைபதைத்துத் தேகமெல்லாநனைந்து மெலிந்து கூவிஆவி குலைந்திருக்க, ஒரு கருடன் தாவி விழுந்து அந்தப் புறாவைக் காலில் தாவிச் செல்கையில் அதன் காலைவிட்டுத் தவறி ஒருகோயிலின்முன் வீழ்ந்து தத்தித் தடுமாறி கோயிலுக்குள்ளே நுழைந்து சலதாரையுட் பதுங்கி சிலநாள் கோயிற்பிரசாத சேஷத்தை வயிறார உண்டு, தேகங் குணப்பட்டு ஒடிந்த இறகும் செவ்வனே கூடியபின் தனது நாயகியாகிய பெண்புறா வாழுங் கானகத்திற்குச் சென்றது. ஆண்புறாவைக்கண்ட பெண்பறவை அகமகிழ்ந்து யாத்திரா விசேஷத்தைக் கேட்டுப் பரிகசித்து முன்போல் இரண்டும் கூடி வாழ்ந்திருந்தன.

என் கண்ணே! வீரவர்ம! அன்புடையாராகிய தாய்தந்தையர் பன்னி முதலினோருடைய சொல்லைக் கடந்துச் செல்லுதலானது எப்போதும் துன்பந்தருவதாகும். ஆகவே பெண்புறாவின் பேச்சைக் கேளாது சென்று துயருற்றதுபோல், நீ என் சொல்லைக் கடந்துச் சென்றால் வருந்துவா யென்று கூறினான்.

தந்தைசொல் முழுதுங்கேட்ட வீரவர்மன் புன்னகைபுரிந்து அண்ணு! ஒருராஜாளிப்பார்ப்பு நன்மையடைந்த சரிதத்தை நீங்க ளறிந்திருந்தால் இக்கதையை எனக்குச் சொல்லியிருக்கமாட்டீர் என, சுசீலன் அதைக் கூறும்படிக் கேட்க, வீரவர்மன் சொல்லத் தொடங்கினுன்.

---

இராஜாளிப்பார்ப்பின்கதை:—செறிந்தடர்ந்து நெருங்கிய தில்லைக் காட்டில் செழித்தடர்ந்ததோர் மரத்தில் ஆண்பெண்ணுகிய இரண்டு ராஜாளிப் பக்ஷிகள் கூடுகட்டிக்கொண்டு முட்டையிட்டுக் குஞ்சு பொறித்து அதனைப் போஷித்துவரும்போ தொருநாள்பொழுதும்போ ந்தனையும் விடாமழையாயிருந்தமையின் தம்முடைய*பார்ப்பு இரை யின்றி வாடிக்கிடப்பதைத் தாய்தந்தையர் பார்த்துச் சகிக்கமுடியா மல் சிறிது மழையோய்ந்ததே இரண்டு ராஜாளிப் பக்ஷிகளும் தம் முடைய குஞ்சை மரத்திருத்தி இரைகொண்டுவர ஒய்யெனப் பற ந்து சென்றன. இங்கே ராஜாளிப் பார்ப்பானது பசிபொறுக்க முடியாமல் கூடின்மேல்வந் துட்கார்ந்து நான்கு திசையும் சுற்றிச் சுற்றித் தலை நடுக்கப் பார்த்து வாய்விட்டுக் கத்தி யழுதுகொண் டிருக்கையில் திடீரென்று பெருங்காற்ருென்றெழுந்து வீசியடித்த தால் அந்தப் பார்ப்பானது பந்துபோல்சுருண்டு கீழேவிழ வந்துகொ ண்டிருக்கையிலேயே ஒரு பருந்தானது கண்டு நமது குழந்தைகட்கு இன்று நல்லுண வகப்பட்டதென்று பறந்துவந்து தன்காலாலுராஞ் சிக்கொண்டுபோய்த் தன் குஞ்சுகளிடம் வைத்து இராளிக்குஞ்சை தன் மூக்காற் கொத்தி மாமிசத்தையெடுக்க யத்தனித்தபோது, அக் குஞ்சு அடிக்கடி வாயைத்திறந்து எளியமுகங் காட்டியதனுல் பெரும் பருந்துக்கு அதன்மேலிரக்கமுண்டாகித் தன்குஞ்சுகளோடு அதையு மொன்ருய்வைத்து வளர்த்துவந்தது. சின்னுட் சென்றபின் பருந் தின் குஞ்சுகளெல்லாம் தத்திப்பறந்து நத்தை-நண்டைப் பிடித்துத் தின்றுவந்தன. இராஜாளிப் பார்ப்போ இரையெடுக்கச் செல்லாது மரத்தின்மீதே உறக்கம்பிடித்திருந்தது.

ஒருநாள் பருந்து ராஜாளிப்பார்ப்பை நோக்கிக் குழந்தாய்! நீ யேன் பிள்ளைகளோடு சேர்ந்து இரைதேடச் செல்லாமல் வாடிக்கிட க்கின்றனை? என்று வினவ, இராஜாளி ஐயா! நான்மிக்க பயத்தோடு வணக்கமாய்க் கேட்டுக்கொள்ளுகிறேன். அதற்கு நீங்கள் கோபஞ்

---

* பார்ப்பு - பறவைக் குஞ்சு

செய்யாமலிருக்கவேண்டும். அதாவது, நான் உங்களுக்குப் பிறந்த வனாயிருப்பேனாயின் உங்கள் குழந்தைகளுடன் நானுஞ் சென்று கண்டத்தைத் தின்று காலங்கழிப்பேன். எனக்கோ அற்பஸ்துக்களைத்தின்னச்சிறிதும் மனமில்லாமல் என்போன்ற பக்ஷிஜாதிகளைப் பிடித்துத் தின்னவேண்டுமென்று நினைவேமிகுந்திருப்பதால் என்னைப் பெற்ற தாய் தந்தையர் வேறே இருக்கவேண்டும்; அவர்களைத் தயைசெய்து தெரிவிப்பீர்களாகவென்று பிரார்த்திக்கிறேனென்றது. அதற்கு அக் கள்ளப் பருந்து மகனே! அதென்ன அப்படிக் கேட்கிறாயே! உள்ளபடி நீ எனது புதல்வன்தான். உன்னைப்பெற்றதாயும் இதோ யிருக்கிறாளே! வேண்டுமானால் அவளைக் கேட்டுத் தெரிந்து கொள் என்றது. பெண் பருந்தும் தன் குழந்தையென்றே சொல்லிற்று. அப்படியானாலிருக்கட்டும். நான் சிலநாளைக்குத் தங்களைவிட்டுப் பிரிந்து வனசஞ்சாரஞ்செய்துவர இஷ்டப்படுகிறேன். போகவிடை தரவேண்டுமென்றது. பருந்துகளிரண்டும் தடுத்து, நீ எங்களைவிட்டுத் தனியே வெளிச்செல்வாயாயின் துன்புறுவா யென்று பலவாறெடுத்துக்கூறியும் ராஜாளி கேளாமல் விர்ரென்றெழுந்து வட்டமிட்டு ஆகாயத்திற் கிளம்பியபோது தாய் தந்தை யென்று பொய்ம்மொழி பகர்ந்த கள்ளப்பருந்துகளும் அவற்றின் குஞ்சுகளும் கலகலத்துத் தளர்ந்தன. கொக்கினங்களும் பிற பறவைக் கூட்டங்களும் தத்தளித்து விலவிலவென் றுதைத்துக்கொண்டன.

இவ்வாறு சென்ற ராஜாளியானது பெரியதோ ராரணியத்திற் சென்று வசித்து பல பக்ஷிஜாதிகளைப் பிடித்துத் தின்று பருத்து யதேச்சையாய்த் திரிந்து காலங் கழித்துவருகையில் ஒருநாள் அக் காட்டில் வேட்டையாடவந்த ஓரரசன், தங்காபரணங்கள் தரித்துத் தான் வளர்த்திருந்த ஓர் ராஜாளியை ஒரு சிறு குருவியின்மேல் விட்டான். அது அதிவேகத்தோடு பறந்து வருகையில், காட்டில் வசித்திருந்த ராஜாளி கண்டு சடக்கென் றெழுந்து பறந்து சிறகடித்து அரசன்விட்ட ராஜாளியைப் பறக்கடித்துத் தான்முந்திப்போய் அந்தப் பக்ஷியை ஒரு அழுக்கா யமுக்கியது. அதைக்கண்ட அரசன் போராச்சரியமுற்று வேட்டைக்காரர்களிடம் அந்த ராஜாளியைப் பிடித்து வரும்படி உத்தரவுசெய்ய, அவர்கள் அதனைப் பிடித்துக் கண்களைத் தைத்து அரசனிடங் கொடுக்க, அவன் அதற்குச் சிலநாள்வரையில் நல்லமாமிச இரைகள் கொடுத்துப் பக்ஷியாய் வளர்த்துக்கண் கட்டை

பளித்து வேட்டைமேல்விட காட்டிலுள்ள பறவைகளை ஒருநிமிஷத்தில்பத்துப்பதினைந்தாகப்பிடித்துவந்து அரசனிடந்தரச்சந்தோஷித்து அதற்கு அழகியபல ஆபரணங்கள்பூட்டி அலங்கரித்து, உயர்ந்த பகைமலால்கவசனையிட்டுக் கைவிடாது வளர்த்துவந்தான். அண்ணே! அவ் விராஜாளி கள்ளப்பருந்திடமே யிருந்தால் அரசன்கையிலேறிச் சிறப்பெய்துமோ? (எய்தாது.) ஆகவே, நான் தங்களைவிட்டுச்சிறிது நாள் யதேச்சையாய்த் திரிந்தாலன்றி எனதுமனோபீஷ்டம் நிறைவேறாதென்றுகூறி இராஜவுடைகளைக் களைந்து முன்னமேசித்தஞ்செய்துவைத்திருந்த காஷாய வுடையைத் தரித்துப் புறப்படலானான்.

---

## வீரவர்மன் யாத்திரை.

பெற்றவர் கலங்க, நற்றவர் நாண, சுற்றத்தார் சோர, துணைவர் கதற, மந்திரிமார்மறுக்க, மன்னவர் தடிக்க, ஏழைக்குடிகள் எதிர்வந்தழுதிட இவ்வாறு பற்பலர் அரசகுமாரனைச் சூழ்ந்துகொண்டு வாய்விட்டழுகிற ஓசையானது கடலொலியை மறைத்தது. எவ்வளவுசொல்லியும், போகவேண்டாமென்றுதடுத்தும் வீரவர்மன் சிறிதும் அவர்கள் மொழியைச் செவிகொடுத்துக் கேளானாய்ச் சின்னாளில் மீண்டும ஊருக்கு வருவதாக அவர்க்குச் சமாதானங்கூறி பஞ்சவர்ணக் கிளியைத் தோண்மேற்றாங்கி நடந்தான்.

காமம் யாரைத்தான் சுடாதுவிடும்? தொண்ணூறுஞ் சென்றுதுவண்ட கிழவியைப்போல் தேகத்தில் கிள்ளிபெடுக்கவென்றாலும் எள்ளத்தனை தசையுமின்றிக் தூங்குமுகமும், கூன்விழுந்தமுதுகும், எடுத்த பல்லும், எங்குபார்த்தாலும் படைகளுமாகவுள்ள கோரம்பிடித்தஸ்திரீஜாதிகளை, ஐயோ! அழகிய யௌவனபுருஷர்கள் வைத்துக்கொண்டு பிராணன் போனாலும் விடேனென்று பந்தயமிட்டுக் கூடிக் களிக்கிறார்களென்றால், அரம்பையினும் அழகுமிக்க லீலாவதியின் படத்தைக்கண்டும் ஒருவன் மோகங்கொள்ளா திருப்பனோ? இரான். ஆகவே லீலாவதியைக் கூடி அனுபவிக்கும் சுகத்துக்கு மற்றெச்சுகமும் ஈடல்லவென்று துணிந்தவனாய் 'முயற்சி திருவினையாக்கும் முயற்றின்மை - இன்மை புகுத்திவிடும்' என்னும் திருவள்ளுவர்து வேதமொழியை நம்பி அரசசெல்வத்தையும் ஓர் துச்சமாக வெண்ணி இப்போது நமது வீரவர்மன் ஒரே பிடிவாதமாகவிருந்து வெளிவந்தான்.

வீரவர்மன் அரண்மனையைவிட்டுப் புறப்பட்டது முதல் பஞ்ச வர்ணக்கிளிமொழியைக் கடைப்பிடித்து நான்குநாள்வரை விடாது நடந்துசென்றபோது சிறிது தூரத்தில் ஓர் காட்டாறு இருப்பது போலத் தோன்றியது. அதனைக் காண்பான் நெடுநேரம் நடந்தும் வழி தொலையவில்லை. சூரியன்கடலுட்புகவே இருள்வந்து சூழ்ந்தது. அது அடர்ந்த காடாகையால் அப்புறம் இப்புறம் அசைய வழிதெரி யாதுபோயிற்று. சிறிதுநேரத்திற்கெல்லாம் அங்கு பல வேறுபா டுடையமிருககோஷ்டமுண்டாயிற்று. கிளி அரசனை ஓர் மரத்தின் மே லேறிக்கொள்ளும்படிச் சொல்ல, அவன் பஞ்சவர்ணக்கிளியை மரத் தின்மேற் பறக்கவிட்டுப் பின்னர் தானுமேறினான். அம்மரமானது செழித் தடர்ந்து வேரோடி விசாலித் திருந்தமையின் உட்காருவத ற்கு மிக வசதியாயிருந்ததெனினும், அவன்மனம் சிறிதுநேரமாவது துன்பப்படாதிருக்கவில்லை.

ஒருவன் தன் கையில் ஒருகத்தியை யெடுத்துக்கொண்டு ஒரே காலத்தில் பன்னீராயிரம்பேரை வீசிக்கொல்லும் ரணரங்கசூரனாயி னும் இருட்டில் ஒரு நிழலையோ சலசல வென்னுஞ் சத்தத்தையோ வேறு யாதேனுமொரு தோற்றம் கண்ணுக்குக்காணப்பட்டவுடனே பேயென்னுந் தேள் அவன் மனத்திற் கொட்டாது விடாது. இப் பிடத்திலேயே இந்தகதியானால் அடர்ந்தகாட்டில் அதிலும் தனித்தி ருக்கையில் யார்தான் பயப்படார்? வீரவர்மன் மரத்தின்மேலிருப்பி னும் கீழே அவன் கண்ணுக்குமுன் பளிச்சு பளிச்சென்று மின்னும் வெளிச்சம் அங்கு இங்கு என்றுதாய் எங்கும் பிரகாசித்ததால் அரச குமாரன் அக்காட்டில் வசிக்கும் கொள்ளிவாய்ப் பேய்களென்று நினைத்துப் பீதியுற்றிருந்தான். அரசன்நிலையையறிந்த கிளி, மன்னவா! பளிச்சுப்பளிச்சென்று மின்னுவது வரிப்புலிகளின் கண்களாம். அவற்றோடு மின்மினிப்பூச்சிகளும் பறக்கின்றன. நீ அவற்றைக்கண்டு பிசாசென்று அஞ்சற்க வென்று தைரியஞ் சொல்லிற்று. அதன்பின் னர் அரசனுக்கு நல்லுணர்ச்சி வந்தது.

இப்போது பொழுதுவிடிந்ததென்று வைத்துக்கொள்வோம். வேடர்கள், பெண்களும் புருஷர்களும் பிள்ளைகளுமாகத் தோளில் விற்களைத் தாங்கியும், கண்ணிகளைப்பிடித்தும் சிற்சிலர் நடந்துபோ தலானார்கள். வேடர் வரவறிந்த மிருகங்களெல்லாம் மலைக்குகையிற் போய்ப் பதுங்கின. பச்சைக்கிளிகள் கூட்டங்கூட்டமாக பேசி

பறந்துசென்றன. ஈசுவர சிருஷ்டியின் அதியற்புத செயல்களைத் தெரிவிக்கும் மரஞ் செடிகளையும், குன்றுகளையும், புஷ்பவகைகளையும் காய் கனிகளையும் பிறவற்றையும் பார்த்து இவற்றிற்கு யாவர் விதையிட்டு ஜலமூற்றி வளர்த்துக் காத்தார் ? பரம்பொருளாகிய சிவபெருமானொருவனே யன்றோ ? அவர் எங்கும் நிறைந்த விபுவாதலின் அவரே என்னைக் காத்து எனது மனோபீஷ்டத்தை நிறைவேற்றவல்லவர். அப்படிப்பட்ட கடவுளையே என் மனதார வாழ்த்தி வணங்குகின்றேனென்று உள்ளன்போடு துதித்துத் தேனொழுகாநின்ற இனிய கனிவர்க்கங்களைப்புசித்துக் கிளிப்பிள்ளைக்குங் கொடுத்துச் சுனைநீருந்தி தன் தோள்மேல் கிளிப்பிள்ளையாகிய சுகத்தைச் சுமந்துகொண்டு அவ்விடம்விட் டகன்று அப்புறஞ்சென்றான்.

பின்னாரசன் காட்டாற்றைச் சமீபிக்க, அது நீண்டகன்று விசாலித்திருந்ததோடு ஆற்றில் ஜலம் நிறைவா யோடிக்கொண்டிருப்பதையுங்கண்டு நாம் இதைக் கடந்துசெல்லும்வழி யெப்படியென்று சிந்தித்துக்கொண்டே அவ்வாற்றில் நீர்சுழித்தோடுங் காட்சியைக் கண்ணிமையாமல் நெடுநேரம் பார்த்துக்கொண்டிருந்தான் எனினும், அவன் மனம் மதனலீலாவதியிடத்தும், கட்புலன்கள்மட்டும் ஜலத்தினிடத்து மிருந்தன. அது எப்படித்தெரிந்ததெனில், நமது வீரவர்மனாகிய அரசகுமாரன் கட்புலனுக்கு நேரே ஒரு வயோதிக முனிவர் வந்து நெடுநேரம் நின்றுகொண்டிருப்பதை அவன் அறிந்திலன்.

அடே ! காமாந்தகாரா ! வீரவர்மா ! உன் மனதை மதனலீலாவதி கொள்ளைகொண்டனளோ ! என்று கடைசியிற் சொன்னவாக்கியம் முனிவர் வாயினின்றும் வருவதற்குள் வீரவர்மன் சுவாதீனநிலையுடைந்து விரைந்தெழுந்து அவர் பாதத்தில் வீழ்ந்து வணங்கி முனிவர்பெருமானே ! என்னை ஆண்டருளவந்த அண்ணலே ! அடியேன் எண்ணிவந்த பொருள் சீக்கிரம் கைகூடும்படி யருள்செய்யவேண்டுமென்று வேண்டிநின்றான். அதற்கவர் அரசர் தனைய ! உன் இஷ்டம் நிறைவேறக்கடவது. ஆயினும் நீ யதைச் சிறிது வருத்தப்பட்டே பெறவேண்டிவரும். நீ இக்காட்டாற்றைக்கடந்து செல்வதற்காக இந்த ஓலைநறுக்கிலுள்ள ஒருவரியை மனப்பாடம் செய்துகொண்டு அதன்பின் இவ்வாற்றிலிறங்கிச் சிறிதும் ஓயாமல் ஜெபித்துக்கொண்டே செல்வாயாகில் உனக்குப் பூமிமேல் நடந்துசெல்வதுபோலிருப்பதன்றிச் சீக்கிரம் அக்கரை கொண்டுபோய்ச் சேர்க்கும் என்று ஓலைநறுக்கொன்றை அரசனிடங்கொடுத்துச் சென்றார்.

வீரவர்மன் அதைப் பெற்றுக்கொண்டு காட்டாற்றி லிறங்கித்
தவமுனிவர் கூறியபடியே ஜபித்துக்கொண்டு யாதொரு சங்கடமு
மின்றி அக்கரைபோய்ச் சேர்ந்தான். பின்னர் ஓர் பெருவழியைக்
கண்டுபிடித்துப் பொழுதுசாயுந்தனையும் நடந்து ஓர் தருமசத்திரத்
திற்கிளியுந் தானுமாகப் பசியால் வருந்திக் களைத்துஉறங்கிக்கொண்
டிருக்கையில், அச் சத்திரத்துக் காரியஸ்தன் படுத்துறங்கும் அரச
குமாரனைச் சுமார் இரவு எட்டுமணிக்குத் தட்டியெழுப்பி அன்ன
முண்ணுகின்றீரா? என, ஆம் உண்ணுகின்றேனென்றான். உடனே
அவன் ஷட்விதபதார்த்தங்களோடு அன்னமிட்டுக் கிளிக்கு நெய்யும்
பருப்பும் பிசைந்த உணவிட்டான். வீரவர்மன் உண்டு களித்து வாழ்
த்திச் சத்திரத்திற் படுத்துறங்கினான்.

மறுநாளுதயத்தில் விழித்தெழுந்த அரசன் கிளியைத் தோண்
மேலேற்றிக்கொண்டு பொழுதுபோந்தனையும் நடந்து பசியால் களை
த்து மூர்ச்சித்து உலகப்பற்றைமறந்து நிலத்திற்சாய்ந்தான். இதைக்
கண்ட கிளி மிகவருந்தி அவன் தலைமாட்டிலிருந்து தன் இறகுகளைத்
தூக்கித் தட்டி காற்றுண்டாக்கியது. சிறிது நேரத்திற்குள் அரசன்
களைதெளிந்து கிளியைத்தழுவி முத்தமிட்டு முகத்தோடணைத்தான்.
அச்சுகம் வீரவர்மனை நோக்கி அரசே! அஞ்சற்க. இன்னும் இரண்
டுமயில் தூரம் கஷ்டப்பட்டு வருவீரானால் பின்னர் நீவிர் சந்தோ
ஷப்படத்தக்கதோர் காரியசித்தியைக் கைகூட்டுவிக்கிறேனென்றது.
அரசன் அகமகிழ்ந்து குறித்தவிடஞ்சென்றான். அப்பதிக்கு அதிர்
ஷ்டபுரி யென்று பெயர்.

கூடிவருங் காலமானால் எல்லாம் நன்மையாகவேமுடியும். பஞ்ச
வர்ணக்கிளி சொன்னபடி வீரவர்மன் அதிர்ஷ்டபுரிக்குவந்ததே மரங்
களால் சூழப்பட்டு இருண்டிருக்கும் ஒரு தோப்புக்குள் அவனை
அழைத்துக்கொண்டுபோய் மரத்திற்குப் பின்புறத்தில் மறைந்திருக்
கச்செய்து தான் அம்மரத்தின்மேலேறிக்கொண்டு அரசே! நாமிங்கு
இன்றெல்லாம் இருக்கவேண்டியிருத்தலால் காலப்போக்குக்காக
ஒரு கதை சொல்லுகிறேன் நித்திரைசெய்யாமற் கேளென்று சொல்
லிக்கொண்டே மணம்வீசும மூன்று பெரிய மாங்கனிகளை மூக்காற்
கிள்ளி அரசனுக்கு முன்னே வீழ்த்தியது. அதனை வீரவர்மன் புசித்
துப் பசியாறிமகிழ்ந்து அஞ்சுகமே! எனக்கு நித்திரை வாராமற்
கதைசொல்லிக் களிப்பிப்பாயாக வென, அது அங்ஙனமே அறைய
லாயிற்று.

விதியின் விநோதம்.—விதியை வெல்வதற்கு வேதனாலு மாகாது என்று புத்திமான்கள் கூறுகிறார்கள். இந்தவாக்கியத்தைச் சிலர் கவனியாது விதியை மதியால் வெல்லலாமென்கிறார்கள்; அது முடியாத காரியம். எப்படியென்னில், ஓர் ஏழைக்குடியிற்பிறந்த சிங்காரமுதலியென்பவன் பதுமலோசனி யென்பவளைக் கலியாணஞ் செய்துகொண்ட பன்னிரண்டாநாள் சாந்திமுகூர்த்தம் வைத்துக்கொண்டார்கள். அன்று கடந்த மறுநாள் தன் நாயகியோடு கூடிக்களித்தபின் மல்காந்துபடுத்து யாதோவொன்றைப்பற்றிச் சிந்தித்துக்கொண்டிருந்தான். அவன் மனைவி அயர்ந்து நித்திரைசெய்தாள். அவ்வீட்டின் விளக்கு தைலமில்லாததுபோல மினுக்குமினுக்கென்று மங்கலா யெரிந்துகொண்டிருந்தது.

அரசே! நினைவோடு கேளும்.

அப்போ தவ்வீட்டுச்சுவற்றில் நகர்ந்துகொண்டிருந்த ஒருபல்லி கால்தவறிக் கீழேவிழுந்தது. அதனைச் சிங்காரம் பார்த்தான். உடனே அப்பல்லியானது ஸர்ப்பமாகி நித்திரைசெய்துகொண்டிருக்கும் தன் மனைவியை வெடுக்கென்று கடித்துக் கொன்றது. அப்பெண்ணின் அழகியதேகம் பச்சைநிறமாயிற்று. இதனைக்கண்ட சிங்காரமுதலி பேராச்சரியப்பட்டு அப்பாம்பைப் பின்றொடர்ந்தான். அது அவ்வூரைக் கடந்துசென்றபின், சொறிபிடித்த நாயாகி வழியில் நின்றுகொண்டிருந்த பதினாறுவயதுடைய ஒரு பையனைக் கடித்துக்கொன்றது. இதைக் கண்டதே சிங்காரம் அதிக ஆச்சரியப்பட்டான். பிறகு அந்நாய் சிறிதுதூரம்சென்று புலியாகமாறி வயல்தழியே போய்க்கொண்டிருந்த மூவரைக் கையாலறைந்து கொன்றது. இதற்குள் பொழுதும்புலர்ந்தது. சிங்காரம் வெகுதைரியத்தோடும் ஜாக்கிரதையாகவும் அதன் கண்ணுக்கு அகப்படாமலே பின்றொடர்ந்துபோனான். ஹா! என்ன ஆச்சரிய மென்னலாம்! அப்புலி ஒரு நொடிப்பொழுதில் கடைந்தெடுத்த பம்பரப்போன்ற தேகமும், உருக்கி யூற்றிய தங்கத்தை யொத்த தேகவனப்பும்வாய்ந்த யௌவனபருவமுடைய ஒரு சுந்தரஸ்திரீயாக மாறி வாசனைவீசும் ஓர் நந்தவனத்தில் உட்கார்ந்து கையில் வீணைபிடித்து ஆலாபனை செய்துகொண்டிருந்தாள். அப்போது வேட்டையாடச்செல்லும் அரசகுமாரர்களிருவர் அவளைக்கண்டு மோகங்கொண்டு சமீபத்தில்வருமுன்னமே அப்பெண்மணி அவர்கள்மேல் காதல்கொண்டவள்போல் நடித்து

அவள் கண்வலைபவீசினாள். அரசகுமாரர்கள் அவளிடம் சிருங்கா
ரமொழிகளால் சரசவார்த்தைகளாடிக்கொண்டிருந்தபோது அப்பெ
ண் அவ்விருவர்களில் மூத்தோனிடத்தில் தனக்குப் பொறுக்கமுடி
யாத பசியாயிருக்கிறதென்று தெரிவித்தாள். அவன் சமீபத்திலுள்ள
கடைவீதிக்குச் சென்று பல்வகைப் பழவர்க்கங்களை வாங்கிக்கொ
ண்டு நந்தனவனம் வந்தான். அப்போது அப் பெண்மணி கைவளை
யல்களை யுடைத்துக் கீறிக்கொண்டு தலைவிரிகோலமாய்க் கண்ணீர்
விட்டழுதுகொண்டிருந்தாள். அதுகண்ட அரசகுமாரன் என்ன
சங்கதியென்று கேட்டான். அதற்கவள், வடிவழகரே! உம்மை நா
ன் பர்த்தாவாக அடைய இச்சித்திருந்தேன். நீர் கடைக்குச்சென்ற
போது இச்சிறுவன் என்மேல்விழுந்து மருவவழைத்தான். நானதற்
குச் சம்மதியாமையாலும், கடைக்குச்சென்ற நீர் வந்துவிட்டமையா
லும் இவன் புற்றிலடங்கிய பாம்புபோலாயினான். என்கற்பும் கெடா
தொழிந்தது என்றாள். மூத்தவனுக்குக் காமமூர்க்கமுண்டாகிக் கத்
தியை உறையினின்றும் உருவினான். இளையவன் தானொரு குற்றமும்
செய்யாதவனேனும் தன்னைக்கொல்ல எதிர்த்தவன் பாவனேனும் அ
வனைக்கொல்லாதிருப்பது இராஜகுலமல்லவாதலால் சிறுவனும் கத்
தியை உறையினின்று முருவிக்கொண்டு எதிர்த்தான். இரண்டு ஸிம்
ஹங்கள் ஒன்றையொன்று எதிர்த்ததுபோலச் சண்டைசெய்து இர
த்தப்பிரவாகமாகிச் சின்னேரத்தில் இருவரும் நிலமிசைவீழ்ந்து மடி
ந்தார்கள்.

இவ்வதியாச்சரிய செய்கைகளைக் கண்டிருந்த சிங்காரம் இதெ
ன்ன புதுமையென்று சிந்தித்துக்கொண்டிருக்கையில், அப்பெண்
ஒருவிருத்தாப்பியனை உருக்கொண்டாள். அப்போது சிங்காரமவ்வி
ருத்தாப்பியனிடஞ்சென்று ஐயாவே! நீர் எங்கிருப்பது? உம்மு
டைய பெயரென்ன? நீர் ஏன் அக்கிரமமான காரியத்தையே செய்து
வருகிறீர் என்றான். அதற்கு அக்கிழவன், அடே பயித்தியகாரா!
நான் செய்யும் அக்கிரமத்தைப்பற்றி நீ சிந்திப்பானேன்? உன்னுடைய
காரியத்தில் நீ ஜாக்கிரதையாயிரு. போ போ என்றான். சிங்காரம்
நான்கேட்ட கேள்விக்கு நீர் பதில் சொல்லாவிட்டால் உமது காலில்
வீழ்ந்து நாக்கைப் பிடுங்கிக்கொண்டு சாவேன் என்றான். பெரியவர்
சிங்காரத்தைநோக்கி, என்னை எமதூதன் என்பார்கள். நானென்னு
டைய தலைவன் கட்டளைப்படி சிறிதும் தவறாமல் நடந்துகொள்கிறே
னென, சிங்காரம் அதிசயித்து அப்படியானால் என்னுடைய ஆயுள்

நான் எப்போது முடியுமென்று வினவினான். அதற்கு அக்கிழவன் எழுபத்தைந்துவருஷம் எட்டுநாளுஞ்சென்றால் நீ நருமதாநதியில் ஒரு முதலைவாயிலகப்பட்டிறப்பாயென்றான். இதைக் கேட்ட சிங்காரம் திகிலடைந்து நருமதாநதி இன்ன திசையிலிருக்கிறதென்று அறியாத அவன் அவ்வூருக்குச் சென்று ஒரு செல்வந்தன் வீட்டுப் பிள்ளைக்குக் கல்வி கற்பித்துக்கொண்டிருந்தான்.

இங்ஙனமிருக்கையிலொருநாள் சூரிய கிரஹணம்ஸம்பவித்ததால் சிங்காரமுதலியிடம் வாசிக்கும் சிறுவன் முதலிய அவ்வீட்டார் யாவரும் நருமதாநதியில் ஸ்நானம்செய்யப்புறப்பட்டார்கள். சிங்காரம் நதிதீரத்துக்கு வரமுடியாதென்று கூறினான். ஆசிரியர் வராவிட்டால் தான் வருகிறதில்லையென்று பிள்ளையாண்டான் முரணிக்கொண்டான். பிள்ளையைவிட்டுச் செல்ல மனமில்லாத அவனுடைய தகப்பனார் அவ்வுபாத்தியாயரை ஸ்நானத்திற்கு வரும்படி வேண்டினார். சிங்காரம் எமன் சொன்னபடி தன் ஆயுள்நாளை எண்ணிக்கொண்டிருந்தானாகையால், தான் நருமதையில் ஸ்நானஞ்செய்தால் மரணம் நேரிடுமென்று கூறினான். அதற்கவர்கள் அவனைப் பரிகாசம் செய்து இதென்ன பயித்தியம்! நீராவது சாவதாவது! நாம் ஸ்நானம் செய்யுந் துறை முதலை நுழைய இடமில்லாதபடி இருப்புக் கம்பிகள் நடப்பட்டிருக்கின்றன. அதோடு நாங்கள் இத்தனைபேரிருக்க உமக்கென்ன பயம் என்று சிங்காரத்தைத் தேற்றி வண்டியிலேற்றிக் கொண்டு ஊருக்கு மூன்றுமையில் தூரத்திலிருக்கும் நருமதாநதியை வந்தணுகினார்கள். சிங்காரம் நதியில் மூழ்கினான். உடனே சிஷ்யனும் மூழ்கி முதலையாக மாறி குருவின் காலைக் கௌவி ஜலத்திலிழுத்துக்கொண்டுபோகையில் 'விதியை மதியால்வெல்லமுடியாது' என்று கூறி மறைந்தான். என்று கிளிப்பிள்ளை கூறி முடித்தபின் வீரவர்மன், 'அஞ்சுகமே! நீ சொல்லிய கதை வெகு இனிமையைத்தந்தது. இனி, ஸர்வதாகாலமும் என் மனதைவிட்டு நீங்காதிருக்கும் மதனலீலாவதியின் திருமுகத்தை நான் சீக்கிரம்போய் காணுமுபாயத்தைத் தேடி எனக்குப் பிராணபிக்ஷை தரவேண்டும் என்றான்.

பஞ்சவர்ணக்கிளி, 'அரசே! வேலைமெனக்கெட்டு உன்னை இங்குக் குந்தவைத்திருக்கிறேனென்றெண்ணாதே. இதோ நமக்கெதிரிற் காணப்படும் பாழுஞ் சத்திரத்தைப் பார். அதில் ஐந்துவிதமான சாமான்களிருக்கின்றன. அதற்குடையவன் இன்னும் சிறிதுநேரத்திற்

குள் அவ்விட்டிற்கு வந்துபோவான். அதன்பின் நாம் அங்குச் சென்று அதனை யாசகித்துக்கொள்வோமேல் நம்முடைய காரியம் சித்தியாயிற்று என்றது. அரசன் குதூகல மடைந்து அதென்ன சமானென்று வினவியபோது, சுகம் சொல்லுகிறது. 'அரசே! வீரவர்ம! நெடுநாள் ஒரு தவமுனிவருக்குத் தொண்டு செய்துகொண்டிருந்த சிவசென்னும் வேளாளனுக்கு அவர் தேகவியோகமடையுங்காலத்தில் அம்முனிவரிட மிருந்த மிதியடி ஒன்றும், ஜோல்னையும், பிரம்பும், பட்டாக்கத்தியும் கொடுத்தார். அவற்றின் மகத்துவம் யாதெனில், மிதியடியின்மீதேறில் நினைத்தவிடத்திற் கொண்டுபோய்ச் சேர்க்கும். ஜோல்னையிற் கையைவிட்டால் சிந்தித்தபொருள் கிடைக்கும். பட்டாக்கத்தியைக் கையிற் பிடித்தால் ஒரேகாலத்தில் அக்ஷௌணி சேனையை எதிர்த்துச் சயிக்கலாம். பிரம்பினால் இறந்த பிணங்களை யெழுப்பலாம். இந்நான்குங் கிடைத்தால் உன்னைவிட பாக்கியவான்யார்? என்று கிளிப்பிள்ளை சொல்லிக்கொண் டிருக்கையில், வீரவர்மன் பரமசந்தோஷபரிதனாய் என் ஆருயிரினு மிக்க அஞ்சுகமே! அப்பொருள்கள் எனக்குக் கிடைக்கும்வகை எப்படி? என, கிளி சொல்லுகிறது. அரசே! அப்பொருட்குடையோன் இன்னும் ஒரு மணிநேரத்தில் மிதியடிமேல் ஏறிக்கொண்டுவந்து இப் பாழ்ஞ்சத்திரத்திலுள்ள புன்னைமரப் புதருக்குள் அந் நான்கு பொருள்களையும் வைத்துவிட்டுப் படுத்துறங்குவான். நான் அந்தச் சமையமறிந்து சொல்லுகிறேன். நீ விரைந்துசென்று முதலிற் பட்டாக்கத்தியை யெடுத்து அவனை ஒரேவீச்சாய் வீசிக் கொன்றுவிடு. பின்பு நடந்துகொள்ளவேண்டிய விஷயத்தைத் தெரிவிக்கிறே னென்றது.

இதுசொல்லிமுடிந்த சிறிதுநேரத்திற்கெல்லாம் ஒருவன் அச்சத்திரத்தில் நுழைந்து அங்கிருந்த படுக்கையிற் சயனித்து நித்திரை போனான். கிளி, மரத்தினின்றும் பறந்துபோய் மீண்டும் வீரவர்மனிடம்வந்து அவனைச் சத்திரத்திற்கழைத்துக்கொண்டு போயிற்று. அரசன்கிளிசொல்லியபடியே மரப்பொந்தில் சாமான்களிருக்கக்கண்டு அகமகிழ்ந்து பட்டாக்கத்தியை யெடுத்துக்கையிற்பிடித்து அங்கு அயர்ந்துநித்திரை செய்பவனைக் கண்டு வருந்தி தூங்கிக்கொண் டிருப்பவனைக்கொல்லுதல் இராஜதருமமல்லவென்று அவனைத் தட்டியெழுப்பினான். அவன் விழித்துப்பார்த்து கிடைத்தற்கரிய தன் பொருளுக்கு மோசம்வந்ததென்று அரசனுடன் போர்புரிந்தான். வீரவர்மன் அவனைப் பட்டையத்தால் ஒரேவீச்சாய் வீசிக்கொன்றான்.

உடனே வெட்டுண் டிறந்தவனை அச் சத்திரத்திற் புதைத்து விட்டு மரப்பொந்தில் வைத்திருந்த மிதியடி - பிரம்பு - ஜோல்னுக்களை யெடுத்துக் கிளிப்பிள்ளையின்சொற்படி வீரவர்மன் மிதியடிமேற் காலை வைத்து மதனலீலாவதியிருக்கும் புஷ்பபுரிக்குச் செல்லவேண்டுமென்று நினைத்தான். அவ்வாறே அது ஆச்சரியப்படத்தக்க விதமாகப் புஷ்பபுரிக்குக் கொண்டுபோயிற்று. அவ்வூர் வழக்கப்படி வீரவர்மனைக்கண்ட சேவகர்கள் தினகரனென்னும் அந்நாட்டரசனிடம் கொண்டுபோய்விட்டார்கள். கொலுமுகத்திலிருந்த மன்னன் வீரவர்மனை நோக்கி இவ்வூர்க்குப் புதியமனிதனைக் காணப்படும் நீ இங்கு யாது கருதிவந்தனை என, அவன், 'அரசர்க் கரசனே! தங்கள் செல்வக் குமாரத்தியாகிய மதனலீலாவதியை மணஞ் செய்துகொண்டு போவதற்கு வந்தே' னென்று மார்பிலடித்ததுபோற் சொல்லவே, தினகரனுக்குக் கோபமுண்டாகி நகைத்து இவன் யாரோ பயித்தியகாரனாயிருக்கிறான். இவனைத் தள்ளிக்கொண்டுபோய் ஊர்ப்புறத்தே விட்டு வாருங்கள். மறுபடியும் இவனை உள்ளே விடவேண்டாமென்று உத்தரவுசெய்தான். காவலர் அவ்வாறே செய்தனர்.

இப்போது வீரவர்மனுக் குள்ள துக்கத்தை நம்மால் அளவிட்டுரைக்க முடியாது. அங்கோரிடத்தில் உட்கார்ந்துகொண்டு தன் துர்ப்பாக்கியத்தை யெண்ணி வருந்திக்கொண் டிருந்தான். இங்ஙனமிருக்கையில், வீரவர்மனுடைய தந்தையிடம் மந்திரியாயிருந்த சீமூதனென்பவனுடைய புதல்வனாகிய விலோசனனென்பவன் நமதுவீரவர்மனைக் கண்டு அரசே! இதென்ன தவக்கோலம்! உன்னுடைய நாடுநகரமுதலியவற்றைவிட்டு இவ்வளவு தொலைதூரம் வருவானேனென்று வினவினான். அதற்கு வீரவர்மன், விலோசனா! எனது தந்தை காலஞ் சென்றதும், வேற்றரசர் வந்து நாட்டை யபகரித்துக் கொண்டதும் நீ அறியாய்போலும். அது அவ்வாறாகவே நான் இக்கோலங்கொண்டேன், நீ இங்குவந்திருக்கும் காரியமென்னவென, விலோசனன் கூறுகிறான்—"எழுநிலை மாடங் கால்சாய்ந் துக்குக் - கழுதை மேய்பா ழாயினு மாகும்" என்னும் மேலோர் மொழிப்படி உயர்ந்தது தாழ்வதும், தாழ்ந்தது உயர்வது மிவ் வுலகவியல்புதான். அதற்காக நீ வருந்தாதே. நான் இவ்வூரரசன் மகளாகிய மதனலீலாவதியை இச்சித்துவந்து வெகுநாளாயிற்று. அவ்விஷயம் இப்போது கொஞ்சம் அநுகூலந்தான். இதைப்பற்றி வெளியே யாரிடத்துஞ்

சொல்லாதே. அப்பெண்மணி இப்போது என்மேற் பிரீதிகொண்டிருப்பதாகத் தெரியவருகிறது. அவளை நான் விவாகஞ் செய்துகொண்டவுடனே இவ்விராச்சியம் என்னுடையதாகும். அப்போ துனக்கு முதன்மந்திரி யுத்தியோகந் தருகிறேன் என்று கூறிவிடைபெற்றுச் சென்றான்.

மதனலீலாவதி தன் மந்திரிகுமாரன்மேலிச்சைகொண்டிருப்பதாகக் கேட்டதே அரசகுமாரனுக்குப் பெருந்துக்கமுண்டாயிற்று. நெடுநேரம் கண்ணீர்விட்டழுதான். ஆ காதலீ! என்னை மோசஞ்செய்தனையா! இதற்குத்தானா ஒருவருஷகாலமாய் அன்னாகாரமின்றி, எப்போதும் உன் ஏக்கமேகொண்டு தூக்கமின்றியிருந்தேன்! ஐயோ காட்டாற்றைக் கடந்து செல்லச்செய்த பெரியவரும் உன்னை நான் அடைவேனென்று சொன்னாரே! அவருடைய பேச்சுமா பொய்த்துப்போயிற்று? என் கண்ணே! உன்முகதரிசனஞ் செய்தபின்னாவது நான் இறந்தால் சுகிர்தமடைவேன். உன்னைத் திருமணஞ் செய்யவன்றோ என் நாட்டையும் நகரத்தையும், செல்வச் சிறப்பு முதலியவற்றையும் இழந்து, உன்னுமுணவுமின்றி ஏங்கி, நடந்துசென்றறியாத என் கால்கள் தேய முள்ளிலும் கல்லிலும் காட்டிலும் மேட்டிலும் இன்னவிடமென்பதில்லாமற் றிரிந்தலைந்து நீ இருக்கும் பதிவந்தடைந்தும் என்னபயனாயிற்று? நான் உன்னைக் கடிமணஞ்செய்யாது என்பதிக்குச் செல்வேனானால் என்னை ஏசிப் பரிகசிப்பார்களே! உன்னை என்னுடனழைத்துக்கொண்டு போவேனானால் எனக்குண்டாகும் சிறப்புக்கு அளவுண்டா? சீ சீ! இதென்ன நாம் இப்படி நினைக்கின்றோமே! நம்முயிரை இங்குதானே தத்தஞ்செய்து விடவேண்டும் என்று அவ்விடம்விட் டகன்று ஓர் அழகிய பூங்காவனத் துட் சென்றான். தன் தோள்மேலிருந்த கிளியைக் கீழே யிறக்கி விட்டு ஓ அந்தணனே! உன்னுடைய சொல்லால்வந்தகதி போதும்! சிறிது நேரத்திற்குமுன் மந்திரிகுமாரனாகிய விலோசனன் கூறியதைக் கேட்டிருந்தாயல்லவா? ஒருவன்மேற் காதல்கொண்டிருப்பவள் மற்றொருவனை நேசிப்பது எப்படிக்கூடும்? இதனை நீ முன்னமே அறிந்து சொல்லியிருந்தால் எனக்கும் உனக்கும் இவ்வளவு துன்பம் நேர்ந்திராதல்லவா? அந்தணனே! என்போலலைந்து கெட்டவர் ஒருவருமிலர் என்று சொல்லிக் கண்ணீருஞ் சிந்தையுமாய்க் கலங்கித் தன் கிரகசாரபலத்தை நொந்துகொண்டிருந்தான்.

அறிவிற் சிறியவர்கள் பயனற்ற சிறுவிஷயத்திற்கும் வருந்துவ
துபோல் எவற்றினும் வல்ல அரசகுமாரனாகிய நீயும் வருந்துவாயா
னால் உன்னைத் தேற்றவல்லவர் யார்? நாம் சிறிதுநேரத்திற்குமுன்பு
தான் இங்குவந்தோம். இதற்குள் நாம் வந்தகாரியம் சித்தியாகவே
ண்டுமானால் எப்படிக்கூடும்? இடையிற் கண்ட ஒரு மந்திரிகுமார
னுடைய வார்த்தையைக் கேட்டு அதனை மெய்யென்று நம்பி துக்கப்
படுவதும் கூடுமோ? மதனலீலாவதிக்கு நீயே கணவனன்றி மற்றொ
ருவனன்று. வீரவர்மவரசே! நீ அதுவிஷயத்திலொன்றுஞ் சந்தேகப்
படவேண்டாம். பெண்விஷயமாக உன்னைப்போல் திரிந்தலைந்தவர்
உலகத்தில் ஒருவருமில்லையென்று நீ கொண்டிருக்கும் கருத்து சரி
யல்லவென்பதை மெய்ப்பிக்க இங்கோர் கதைசொல்லுகிறேன் கவ
னமாகக் கேட்பாயாகவென்று அஞ்சுகம் அறையலாயிற்று.

## கோமளாங்கி.

திருவந்தபுரிக் கரசனாகிய மாறனென்னும் ஒருவன் அரசகாரி
யத்தை அவ்வளவாய்ப் பாராமல் விதம்விதமான படகுகள் செய்வி
த்துத் தானும் தனது தோழருமாகவிருந்து அக்கப்பலைக் கடலில்
போகவிட்டு நாள்தோறும் விளையாடிவருவதும், அதுதப்பினால் வலை
வீசி மீன்கள்பிடிப்பதுமே அவனுக்குப் பிரீதியாயிருக்கும். ஒருநாள்
தன் நண்பர்களின்றிப் படகேறிக் கருங்கடல் மத்தியிற் சென்று மீன்
பிடித்துக்கொண் டிருக்கையில், அவனுக்கெதிராகப் பாய் கட்டித்
திரையுமிட்டிருந்த ஒரு அழகியபடகு வந்துகொண்டிருந்தது. அது
மனிதர்களால் தள்ளப்படாமல் தானே வந்துகொண்டிருப்பதைக்
கண்ட அரசன் பேராச்சரியப்பட்டுத் தன் படகை அதன்முன் செ
லுத்திப் பார்க்கையில் பழுப்பேறிய தந்தத்தாற் செய்யப்பட்ட பிர
திமையைப்போல் ஒரு யௌவனமங்கை தங்காபரண மணிந்து அத
னுள் தனித்திருக்கக் கண்டான். அவளும் அரசனைக்கண்டாள். ஒரு
வர்க்கொருவர் நயனங்களாற் பயன்பெற்றவர்களானார்கள். இவ்வாறு
கண்ட ஒரு நிமிஷத்திற்குள் அப் பெண்ணேறியிருந்த படகு நெடுந்
தூரஞ் சென்று கட்புலனுக்கு மறைந்தது. அவளுடைய பேரழகும்
பெருந்தன்மையும் யௌவனமும் மன்னன்மனத்தையும் கண்களையும்
கவர்ந்ததால் மனம் வேறுபட்டு இனி யெப்போது காணப்போகின்
றோமென்னு மேக்கங்கொண்டு படகைத்திருப்பிக் கரைக்குக் கொண
ர்ந்து மண்மேல்படுத்துப் புரண்டுகொண்டிருந்தான்.

அரசன் கடற்கரை மணலிற் புரண்டுகொண் டிருக்கும் ஈனஸ்திதியைக்கண்ட பிரதானமந்திரி மனத்தில்வருந்தி அவனருகிற்சென்று தாங்கள் இவ்வாறிருப்பதற் கென்னகாரணமென்று வினவ, அரசன் கண்ணீருங் கம்பலையுமாக மந்திரிமுக நோக்கி அமைச்ச, அரத வொிநய சுந்தரமோகனங்கியைக் கண்டேன் ; கண்குளிரப் பார்த்துங் களிக்குமுன்னமே படகு ஓடிப்போய்விட்டது. மறுபடியும் அவளைக் கண்டுபிடித்துக் கலியாணஞ் செய்துகொள்ளுந்தனையும் அரண்பனையைப்பாரேன். நல்லுணவருந்தேன் என்று நடந்தவிஷயத்தைக் கூறினன். அப்போது கடற்கரையில் சித்தமாயிருந்தபடகில் மன்னனை மந்திரியேற்றிக்கொண்டு செல்லுந் தருணத்தில் ஒரு கிழவன் தான் படகு ஓட்டுவதில் வல்லவனென்று சொல்லித் தானு மேறிக்கொண்டான். படகும் வேகமாய்ச் சென்று ஒரு கரைத்திட்டை யடைந்தபோது, அங்கிருந்த ஒருவன் அரசன் முதலினோர் தேடிச் செல்லும் விஷயத்தைக் கேட்டறிந்து தனக்கு நினைத்தவிடம் செல்லத்தக்க நாற்காலி செய்யத் தெரியுமென்றும் ஆகவே தானும் கூடவருவதாக உத்தரவுபெற்றுப் படவி லேறிக்கொண்டான். பின்னர் நால்வருஞ் சேர்ந்து படவை வெகுவேகமாய் நடத்திச்சென்றார்கள். பதினொரு நாள்வரையில் இரவும்பகலுமாகச்சென்று வடபுறமாகவுள்ள ஒரு மலைத்திட்டை யடைந்தனர். அம் மலைமேல் ஒருகூன்விழுந்த முதுகுடைய விருத்தாப்பிய னுட்கார்ந்துகொண்டிருந்தான். அவன் பக்கத்தில் சுரக்குடுக்கையும், தடியு மிருந்தன. அவனுக் கெதிராகபாட்டெலும்புகள் போர்போராகக் குவித்திருந்தது. அவ்வெலும்புக்குவியலின்மேல் சுரக்குடுக்கை ஜலத்தில் சிறிது தெளித்ததே அவ்வெலும்புகளெல்லாம் அனேக பசுக்களாகி வாலைக் கிளப்பிக்கொண்டு மேலைக்கொன்றேயோடிற்று. அக் காட்சியைக் கண்ட அரசன் முதலினோர் ஆச்சரியப்பட்டுப் படவைவிட்டிறங்கி மலைமேற்சென்று கிழவன் காலில் வீழ்ந்து சித்தெல்லாம்வல்ல சீரியா! இப்போது நீ செய்த வித்தையை மெச்சினோம். அவ்வித்தையை எங்களுக்குத் தெரிவிக்க வேண்டுகின்றோமென்ன, அவ் விருத்தாப்பியன் புன்னகைபுரிந்து நானொருவழிப்போக்கன். இங்குக் கட்டுச்சாதமவிழ்க்கும் புசிக்கவந்தேன். இச் சுரக்குடுக்கையிலிருந்த ஜலம் தானே கவிழ்ந்து எலும்பிற்பட்டு பல பசுக்களாயினமையைக் கண்டு நானும் ஆச்சரியப்படுகிறேன். அது இருக்கட்டும். நீங்க ளெங்கே செல்லுகிறீர்களென்று கேட்டுச் சங்கதி தெரிந்துகொண்டு அந்தப் பெண்ணையான் அறிவே

னென்று அவனும் படகிலேறி வேகமாய் விட்டுச்சென்றார்கள். பன்னிரண்டாநாள் பகல்பதினொருமணிக்குஓர் விசாலமான வனத்தைக் கண்டே படவை நிறுத்தி ஐவரும் உட்புகுந்து செல்லச்செல்ல ஒருவர் முகம் ஒருவருக்குத் தெரியாமல் பேரிருட்டா யிருந்தது. முன்னே நடந்துபோய்க்கொண்டிருந்த அரசன் மனமெல்லாம் தான்படவிற்கண்ட மங்கைமேலிருப்பதாகச் சொல்லிக்கொண்டு போகையில் அரசன் திடீரென்று வாய்பேசாமல் நின்றான். மற்றவர்கள் அப்படி நிற்பானேனென்று பார்த்தபோது, எதிரே வெளிச்சமாகத் தோன்றிய நீண்டதோர் அறையில் ஒருபெரும்பூதம் படுத்திருக்கக்கண்டு பயந்தார்கள். எலும்பைப் பசுவாக்கிய கிழவன் ரீங்காரமிட்டுத்திரியும் கதண்டுப்பூச்சியைப் பிடித்துவந்து அரசன் கையிற் கொடுத்து இப்பூதத்தின் செவிவழியாக இக்கதண்டுப்பூச்சியை விட்டாலன்றி வேறுவிதத்தில் சாகாதென்று கூறவே, அரசன் தைரியமாகச்சென்று பூதத்தின் செவியிற் பூச்சியைவிட, அப்பூதம் நெருப்பிற்பட்ட சருகேபோல் துடிதுடித் திறந்தது.

பின்னர் எல்லோரு மகிழ்ந்து அவ்விடம்விட் டகன்று சிறிது தூரம் போய்க்கொண் டிருக்கையில் பேரழகு வாய்ந்த ஒரு பெண் முக்காடிட்டு முகம்வாடி சுட்டிச்சுவர்க்கெதிரில் நின்றுகொண்டிருக்கக்கண்ட அரசன் அவளை யாரென்று வினவியபோது அவள் இரு கைகளாலும் நமஸ்கரித்து அண்ணன்மார்களே! இப்போது இருண்ட காடுபோற்றோன் றுமிம் மகரபுரியைக் கருணாகர னென்னும் என் தந்தை அரசாண்டிருந்தான். என்பெயர் கல்யாணி. எனக்கு விவாகமான பதினேழாநாள் ஓராண்பூதம் எங்கள் ராச்சியத்திற் பிரவேசித்துஎன் புருஷன் தாய்தந்தை சுற்றத்தினர் பிரஜைகள் முதலினோரைக் கொன்று ஊரையுமழித்துக் காடெனச்செய்து என்னைத் தூக்கிக்கொண்டுவந்து இவ் வறையில்வைத்துத் தன்னை மருவும்படி தொந்தரவு செய்தான். நான் அவனிடம் இனிமையாகப்பேசி ஒருவருடகாலம் என்னிடம் வராமலும் தொந்தரை செய்யாமலுமிருக்கும் பக்ஷத்தில் உன்னைக் கூடி இன்பந் தருகிறேனென்று சொன்னேன். அதற் கவன் சந்தோஷித்துஅதுமுதல் எப்போதேனும் ஒருவேளை என்னிடம் வந்து சிறிதுநேரம் பேசிக்கொண்டிருந்துபோவான். நீங்கள் இங்கு நெடுநேரம்நின்றிராமல் உங்கள் உயிர்பிழைத்துப்போங்களென்றாள். அதற்கரசன், பெண்கள்நாயகமே! நீ அஞ்சற்க. நான்

அப்பூதத்தைக்கொன்றேன் என, அவளாச்சரியப்பட்டு முகமலர்ந்து அரசர்பெருமானே! அப்பூதமானது தன்னுயிர் நீங்கும்போது நானிருக்கும் இவ்வீடழிந்துபோகுமென்று சொல்லியிருந்தது. சிறிது நேரத்திற்குமுன் நன்றாயிருந்த இவ்வீடு இப்போது குட்டிச்சுவராயிருப்பதால் நீர் சொன்னது உண்மையாகவேயிருக்கலாம். இனி நான் புனிதளாயினேனென்று அவர்களை யழைத்துக்கொண்டுபோய்த் தன் தந்தை அரசாண்டிருந்த கொலுக்கூடத்தையும், கோட்டை, அந்தப்புரமுதலியவற்றையும் காட்டி அங்கோர் மூலையில் நின்று கண்ணீர்விட்டழுதாள். அரசன் ஏனழுகிறாயென்று வினவ, அங்குவெட்டுண்டிறந்திருக்குமொருவனைக் காட்டி அவன் தன் கணவனென்றும், பூதத்தால் வெட்டுண்டானென்றும் தெரிவித்தாள். அரசன், எலும்பைப் பசுக்களாக்கிய கிழவனைக்கொண்டு கமண்டலஜலத்தால் எழுப்ப, உயிர்பெற்ற அரசன் மாண்டவனை யெழுப்பிய ஆண்டவர்களே! என்று அவர்கள் பாதங்களில்வீழ்ந்து வணங்கி அவர்கள் வந்த விஷயத்தைக் கேட்டுத்தெரிந்து அவன் ஒரு கிழவியை அவர்களிடங்கொண்டுவந்து விட்டு இவர்கள் அடையாளத்தோடு சொல்லும் பெண்மணியைக் கண்டுபிடித்துச் சொல்லவேண்டுமென்று உத்தரவுசெய்தான். கிழவி அவளுடைய தேகசாயைமுதலிய அங்கவடையாளங்களை பாரனென்னும் அரசனுற் சொல்லைக் கேட்டு ஒரு மாதத்திற்குள் சங்கதி தெரிவிப்பதாகக் கூறிச்சென்றாள்.

பாரனென்னு மரசன் மீன் வேட்டையில் அதிப்ரீதி யுடையவனாதலால் ஒருநாள் ஐவருடன் படகேறி கடலிற் சென்று வலை வீசியபோது முதற்றடவையிலேயே பெரியமீனொன்றகப்பட்டது. அதைக் காலை போஜனத்துக்குபயோகமாகும்படி சமையல்செய்ய ஐவரிலொருவன்சென்று அதையறுத்தபோது அதன்வயிற்றில் நவரத்நங்களழுத்திய தங்கப்பாதசரமொன்றிருக்க, அரசனிடங்கொணர்ந்து கொடுத்தான். பாரன், சிற்பநூல் வல்லவனிடம் அதனைக்கொடுத்து இதையணிபவளின் அழகைக்கண்டெழுதவேண்டுமென, சிற்பி அவ்வாறே எழுதிக்கொடுத்தான். படத்தைக்கண்ட பாரன் முன்னந் தான் படிற் கண்ட மங்கைக்கரசி இவள்தானென்று மகிழ்ந்திருந்தான். இரண்டொருநாள் பொறுத்து முன் வெளியே சென்ற கிழவி பாரனிடம்வந்து கண்டு நீர் சொன்ன அடையாளமுடையவள் தமாலபுரியை யாளும் தனஞ்செய னென்னும் அரசகுமாரத்தியாவாள். அவள் கடன்மேற் படகோட்டுவதில் வல்லவளாம். அவள் பெயர்

கோமளாங்கி யென்றாள். மாரன் கிழவியைநோக்கி, பாட்டி ! இதைப் பார் என்று தன்கையிலிருந்த படத்தைக் கொடுத்தான். அவள் அதனைக்கண்டு ஆச்சரியப்பட்டு மகனே. இப்போது நான் பார்த்துவந்த கோமளாங்கியின் படம் உனக்கெப்படி கிடைத்ததென, அவன் நடந்தவிஷயத்தைக் கூறி, முன்பு நினைத்தவிடம் கொண்டுபோய்ச் சேர்க்கும் நாற்காலி செய்வதாகச் சொன்ன கிழவனைக்கொண்டு ஒரு அழகிய நாற்காலி செய்துகொண்டு அதில் கிழவி முதலிய அறுவருமுட்கார்ந்து செல்லவேண்டுமிடத்தைநினைக்க, அது மேலேகிளம்பி தயாளபுரியிற்கொண்டுபோயிறக்கியது. உடனே கிழவி கோமளாங்கியைக் காணும்படிச் சென்றபோது அவளுடைய பாங்கியர்கள் தடுத்து கோமளாங்கி சமுத்திரத்திற் படகோட்டிச் சென்றபோது ஒற்றைக் காற் பாதசரம் நழுவி வீழ்ந்ததால் மிக்க விசனமும் கோபமுமுடையவளாய் எல்லோரையும் சீறிவிழுகிறாள் என்றார்கள். கிழவி திரும்பி வந்து நடந்த சங்கதியைத் தெரிவிக்க, மாரன் முதலினோர் அவ்விடம் விட்டு வேறோரிடத்திற்குப்போய் ஜாகைசெய்துகொண்டு உயிர்கொடுக்குங் கிழவனை மாந்திரீகனைப்போல் கோமளாங்கியின் தந்தைபாற் செல்லவிடுத்தார்கள். அவன் அரசனை வந்து கண்டு, "மன்னா ! நான் பூவுலகிலுள்ளவனன்று; தெய்வலோகத்தினின்றும் இந்திரனா லனுப்பப்பட்டுவந்தேன். உன்னுடைய செல்வக்குமாரியின் பாதச்சிலம்பொன்று திருவந்தபுரிக் கரசனாகிய மாரனிடம் அகப்பட்டிருக்கிறதாம் ; அந்த உத்தமனுக்கே உன் பெண்ணைத் தரும்படிச் சொல்லி வர என்னை யனுப்பினார்" என்றான். தயாளபுரிக் கரசனாகிய தனஞ்சயன் செத்துக்கிடக்கும் ஓரெலியைக் கொண்டுவந்து கிழவனிடம் போட்டு நீ இந்திரலோகத்துத் தூதனானால் செத்துக்கிடக்கும் இவ்வெலியை யெழுப்பென்றான். கிழவன் கமண்டலநீரைத் தெளிக்க, அவ் வெலி 'எழுந்தோடியது. அரசன் ஆச்சரியப்பட்டு நிற்கையில் பெரியவர் விடைபெற்றுச்சென்றார். அரசன் மந்திரியை யழைத்து என் குமாரத்தியைத் திருவந்தபுரிக்கரசனாகிய மாரன் என்பவனுக்குக் கொடுக்கும்படி தேவவுத்தரவாகியிருப்பதால் அவ் வரசனுக்கு இதனைக் கடிதமூலமாகத் தெரிவித்து இங்கு வரவழையு மென்றான்.

மந்திரிக்கிழவன் மாரனைக்கண்டு நடந்ததைக்கூறினான். அரசன் களிப்பெய்தி இதுவே தக்க சமையமென்று பாதசரத்தைக் கைக்கொண்டு தனியேசென்று அரசனைக்கண்டு அவனால் உபசரிக்கப்பட உட்கார்ந்து, "தயாளபுரிக்கரசராகிய தனஞ்சய வரரே! என்கனவில்

ஒருபெரியவர்வந்து தட்டியெழுப்பி "மாரா! நீ நாளை உதயத்தில் மீன்வேட்டையாடச் செல் ; நீ போடும் வலையி லகப்படும் மீன்வயிற்றில் கோமளாங்கி யென்னும் பெண்மணியின் பாதச்சிலம்பொன்று கிடைக்கும். அதனை அவள் தந்தையிடம் கொண்டுபோய்த் தந்து சுகிர்தமடைவாயாக வென்றார்" என்றான். தனஞ்சயன் பெருமகிழ்வெய்தி மாரனைக் கட்டித்தழுவி முத்தமிட்டு நல்ல சுபவேளை சுப நக்ஷத்திரத்தில் கோமளாங்கியை மாரனுக்குச் சிறப்பாக விவாகம் செய்துதந்தான். மாரனுங் கோமளாங்கியும் மருவிவாழ்ந்திருந்தனர்.

இங்ஙன மிருக்கையி லொருநாள் மாரனென்பவன் தன் மனைவியாகிய கோமளாங்கியை யழைத்துக்கொண்டு மீன்வேட்டை யாடச் சென்று கோமளாங்கியிருக்கக் கூடாரமடித்து அதிலவளைத் தாதிகள் சகித மிருத்தித் தானும் மந்திரியும் கிழவர்களுமாகக் கடற்கரைக்குச்சென்றார்கள். நெடுநாளாகக் கோமளாங்கியின் மீது கருத்தைச் செலுத்தியிருக்குந் திரண்ட செல்வந்தனாகிய சோமேச னென்னும் வர்த்தகன் அவளை யபகரித்துச்செல்ல பலவித உபாயங்கள் செய்தும் முடியாமல் சமயத்தை யெதிர்பார்த்திருந்தான். இப்போது கோமளாங்கியை வேறொருவன் மணந்து வெளிவந்திருப்பதையறிந்த வர்த்தகன் கண்ணீருஞ் சிந்தையுமாய்க் கலங்கிக் கல்லையுங் கரையச் செய்யும் பாய்மாலத்தில் வல்ல ஒரு கிழவியைப்பிடித்து அவளிடம் நூறு வராகனைக் கொடுத்து எப்படியாவது இன்று சாயரக்ஷைக்குள் கோமளாங்கியை என்னிடம் கொண்டுவந்து ஒப்புவிக்க வேண்டுமென்று வேண்டி அவளிறங்கியிருக்குமிடத்தைக் காட்டினான். கிழவி கோமளாங்கியிருக்குங் கூடாரத்தருகிற் சென்று என் கையிலெடுத்துவளர்த்த கற்கண்டாகிய கோமளாங்கி இருக்கிறாளாமே! என, தாதிகள் அவளை உள்ளே அழைத்துக்கொண்டுசென்றார்கள். கிழவி போனவுடனே கோமளாங்கியைக் கட்டித்தழுவிமுத்தமிட்டு என்செல்வமே! உன் கலியாண கோலத்தை என் பாழும் கண்களாற் பார்த்துமகிழக் கொடுத்துவைக்காமற் போனேன். என் தங்கைக்கு தேகஜாட்டியமாயிருந்ததால் அவளிடம் போயிருந்தேன். நான் அவளிடஞ் சென்று ஆறு வருஷமாகிறது. கோமளாங்கி! நான் உன்னை எட்டுவயதுவரையில் உன் தந்தை மாளிகையிலிருந்து வளர்த்தது உனக்குக் கியாபகமில்லையா வென, கோமளாங்கி அதென்னமோ எனக்கு நினைவில்லை. இருக்கலாம். உனக்கு இப்போது என்னவேண்டி இங்குவந்

தாயென, கிழவி அம்மா! மீன்வேட்டை யாடப்போன உன் கணவனையும் இப்போது வழியிற் கண்டேன். அவர்தான் நீ இருக்குமிடத்தைக் காட்டினர். நான் வேண்டுவதெல்லா மென்னவெனில், என் உயிருள்ளளவும் காப்பாற்றி இறந்தபின் ஒருபிடிமண் கொடுத்துவிட வேண்டு மென்பதே எனது பிரார்த்தனை யென்றாள். கோமளாங்கி அப்படியே யாகட்டுமென்று தன்னிடம் இருத்திக்கொண்டாள்.

இப்போது மணி நாலாயிற்று. சூரியவெப்பமின்றி எங்கும் சில்லென்றிருந்தது. தென்றற்காற்று மெல்லென வீசி யாவர்மனதையும் களிப்பித்தது. கிழவி கோமளாங்கியை நோக்கி மகளே! சாயந்திரவேளையாகியும் கூடாரத்துள்ளிருந்து குமுங்குவானேன்? சின்னேரம் வேடிக்கையார்த்தமாகச் சமுத்திரக்கரையோரமாய்ப் போய்வரலாம் வாவென்று கோமளாங்கியை யழைத்துச்சென்றாள். முன்னமே படவைத் தயார்செய்துவைத்திருந்த வர்த்தகன் கோமளாங்கியைக் கண்டவுடனே தன்னுள்ளிருந்தெழுந்த ஆநந்தததால் கோமளாங்கியைக் கட்டித் தழுவி யெடுத்துப் படவிற் சேர்த்துக் கிழவியையு மேற்றிக் கொண்டு மனோவேகமும் பின்னிட்ட தென்னும்படிப் படவையோட்டிச்சென்று அக்கரைசேர்ந்து இருபத்தைந்துரூபாயில் ஒருவாடகை வீடு பேசி அதில் கோமளாங்கியை யிருத்திப் பெண்ணே! என் ஆசைக்கினிய கண்ணே! என் இன்பரசப்பாகே! என்று தழுவச் சென்றபோது, கோமளாங்கி, செட்டியாரே! என்னையாதேனும் தொந்தரை செய்வீரானால் உம்முடைய யோக்கியதையை வெளிப்படுத்தி விடுவேன். இன்னும் ஐந்துநாளளவும் என்னிடம்வராதிருந்து எனது சொந்தநாயகன்வரவை எதிர்பார்த்து அவர்வந்ததே பிடித்துக்கட்டி ஓரறையிலடைத்துவிட்டு என்னிடம்வந்து தெரிவிப்பீரேல் அப்போதும்மை நிர்ப்பயமாய்க் கூடி இன்பந்தருவேன். நாளைமுதல் ஐந்து நாள்தனையும் என்பர்த்தா உம்மிடத்தில்அகப்படாவிட்டால்ஆறுநாள் முதல் உம்மைக் கூடுதற்கு யாதொரு ஆக்ஷேபமு மின்றென்றாள். இதைக்கேட்ட சோமேசனென்னும் வர்த்தகன் புளகாங்கிதங் கொண்டு உன் இஷ்டப்படியே செய்யடி. மானே! உன் கருத்துக்கிரண்டு செய்யேன் என்றகன்று, தனக்குத் துணையாகச் சுமார் பதின்மரைச் சேர்த்துவைத்துக்கொண்டு கோமளாங்கியின் கொழுநனை எதிர்பார்த்திருந்தான். மீன்பிடிக்கச்சென்ற அரசன் முதலினோர் கூடாரத்தண்டைவந்து கோமளாங்கியைக்காணமல் தாதிகளைக் கேட்க, அவர்கள்

காலையில் இங்குவந்த கிழவி சமுத்திரக்கரைக்கு அழைத்துச்சென்றாளென்றதைக் கேட்டவுடனே ஐவரும் கடற்கரைக்குச் சென்று அப்போது தள்ளிக்கொண்டு செல்லும் ஒரு கப்பற்காரனை விசாரித்தபோது, அவன் அரசனைப்பார்த்துப் பிரபோ! இவ்வூர்ரத்தினவர்த்தகனொருவன் ஒரு யௌவன சுந்தரவதியையும், கிழவி யொருத்தியையும் படவிலேற்றிக்கொண்டு இப்போதுதான் விரைந்துசென்றான். நீங்கள் என் படவிலேறுங்கள்; அவனைப் பிடித்துத்தருகிறேனென, ஐவரும் அதிலேறிக்கொண்டார்கள். படவு விரைந்தோடியும் ஆசாமிகள் அகப்படாமல் அக்கரைசேர்ந்து நான்குநாள் தனையும் தேடித்தேடிக்காலோய்ந்து கண்ணிருண்டு வெசாரி அன்றிரவு ஓர் சத்திரத்தில் அன்னமுண்டுநித்திரைசெய்து ஐந்தாநாளெழுந்து எல்லோரும்சாமியார்வேடந்தாங்கி வீடுவீடாய்ப் பிச்சையெடுக்கலானார்கள்.

'அகப்பட்டுக்கொண்டவனுக்கு அஷ்டமத்திற் சனி' என்பது போல் இப் பிச்சைக்காரர்கள் கோமளாங்கிவீட்டிற்கு வந்து,

"கோமள வல்லித்தாயாரே! கொஞ்சம்-குஞ்சிபாதைக் கன்னம் கொடுத்திடுவாயே தனதிந்தி நாதிநதி நானா - திந்தி நாதிந்தி நா திந்தி நாதிந்தி நானா" என்று பாடினர். இதைக்கேட்ட கோமளாங்கி மேலுப்பரிகையி லிருந்தபடியே தன் கையைத்தட்டி முகத்தைக் காட்டினள். ஐவரும் அவளைப் பார்த்து சந்தோஷித்து அர்த்தராத்திரியில்வந் தழைத்துப்போவதாய்க் கூறிச்சென்று நினைத்தவிடம் செல்லத்தக்க ஒரு பெரிய நாற்காலி செய்துகொண்டு அதில் ஐவருமேறி கோமளாங்கியிருக்கும் உப்பரிகையி லிறங்கி அரசபத்தினியையும், கிழவியையும், நித்திரை செய்துகொண் டிருந்த வர்த்தகனையும் ஏற்றிக்கொண்டு தயாளபுரிக்குச்செல் என, அந்நாற்காலி மேலேகிளம்பி சமுத்திரநடுவில் வந்துகொண்டிருந்தது. நிலவு பட்டப்பகலைப் பிரகாசிக்கிறது. கிழவி விழித்துக்கொண்டு தான் ஆகாயமார்க்கமாகச்செல்வதைக் கண்டு பயந்து ஓவென் றலறினள். வர்த்தகனும் இச்சத்தத்தால் மருண்டெழுந்தான். அரசன் கிழவியைத் தூக்கிநடுக் கடலில் வீசியெறிந்தான். வர்த்தகன் நாற்காலியில் உட்கார்ந்திருப்பவர்களைக் கண்டு முகத்திலறைந்துகொண்டழுதான். அரசன் நடந்த விஷயத்தைக் கோமளாங்கியைக் கேட்டுத் தெரிந்து உடைவாளையுருவிக் கையிற் பிடித்து அடே சிறிதும் அறிவில்லாத வர்த்தகனே! பிறன்மனைவியை இச்சிப்பது கூடாதென்று தெரிந்தும் கற்புடைய

எனது மனைவியை உன் கைகளாற் பற்றினமையின் அக்கைகளை இதோ துணிக்கிறேனென்று இரண்டுகைகளையும் வெட்டினான். விரும்பிப் பேசிய நாவைப் பிடித்திழுத் தறுத்தான். கோமளாங்கியைக் கூர்மையாகப் பார்த்த கண்களைக் குத்தினான். வர்த்தகனை இவ்வாறெல்லாம் சிதைத்துக் கடைசியாக அவனை மேலே தூக்கிப் பிடித்துக் கைவாளா லிரண்டுதுண்டு செய்தான். அது கடலிற்போய் விழுந்தது. பின்னர் தயாளபுரியை யடைந்து தன்னுடனிருந்த எல்லோர்க்கும் போக விடைதந்து, அரசனும் கோமளாங்கியும் மதிமந்திரியும் திருவந்தபுரிசென்று சுகமே வாழ்ந்திருந்தனர். அரசே வீரவர்ம! மாரன் பட்ட துன்பத்தைப்போல் நீ யடைந்த கஷ்டம் ஒன்றுமில்லையே. இதற்குள் பெருமூச்சுவிட்டு வருத்தப்படுவாயானால் நீ மோகங்கொண்டிருக்கும் மதனலீலாவதியை யடைதல் கஷ்டம். மனதைத் தளரவிடாதே. கனகாம்புஜம் என்னும் ஓரேழைப்பெண்ணை யிச்சித்த மதன னென்போன் பட்டபாடை நீ கேட்டிருந்தால் உனக்கு இவ்வளவு மனத்தளர்ச்சி யுண்டாகாதென்று கிளி சொல்ல, வீரவர்மன் அஞ்சுகமே! மதனனென்போன் யார்? கனகாம்புஜத்தை இச்சித்த விதமெப்படியென்று கேட்க, சுகம் சொல்லத் தொடங்கிற்று.

## கனகாம்புஜம்.

மதன னென்பவன் சுமார் இருபத்திரண்டு வயதுடைய யௌவனன். அழகுந் தேகவலியு முடையவன். அவற்றோடு கல்வியறிவும் கடவுளிடத்தில் பக்தியுங்கொண்டவன். இவன் தீர்த்தநகருக் கரசனாகிய சுவேதனென்பவனுடைய செல்வப் புதல்வன். இவனுக்கு விவாகம் செய்விப்பதற்காகத் தன்னினுமிக்க சிறப்பினையுடைய நன்சூடாவென்னு நகரத்தரசன்குமாரத்தியாகிய கிருஷ்ணவேணியைப் பெரியோர்கள் முன்பாக நிச்சயார்த்தம் செய்யப்பட்டது. இஃது இப்படியிருக்க,

ஒருநாள் மதனனென்பவன் தனது பிரிய நண்பனாகிய முராரியென்பவனோடு சேர்ந்து சாயரக்ஷை ஐந்துமணிக்குத் தீர்த்தநகர்க் கண்காக்ஷிசாலைக்குச்சென்று உல்லாசமாகத் திரிந்து அங்கு வைத்துள்ள சித்திரப் பிரதிமைகளைக் கண்டுமகிழ்ந்து வீடுதிரும்பி நண்பனுந் தானுமாக உண்டாட்டயர்ந்து தாம்பூலந்தின்று சயனவறைக்குச் சென்று எதிரெதிர் போட்டிருந்த மஞ்சத்திற் படுத்துறங்கினர். அப்போது மதனனுக்கு விவாகமாக இரண்டுநாட்கள்தா னிருந்தன.

இப்போது பொழுதுவிடிந்து மணி ஆறிருக்கலாம். மதனனென்னும் அரசகுமாரனுடையநண்பனாகியமுராரி நித்திரைவிட்டெழுந்து மதனனை மஞ்சத்திற் காணாமல் அவனை வெளியே தேடிச்சென்றான். பார்க்கவேண்டிய இடமுழுதுந் தேடிப்பார்த்தான். அரசகுமாரன் காணப்படாமையால் தன் வீடு சென்றான். ஒருநாள் - இரண்டுநாளுமாயிற்று. ஆளைக் காணோம். கலியாணநாளுங் கடந்ததால் ஊர்முழுதும் இராஜகுமாரனைக் காணோமென்னுஞ் சத்த மெழுந்தது.

மதனனுடைய தந்தையாகிய சுவேதவரசன் சேவகர்களை முராரி வீட்டுக் கனுப்பி யழைத்துவரும்படிச் சொன்னான். சேவகர்கள் முராரியைக் கண்டு 'தங்களை விரைவாக அழைத்துவரும்படி அரசன் கட்டளையிட்டார்' என, முராரி பழய உடுப்புகளை எடுத்துச் சீக்கிரமாக உடுத்திக்கொண்டு அவர்களுடன் நடந்து சென்று அரசனைக் கண்டு நமஸ்கரித்தான். அரசன் "அடே முராரி! என் குமாரன் சென்றவிடத்தை இன்னும் பதினைந்து நிமிஷத்தில் நீ சொல்லாவிட்டால் உன்னைச் சிறைச்சாலையி லிடுவேன்" என்றான். முராரி "அரசர்பெருமானே! எனது உயிர்த்தோழன் சென்றவிடம் நானறியேனென்று மூன்றுநாளைக்கு முன்னமே தாங்கள் கேட்டதற்குக் கூறினேன். அவன்பிரிவினால் நானடையுந் துன்பத்திற் களவில்லை. என்னைச் சிறைப்படுத்தவேண்டுமென்னும் பிரீதி தங்களுக் கிருக்குமாயின் அதைத் தடைசெய்வோர் யார்?" என்றான். அரசனுக்குக் கோபமதிகரித்துச் சிறையிட உத்தரவுசெய்தான். அவ்வாறே கொண்டுபோயடைத்தார்கள். ஐந்து நிமிஷத்திற்கெல்லாம் முராரியை யடைத்த அறையினின்றும் பெருஞ்சத்தங் கிளம்பியது. காவலர் அறையைத் திறக்க, முராரி அரசனிடம் தன்னைக் கொண்டுபோம்படி வற்புறுத்தினான். அவ்வாறே அவனை அரசனிடம் அழைத்தேகியபோது முராரி வாய்விட்டழுதுகொண்டே சென்றான். அப்போதவன் வலது கரத்தில் கடிதமொன் றிருந்தது.

முராரி, அரசே! தெய்வகதியாய் இக் கடிதம் என் ஜேபியிலிருந்தது. தயைசெய்து படித்துப்பாருங்க ளென்றான். வேந்தன் ஆவலோடதனை அடியில் வருமாறு வாசிக்கலாயினான்.

எனது நண்பனாகிய முராரிக்கு:—

நேற்றையதினம் இரவு நீயும் நானும் உண்டு பள்ளியறையிற் படுத்துறங்கினோமல்லவா? அப்போது நான் ஒரு சொப்பனங் கண்

டேன். அச்சொப்பனத்திற் கண்ட மாதின் அழகையும் லக்ஷணங்களையும் என்னால் எழுதிமுடிவதன்று. பார்த்தவரையிற் சிறிதெழுதலாமென்றெண்ணினேன் எனினும், அவள்மேல் எனக்குண்டான காதல் எனது பிடரைப்பிடித்துத் தள்ளியதால் அதிகமெழுதவில்லை. அந்தக் காமரசக்கன்னியின் பேரும் ஊரும் கடிதத்திலெழுதிக்காட்டத் தெரியாவிடினும், கனவிற்கண்டபடி அவ்வடையாளங்கள் என்மனத்தில் நன்றாய் அழுந்தியிருப்பதால் அதன்படியேசென்று எனது இன்பரசத் தேனைப்-பாகைத்-தெள்ளமுதைத் தேடிக் கொண்டுவந்து விவாகஞ் செய்துகொள்ள இதோ சுவேதநகரைவிட்டுப் புறப்பட்டேன். எனக்காக நீ வருந்தாதே. என் தாய்தந்தையர் வைத்துக்கொண்ட விவாகம் தடைபட்டதைப்பற்றியும், என்னைப்பற்றியும் அதிகம் வருந்தினால் இக்கடிதத்தைக் காட்டிச் சமாதானஞ்செய். நான் விரைவில் வந்து சேருகிறேன். நாட்செல்லுமானால் கடிதமூலமாகத் தெரிவிக்கிறேன். சிநேகா! முராரி! என்னை நினைந்து வருந்தியிராதே. என் கண்ணையும் மனத்தையும் அக் கனவுமாதின் அழகு கொள்ளைகொண்டதால் உன்னையும்விட்டுச் செல்லலாயினேன். மன்னிக்கவும்.

இங்ஙனம்:

மதனன்.

இவ்வாறெழுதியிருந்த கடிதத்தை வாசித்துப்பார்த்த சுவேதவரசன் தலை கிருகிருக்கக் கீழே உட்கார்ந்து, ஐயோ மகனே! இனி உன்னை எப்போது காணப்போகின்றேன். நான் பெற்ற மூன்று பிள்ளைகளில் நீ ஒருவனே நின்றாய். அதுவும் ஈசனுக்குப் பொறுக்காமல் பிரித்தானோ? ஹா! என்போலும் பாபி யாருமிரார். இவ் வுண்மை தெரியாமல் ஐயோ. முராரியைச் சிறைசெய்து பாவியானேன் என்று பலவாறு துக்கித்திருந்தான். இது தெரிந்த மதனனுடைய தாயும் மிக்க வருத்தமுற்றாள்.

இனி மதனன் எவ்வாறிருக்கின்றானென்பதைக் காண்போம்.

மதனன் தான் கண்ட கனவுமாதின்மீதுள்ள மோகத்தால் தன்னுடைய சிநேகனுக்குக் கடிதமெழுதி அவன் ஜேபியில் வைத்துவிட்டு யாருடனுஞ் சொல்லாமல் வேகமாய்ச்செல்லும் ஓர் குதிரைமேலேறிச் சென்றான். அவன் கனவிற் றோன்றிய சிற்சில வழிகளும், வீடு-தோப்பு-துரவு-பங்களாக்கள் முதலிய இடங்களும் தோற்றவே ஆச்சரியத்தோடு அவற்றையெல்லாம் பார்த்துக்கொண்டு சென்றான்.

இவ்வாறு பதினைந்துநாள்தனையும் பல இடங்களில் இறங்கி உண்ப
தும் இளைப்பாறுவதுமாகச் சென்றான். மரங்க ளடர்ந்த ஒரு தோப்
பும் அதிற் பெரிய தூரவும் ஒருபக்கத்தில் மிளகாய்ச்செடியும், மற்
றொருபக்கத்தில் கொத்துமல்லிப்பயிருமாக விருந்தன. அக்குடிசையி
னொருமூலையில் மண்சுவ ரெழுப்பப்பட்டு அதன்மேல் விழல்வேய்
ந்த வீடொன்றிருந்தது. அது விழல்வீடெனினும் அதன்வெளிப்புற
த்தில் பார்ப்பதற்கு மிக சுத்தமாகக் காணப்பட்டமையாலும், கனவிற்
கண்ட மாது இருந்த இடமாகவும், சில்லென்னுங் காற்று வீசியத
னாலும் அரசன் குதிரையைவிட்டிறங்கி சின்னேரம் நிழலிற்றங்கியிரு
ந்து தாகமேலீட்டால் நீரருந்த அக் குடிசையருகிற் சென்றான். அவ்
வீட்டின் வாசற்படியருகில் மணைமேல் ஒரு கிழவி யுட்கார்ந்து வெற்
றிலைபாக்கு நறுக்கிக்கொண் டிருந்தாள். அரசகுமாரன் "பாட்டீ!
குடிக்க ஜலம்வேண்டும்; தருகிறையா?" என்றான். கிழவி அவன்
முகநோக்கி அரசகுமாரனென்றுணர்ந்து "அப்பனே! உனக்கு வே
ண்டுவது வெந்நீரோ? சுத்தஜலமோ?" என, மதனன், "சுத்த
ஜலம்" "அம்மா: கனகாம்புஜம்! செம்பைத் துலக்கிச் சுத்தஜலம்
கொண்டுவா; காத்திருக்கிறார் என்றாள்.

வீட்டு வாசற்படியில் விட்டிருந்த திரையை இடதுகையால் தள்
ளிக்கொண்டு வலதுகையில் செம்பொன்றுபிடித்து ஒரு சுந்தரப்பொ
ற்கொடிவந்து நின்றாள். மதனன் ஒருநொடியில் ஜெகத்தைமோகிக்
கச்செய்யும் அவளிடம் தாண்டிக்குதித்து ஹா! என் கனவில்வந்த கற்
பகமே! என்கண்ணே! நான் பிழைத்தேன்! பிழைத்தேன்!! என்
ஜன்மம் ஸாபல்யமாகியது என்று அவளருகில் நெருங்குவதற்குள்
அச் சுந்தரவதி செம்பைக் கீழேவைத்து மறைந்தாள். அரசகுமாரன்
பெண்ணணங்கே! இனித் தாள வசமல்ல; நீ மறைந்தால் என் உயி
ரும் என துடலைவிட்டு மறையும். பாட்டீ! என்னை நீ அரசகுமார
னென் றறியாயா? உன் மகளை எனக்குக் கொடுக்க என்ன தடை?
என் கனவில் உன் மகள் தோன்றினமையால் நிமைப்போதும் நீங்கற்
கரிய எனது நண்பனையும், எனக்கென் றேற்படுத்திய விவாகத்தை
யும் தாய்தந்தையரையும், அரசசெல்வத்தையும் மதியாமல் துறந்து
வந்தேன். நான் வழிபடுந் தெய்வவருளால் எழிலாரணங்கைக் கண்
டேன். என் மனங்களிக்கச் சிறிதுநேரமாவது என்முன் நிற்காமல்

உட்சென்றாள். அம்மணீ ! இனி எனக்குத் தாயுந் தந்தையும் பிறவும் நீயே யாவை. இவ்வளவு கஷ்டப்பட்டுவந்த என் மனங்களிக்க மற்றொருதரம் உன் குமாரத்தியின் முகதரிசனம் எனக்குக் கிடைக்கும்படி செய்விக்கவேண்டும் ; தயைசெய்து வரவழையும் என்று கெஞ்சிக் கேட்டுக்கொண்டான்.

கிழவி, அரசகுமார ! அப்படியேயாகட்டும் ; காண்பிக்கிறேன். இன்னும் உனக்கு விவாகமாகவில்லையோ ?

மத:—பாட்டீ ! ஆகவில்லையென்று முன்னமேதெரிவித்தேனே.

கிழவி:—அப்படியானால் எனது பெண்ணாகிய கனகாம்புஜத்தைக் கலியாணஞ் செய்துகொள்ளவேண்டுமென்பது உன் இஷ்டமோ ?

மத:—ஆம். அதற்காகத்தானே இவ்வளவுதூரம்வந்தேன்.

கிழவி:—என் கண்ணே ! கனகாம்புஜம் ! வெளியே வா.

உடனே அப் பெண்மணி வீட்டு வாசற்படியில் வந்து நின்றாள். மதனன் அவளைப் பார்த்தபடி அசைவற்று நின்றானெனினும், தன்னைத்தான் மறந்தான். சின்னேரத்தில் தெளிந்து அத் தோற்றம் அவன் கண்ணைவிட் டகலாதிருந்ததால் 'என் கண்ணே' என்று அவளைச் சேர்த்துத் தழுவச்சென்றான். கனகாம்புஜம் அதற்கு முன்னமே வீட்டுக்குட் போய்விட்டாளாதலால் மதனன் கைக்கு அகப்படவில்லை. அரசன் கீழேவிழ்ந்து மூர்ச்சித்தான். கிழவி அவனை உபசரித்துத்தேற்றி 'உன் பெயரென்ன?' வென்று வினவினாள். அதற்கரசகுமாரன் 'என்னை மதனன் என் றழைப்பார்கள்' என்றான்.

கிழவி, மகனே ! இப்பெண்மணி என் புதல்வனுடைய மகளாதலால் எனக்குப் பேத்தியாகவேண்டும். இப் பெண்ணின் பேரழகைக் கண்ட இவள் தகப்பன் இதோ ஒரு கஜ உயரத்திற்குச் சுவரெழுப்பிக்கட்டப்பட்டிருக்கும மாடத்தில் திரவியத்தைக்கொட்டி நிறையச் செய்பவன் யாரோ அவனே தன் குமாரத்திக்குக் கணவனாவான் என்று சொல்லிக் காலஞ் சென்றான். என் பிள்ளை காலஞ்சென்று இப்போதைக்குப் பதினொருபாத மாகின்றன. இவள் ப்ரவுடையாகி எழுமாதத்திற்குள் இவளழகைக் கேள்விப்பட்டு வந்து இம்மணி மாடத்தில் கொண்டுவந்து குவித்த பொருளுக்கும் வேந்தர்களுக்கும் கணக்கில்லை. எவ்வளவு பொருள்குவித்தும் அம் மணிமாடம் நிறையாமையால் வெட்கிச் சென்றனர். நீ அவர்களையெல்லாம் விட பேரழ

குடையவனாய்க் காணப்படுகின்றாய். அதோடு கனகாம்புஜத்தைக் கனவிற்கண்டுவந்ததாகவும் விவாகம் தவறிவிட்டதாகவும் உன் வாய் மொழியாற் றெரிந்ததனையால் உனக்கே இப்பெண் மனைவியாவா ளென் றெண்ணுகிறேன். பின்னர் உன் அதிர்ஷ்டமும் தெய்வச் செயலும் எவ்வாறிருக்கிறதோ நான் அறிந்திலேன். பொருள் விஷய மாகப் பிரயத்தனப்பட்டு இம் மணிமாடத்திற் கொட்டி நிறப்புவாயா னால் தேவர்களுக்கும் கிடைத்தற்கரிய கனகாம்புஜத்தை யடைந்து இன்பநுகர்ந்து ஆநந்தமடையாய். இதுதான்முடிவானசங்கதி. பொ ருளைக்கொண்டு மணிமாடத்தை நிறப்புவது உன்கடன்; அவ்வாறு அது நிறைந்தபின் பெண் கொடுப்பது எனக்குரிய கடனும். இனி இதைப்பற்றி நச்சு நச்சென்று என்னை யொன்றும் கேட்கவேண்டா மென்று கண்டிப்பாய்ப் பேசினாள்.

அரசகுமாரன் மணிமாடத்தருகிற்சென்றுகண்டு சந்தோஷித்து ஒரு பதினாயிரரூபாய் கொட்டினால் நிறையத்தக்க இம் மணிமாடத் தையா முடிமன்னர்கள் நிறப்பாதுவிட்டார்கள். இப் புதுமையை யான் காண்பேன் என்று அவ்விடம்விட் டகன்று சிறிது தூரத்தி லுள்ள ஓரழகிய பங்களாவை வாடகைக்குப் பேசி யமர்த்திக்கொண்டு அடியில் வருமாறு தன் தந்தைக்குக் கடிதமெழுதலானான்.

தேவரீர் அண்ணா அவர்கட்கு :

அடியேன் மதனன் வணக்கமாக எழுதிக்கொள்வதாவது க்ஷேமம்; தங்கள் முதல் அனைவருடைய க்ஷேமாதிசயங்களையும் தெரிவிக்கும்படி பிரார்த்திக்கின்றேன்.

தெய்வவருளாலும் தங்களுடைய நற்கோரிக்கையினாலும் நான் கனவிற்கண்ட மாதை யடைந்தேன். அப் பெண்மணியின் பெயர் கனகாம்புஜம். அவ ளழகுக்கேற்ற பெயர்தான் அது. அப் பெண் ணணங்குபோலும் அழகுடைய மற்றொருஸ்திரீ யிருப்பாளென்று கனவிலும் நினையேன். ஆகவே அவளை யடையவேண்டுமானால் இங்கு சிறிதாகக் கட்டியிருக்கும் மணிமாடத்தைப் பொருளால் நிறப்பினா லன்றி முடியாது. அப்பெண்மணியின் பேரழகைக் கேள்வியுற்றுவந்த அரசர்கள் குவித்த பொருளால் அம்மணிமாடம் நிறம்பாமையால் வெட்கிச் சென்றதாகப் பிரஸ்தாபம். ஆதலால் தாங்கள் இக்கடிதம் கண்டதே பொக்கிஷத்தைத்திறந்து பத்துப்பட்டுதிறையப் பொருளை ச்சேர்த்து யாரும் அபகரிக்காதவண்ணம் பந்தோபஸ்தாய் எட்டுதா

லையில் என்கைக்குவரச்செய்யவேண்டும். என்சினேகன் முதல் நீங்கள் யாரும் என்னிடம் வரவேண்டாம். பொருள்வந்து சேர்ந்தவுடனே என் மனமுவக்கும் கனகாம்புஜத்தை அழைத்துக்கொண்டு ஊருக்குவந்து யாவரும் கண்டுகளிக்கும்படி விவாகஞ் செய்துகொள்ளுகிறேன். நான் சொன்ன கெடுவுக்குள் தாங்கள் பொருளனுப்பாவிட்டால் என் உயிர் உடலைவிட் டகலும்.

என்னமோ எழுதினேனென்று பராமுகமா யிருக்கவேண்டாம்.

தங்கள்ஊழியன்:

மதனன்,

விரசைநகர்.

சுமேதவரசனுக்குக் கடிதம் கிடைத்துப் பார்த்து அதற்கு முத்தந்தந்து மகன் உயிர்பெற்றிருப்பதற்காக மகிழ்ந்து உடனே பத்துக்கப்பல் நிறைய பொருளேற்றி மேற்கண்ட விலாசத்திற் கனுப்பிவிட்டு சீக்கிரம்வந்துசேரும்படி கடிதமுமெழுதினான். அது ஆறுநாள் மதனனுக்கு வந்துசேர்ந்தது. அரசகுமாரன் மனமகிழ்ந்து அப்பொருள்களனைத்தையும் தானிருக்கும் பங்களாவில் குவித்துக் கொண்டான். மறுநாளுதயத்தில் வேலைக்காரர்களைக் கொண்டு ஒரு கப்பல் பணத்தை வாரிக்கொண்டுபோய் அம் மணிமாடத்திற்கொட்டினான். அது சிறிதும் நிறைந்திலது. அரசகுமாரன் ஆச்சரியப்பட்டு அம்மணிமாடத்துள் எட்டிப்பார்த்தபோது சிறி தாழத்தில் பொருளிருப்பதாகப் புலப்பட்டது. மறுபடியும் இரண்டுகப்பற் பணத்தைக்கொண்டுவந்து ஒரேகாலத்திற்கொட்டினான். அதுவும் முன்போலவே யிருந்ததால், ஆ இதென்ன ஆச்சரியம்! இம் மணிமாடத்தின் அடியில் சுரங்கமுண்டோ வென்று அங்கிருக்கும் கிழவியைக் கேட்டான். அதற்கவள் தனக்கொன்றும் தெரியாதென்று ஒரே பேச்சிற் சொல்லி முடித்தாள். பாட்டீ! அம் மணிமாடத்தைச் சோதித்துப் பார்க்கலாமாவென்று மதனன் கேட்க, கிழவி, 'அப்படிச் செய்வதற்கு எனக்கும் உனக்கும் உத்தரவு கிடையா'தென்றாள். பின்பு மதனன் மனமுடைந்து எப்படியாயினுமாகுக. அடைந்தால் கனகாம்புஜத்தை யடைவது; இல்லையானால் நம்முயிர் துறப்பதே தகுதியென்று தீர்மானித்துத் தனக்கென்று ஒரு பைசாகூட வைத்துக்கொள்ளாமல் மிகுதியாயிருந்த எழுகப்பற் பணத்தையும் கொண்டுவந்து கொட்டினான். அவ்வளவும் 'ஆற்றிற் கரைத்த புளி' போல் பயனில்லாமற் போயிற்று. என்ன செய்வான்

மதனன்? இதன் சூது தெரியவில்லையே! கால் கப்பற் பணமும் பிடி
க்கக்கூடாத அவ்வளவு சிறிய இம் மணிமாடம் பத்துக்கப்பற் பண
த்தையும் விழுங்கி எப்பமிட்டதே! இனி பொருளுக்கு என்செய்
வது? மறுபடியும் பொருளனுப்பும்படி நமது தந்தைக்குக் கடித
மெழுதினால் அவர் உடனே பிரயாணப்பட்டு இங்குவந்து நம்மை
யழைத்துக்கொண்டு போய்விடுவார். அப்போது நமது பிரயாசமெ
ல்லாம் வீணாகும். கனகாம்புஜத்தைக் கைவிடவேண்டிவரும். நமது
பதிக்குச் சென்று வருந்திச் சாவதைவிட கனகாம்புஜத்தின் காலில்
வீழ்ந் திறப்பதே மேலானகாரியம் என்று தீர்மானித்துக்கொண்டு
கிழவியைக் கண்டு ‘பாட்டீ! பத்துக்கப்பற் பணத்தைக் கொட்டி
யும் பயனில்லாதொழிந்தது. நான் உனது பேத்தியையடையுமுபா
யத்தைத் தெரிவித்துப் புனிதனாக்கலாகாதா? இதனாலுனக்கெ
ன்ன தீதா சம்பவிக்கப்போகிறது? அம்மணீ! சிறியேனிடத்தில்
தயைசெய்யவேண்டும்’ என்றான். அதற்குக் கிழவி மதனா! நீ பேசு
வதெல்லாம் வீண்விஷயம் நீ மணிமாடத்தைப் பொருட்குவியலால்
நிறப்பினாலன்றி வேறுவிதத்தில் காரியசித்தியடையலா மென்பதை
அறவே மறந்துவிடென்று முடிவாகக் கூறிப் பேசுவதை நிறுத்
தினாள்.

மதனன் இனி வாய்ப்பேச்சிற் பயனில்லையென்று அவ்விடம்
விட்டகன்று தான் வசிக்கும் பங்களாவுக்குச் சென்று துக்காக்கிரா
ந்தனாய் நெடுநேரம் வருந்தியிருந்து, இனி நம்முடைய சமர்த்தால்
ஆகுங் காரிய மொன்றுமில்லை. நமக்கு உண்மையான தாயும் தந்தை
யும், குருவும் மற்றெல்லாமுமாக விளங்கும் பார்வதி சமேதனாகிய
பரமசிவமே துணையிருந்து காக்கவேண்டும். அக்கடவுள் மனமிர
ங்கி எனக்குக் கிருபை செய்யும்படி காட்டிற் சென்று கட்டை
வெட்டி அதிற் கிடைக்கும் பணத்தில் பாதி என் வயிற்றுக்கு உண்
டு மற்றப்பாதியைத்தேடற்கரிய திரவியமாகிய கனகாம்புஜத்திற்
காக மணிமாடத்திற் போட்டுவருகிறேன். பத்துக்கப்பல் பணத்தை
விழுங்கி எப்ப மிட்ட மணிமாடம் தினம் ஒரு அணா இரண்டணா
போடுவதில் நிறம்பப்போகிறதா? இல்லை! நான் படப்போகுங் கஷ்
டத்தைக் கண்டு கடவுள் மனமிரங்கி கனகாம்புஜத்தை எனக்கு
மனைவியாகச் செய்விப்பாரென்னும் நம்பிக்கையால் இதோ அவனு
டைய பாதங்களை என் மனமாற வணங்கிக் கட்டைவெட்டச் செல்
கிறேன் என்று புறப்பட்டான். விரசை நகரிலுள்ள பெருங்காட்டிற்

புகுந்தான். ஆங்குள்ள பல மலைகளைக் கண்டான். அவற்றில் மிக நீண்டும் அகன்றுமுள்ள பரத்வாசர் மலைமேல் ஏறினான். எங்குபார்த்தாலும் கணக்கில்லாத பல சந்தனவிருக்ஷங்கள் எதேஷ்டமாயிருந்தன. யாதொன்றும் யோசியாமல் தன் கையிற் பிடித்திருந்த கோடாலியால் ஒரு சந்தனவிருக்ஷத்தைச் சேதித்து ஒணான்கொடியால் அதனை ஒரு பெரிய கட்டாகக்கட்டித் தூக்கமுடியாமல் அவஸ்தைப்பட்டு தலைமேற் சுமந்து தட்டுத் தடுமாறி அவன் மலையிட்டிறங்கும்போது யார் மனந்தான் குழம்பாது? மதனன் * மற்கடம் போல் பிடித்தபிடியை விடாதவன். அரசகுமாரன் அவ்வாறு கொண்டுவந்த சந்தனக்கட்டையை ஒரு வர்த்தகன் நான்குரூபாய்கொடுத்து வாங்கிக்கொண்டான். அதில் இரண்டு ரூபாயைக் கொண்டுபோய் மணிமாடத்திற் போட்டு மற்றொரு ரூபாய்க்கு அரிசியும் ஒரு ரூபாய்க்கு நெய் தயிர் காய்கறி வகைகள் வாங்கி சமையற்காரியிடம் கொடுத்து சமையற் செய்வித்து முப்பது பரதேசிகளோடு தானும் உண்டு தாம்பூலந்தரித்துக்கொண்டு மறுபடியும் காட்டிற்குச்சென்று அங்குள்ள அடர்ந்த பல மரங்களைக்கண்டு இவற்றை நமக்காகவே கடவுள் இக் காட்டில் சிருஷ்டித்துவைத்தனர் போலுமென்று மகிழ்ந்து அன்று பட்ட கஷ்டத்தால் பசும்புல்லின்மேற்றலைசாய்த்துப் படுத்துறங்கினான்.

மறுநாள் சூரியோதயத்திற்கு விழித்துக்கொண்டான் எனினும், நேற்று பட்ட துன்பத்தால் கைகால்களெல்லாம் நோக்காடுண்டாயிற்று. ஆயினும் அதற்காகச் சோம்பி நெடுநேரம் படுத்திராமலெழுந்து மலைச்சுனையைக்கண்டுபிடித்து காலைக்கடனைக்கழித்து வயிறு நிறைய ஜலமருந்தி, கோடாலி கைக்கொண்டு நேற்று வெட்டி விட்டிருந்த பாதிமரத்தைச் சிதைத்துக் கட்டித் தூக்கிக்கொண்டு வேறோரிடஞ் சென்றான். அவ் வழியிற் செல்வோரெல்லாம் சந்தன விருக்ஷத்தின் மணத்தை முகர்ந்து அதைச் சுமந்து செல்பவனுடைய முகவசீகரத்தையும் அழகையும் கண்டு ஆச்சரியப்பட்டார்கள். பிரமன் இவ்வளவு அழகுடைய புருஷனைப்படைத்து அவன் தலையில் கட்டை சுமக்கவைத்தது கொடுமை, கொடுமை; மிகக்கொடுமை என்று அப்போது அவ்வீதியில் நின்றிருந்த ஸ்திரீகள் எண்ணினார்கள். அரசகுமாரனுடைய பேரழகையும், யௌவன தசையையும் கண்ட ஒரு பிரபுவானவன், ' ஓ கட்டை: விற்கிறதா

* மர்கடம் - குரங்கு. இதன் குணம் பற்றினதை விடாமை.

அது' என்றான். மதனன் 'ஆம்' என, பிரபு 'என்னவிலையாகிறது?' என்றான். 'உங்கள் இஷ்டமானதைக் கொடுங்கள்' என்று சுமையைச் சிரோன்னதத்திச் சாற்றத் தெரிக்கத் தன் கையாற் பிடித்துக்கொண்டான்.

பிரபு, மதனனை நோக்கி 'ஐயா சுந்தரரூபனாகிய உனக்கு இந்தக் கட்டைசுமக்கும் கிரகசார முண்டாவானேன்? நீ எங்கிருப்பது? உன் தாய்தந்தையர் யாவர்? என்று வினவ, அரசகுமாரன், 'ஐயா நான் ஓர் ஏழைக்குடும்பி. என் தந்தை விறகுவிற்று ஜீவித்து வந்தார்; நானும் அத் தொழிலேற்றுச் செய்கின்றேன். ஏழைக் குடும்பத்தில் அழகாகப்பிறப்பதில்லையா? நேரமாகிறது, ரூபாய் கொடுத்து என்னையனுப்புங்கள்' என, பிரபு இவன் மறைத்துப் பேசுகிறானென்றெண்ணி அவன் கையிற் பத்துரூபாய் கொடுத்தனுப்பினான். அதனைப்பெற்றுச்சென்று ஐந்து ரூபாயை மணிமாடத்திற் போட்டு மற்ற ஐந்துரூபாயை முந்தினநாள்போல் செலவு செய்து சுமார் ஐம்பது பரதேசிகளோடு தானுமுண்டு மலைமிசை யேகினான்.

இவ்வாறு பதினேழுநாள்தனையும் செய்திருந்தான். பதினெட்டாநாள் அம் மலைமிசை நடந்த ஓரதிசயத்தைக் கூறுகிறோம்.

பதினெட்டாநாள் மதனன் கட்டை வெட்டவில்லை. மலைமிசையுள்ள கன்னி மருத்தி பரம்புலியினுட்கார்ந்து தனைகாம்புஜத்தின் பேரழகை நினைந்து மோகவலையிற் சிக்கி வருந்தி கடவுளருள் இன்னும் நமக்குக் கிடைக்கவில்லையே யென்று மெய்யன்போடு கடவுளிடத்தில் மனத்தைச் செலுத்தி நெடுநேரம் தன்னை மறந்திருந்தான்.

இப்போது இரவு பன்னிரண்டாகி மேலே அரைமணியுமாயிற்று. யாதொரு பொருளும் கட்புலனுக்குத் தெரியாதபடி இருள் வந்துசூழ்ந்தது. மதனன் இப்போது கண் திறக்கவில்லை யெனினும் * சாக்கிரத்தினனாயிருக்கிறான். ஒருநிமிஷம்-இரண்டுநிமிஷம்-மூன்றுநிமிஷமுமாயிற்று. மதனன் தன் கண்களைத் திறந்தான். பேரிருளாயிருந்தது. உடனே தன்னுடைய பூர்வஸ்திதியையும் தற்காலஸ்திதியையும் எண்ணிப்பார்த்து நகைத்தான். அரசகுமாரனுக்கு நகையுண்டான அந்த நிமிஷத்திலேயே தன் முகத்திற்கு நேரே வடபுறத்தில் பேரொளியொன்று தோன்றியது. அவ் வொளியின் மத்தியில் நொட்டைக்கல்லையும் முகமலர்ந்தவராய், அழகிய மார்புந் திர

* சாக்கிரம் - நினைவோடிருத்தல்.

ண்ட தோளும், முன்வந்தவயிறும் முழுதும்போர்வையுமாக ஆஜானுபாஹுவாகிய ஒரு சுந்தரபுருஷன் துலங்கினான். அந்தப்புருஷன், பளபளவென்று மின்னுதலையுடைய காவி வஸ்திரமுடுத்தி, படர்ந்து அகன்ற நெற்றியில் விபூதிதூளி * சண்ணித்து மார்பினிடத்தே உருத்திராக்கமாலைகள் புனைந்து, தலையில் பின்னலிட்ட சடைகள் ஆலம்விழுதுபோல் கற்றைக்கற்றையாகப் புரள அம்மலைமேல் மெல்லநடந்துவந்தார்.

மதனன் அச் சுந்தரபுருஷனைக் கண்டான். [அப்போது அரசகுமாரன் பயந்தான் என்று நாம் சொல்லாமலே இக் கதைபடிப்போர் தெரிந்துகொள்வார்கள்.] அவன் மனத்தில் பெரும்பீதி யுண்டாயிற்று. அதனால் தேக ஆத்யந்தமும் நடுக்கங்கொண்டான். மனதில் பயத்தைத் தவிர வேறே யாதொரு நினைவும் தோன்றவில்லை கால் எடுத்தடிவைக்கக் கூடவில்லை. அச் சுந்தரபுருஷன் நூல் பிடித்ததுபோல் மதனனுக்கு நேராக வந்துகொண்டிருக்கிறார். அதை யெண்ணி மதனன் அதி பீதியடைந்தான். அதோடு தலைநடுக்கல் அதிகமாயினமையின் குப்புற வீழ்ந்து கண்ணை மூடி மண்ணைக் கவ்விக்கொண்டான். தேவபுருஷன்போன்ற அப்பெரியவர் அரசகுமாரனை நெருங்கி அவன்கையைத் தமது கரத்தாற்பற்றி 'மதனா! பயப்படாதே. என்னைக் கண்திறந்து பார்' என்று மதனனை நெடுநேரம் தடவிக்கொடுத்த பின்னர் மதனன் 'வருவது தானே வரும்' என்று மனதைத் திடப்படுத்திக்கொண்டு தலைநிமிர்ந்து அவரைப் பார்த்தான். அப்பெரியவர் அவன்பயத்தை யொழித்து 'மதனா! நீ கனகாம்புஜத்தின்மேல் மையல்கொண்டு இங்கு வந்தனையோ'வென, அரசகுமாரன் பயந்த முகத்தோடு 'ஆம்' என்றான். அவளை இப்போது காண உனக்குப் பிரியமுண்டோ? 'உண்டு' என்றுமதனன் சொல்லி வாய்மூடுமுன்னமே கனகாம்புஜம் மதனன் அருகில்வந்து அவன் கட்புலனுக்குத் தோற்றினாள். அரசகுமாரன் அவளைத் தழுவ விரைந்தெழுகையில் அத்தோற்றம் மறைந்து, ஹா! என் சோலைக்குயிலே! என் மனஞ்சொக்கப் பக்கத்திருந்த நீ இப்போது எங்கு மறைந்து சென்றாய்? என் தேனே! மானே என்று பினற்றலானான். பெரியவர், மதனா! கூடியசீக்கிரத்தில் நீ அப் பெண்மணியை யடைவாய்; வருந்தேல் வருந்தேலென்று மும்முறை கூறினார். மதனன் சந்தோஷித்து அவர்பாதத்தில் வீழ்ந்துவணங்கி 'சுவாமி! கனகாம்

---

* சண்ணித்தல் - பூசுதல்.

புஜம் எனக்கு மனைவியாகும்படி திருவருள்செய்யவேண்டுமென்று எளிய முகங்காட்டி நின்றான். அதற்கவர் அங்ஙனமே யாகுகவென்று தலையசைத்து அவரிடமிருந்த மிட்டாய்ப் பொட்டலங்களில் ஒருவிலை நிறையுள்ள பொட்டலத்தை அரசகுமாரனிடங்கொடுத்து புசிக்கச் செய்தார். சிறிதுநேரத்திற்கெல்லாம் சடைக்கற்றையிணையுடைய காவிவஸ்திரம் தரித்துள்ள சுந்தரபுருஷர் அனேகர் அங்குவந்து சேர்ந்தனர். பத்தரைமாற்றுத் தங்கமெனப் பிரகாசிக்கும் அவர்களுடைய தேகவசீகரத்தைக் கண்டு மதனன் அதிசயித்தான். அக் கூட்டத்தார்கள் மதனனை வேலைக்காரனாக வைத்துக்கொண்டு தமக்குவேண்டிய பொருள்களைத் தருவித்துக்கொண்டிருந்தார்கள். மதனனும் அவர்கள் கருத்திற்குச் சிறிதும் மாறுபடாமல் சொன்னவேலையைச் சுருசுருப்பாய்ச் செய்து சந்தோஷிப்பிப்பான். அக் கூட்டத்தார்கள் இரவு ஒன்பது, ஒன்பதரை மணிக்கு மதனனைத் தம்முடன் அழைத்துக்கொண்டு பட்டணத்துட் சென்று வேண்டும் வரையில் மிட்டாய்வகைகளும், பலகார வகைகளும் வாங்கிக்கொடுத்துவந்தனர்.

ஒருநாள் இரவு பத்துமணியிருக்கலாம். அப்போது அக்கூட்டத்தார்களனைவரும் தாங்களணிந்திருந்த உடைகளையெல்லாம் கழற்றியெறிந்து அரைஞாணை யறுத்தெறிந்து கௌபீனத்தையுமவிழ்த்துவிட்டு நிர்வாணமாகவிருந்து அம்மலையினோர்பால் பெரிய தேக்சாக்களில் சமைத்த அன்னத்தைத் தரையில் அங்கவஸ்திரத்தை விரித்து அதன்மேற்கொட்டி காய்கறிகளைப்பெய்து பிசைந்து, அதன்மேற் சந்தனத்தூளைத் தூவி, அதற்கெதிரில் யாவரும் நிர்வாணமாய் வரிசையாக நின்றுகொண்டு ஜபமாலை கையிற்பற்றி மந்திரோச்சாடனம் செய்துகொண்டிருந்தார்கள். இவர்களிவ்வாறிருக்கையில், மிகவிருத்தாப்பியமும், மேனிவிழுந்து புரளுஞ் சடைக்கற்றையும், உரோமம் அடர்ந்து கூனவிழுந்த ஒருபெண்கிழம் நிர்வாணமாய் சரசரவென்று நடந்துவந்து அங்கு போட்டிருக்கும் படையலுக்குமுன் உட்கார்ந்து கொண்டாள். பயங்கர ஸ்வரூபமுடைய இக் கிழவியைக்கண்ட மதனன் பயந்து நடுங்கி ஒரு மூலையில் பதிந்து உட்கார்ந்திருந்தனன். சின்னேரம் பொறுத்து அவ்வம்மையார் தனக்கெதிரிற் படைத்திருக்கும் படையலில் கையைவைத்துப் பிசைந்து அங்கு நின்றிருக்க ஒவ்வொருவருக்கும் ஒவ்வொருபிடி பிரசாதம் கொடுக்க வாங்கியுண்டு எல்லோரும் அவ்வம்மையார்

காலில் வீழ்ந்து நமஸ்கரித்தனர். அவ்வம்மையார் தலை கவிழ்ந்தபடியே "கொண்டுவா - கொண்டுவா" என, அவர்களிலிருவர் மதனனைத் தூக்கிக்கொண்டுபோய் சப்பளமிட்டு உட்கார்ந்திருக்கும் அம்மையார் காலின்மேற் படுக்கவைத்தார்கள். அம்மையார் படையற்சாதத்தில் ஒருபிடி யன்னமெடுத்து அவன் வாயிலிட்டு "மூடு மூடு" எனலும், அங்கு நின்றிருந்தோரிற் சிலர் மதனன் கண்ணைப் பொத்தினார்கள்.

அப்போது மதனன் ஸ்வாதீனம் தப்பினான், மூன்றுநாள் அவன் கண்விழித்துப் பார்த்தபோது அங்கு பரிமாறியிருந்த படையலும், சித்துபுருஷர்களும், அம்மையாரும் காணோம். அரசகுமாரன் மோசம்போனோமே என்று வருந்தியிருக்கையில் ஆடுமேய்க்கும் சிறுவனொருவன் அங்குவந்தபோது மதனன் "சிறுவ! இன்று என்னகிழமை" என, அவன் "ஞாயிற்றுக்கிழமை" என்றான். ஆ ஆ! இம் மலைமிசை நடந்த பூசை வெள்ளிக்கிழமை யல்லவோ? இன்று ஞாயிற்றுக்கிழமையானால் மூன்றுநா ளாகிறதே; இதுவரையில் நாம் என்னசெய்தோம்? எங்கிருந்தோம்? கனகாப்புஜத்தை நமக்கு மனைவியாக்கிவைக்கின்றேனென்று சொன்ன பெரியவரைக் காணோமே! சொன்னசொல்லை நிறைவேற்றாதுவிடுவது பெரியவர்க்கழகாமோ என்றின்னணம் சிந்தித்துக்கொண்டிருக்கையில் முதன் முதல் மதனனைக்கண்ட பெரியவர் அனுக்கு நிதரிசனமானார். அரசகுமாரன் அவர் பாதத்தில் வீழ்ந்து நமஸ்கரித்து விடாதுபற்றினான். பெரியவர் 'மதனா! எழுந்திரு' என, சிறுவன் 'நான் தங்கள் பாதாரவிந்தத்தைவிடேன். கனகாப்புஜத்தை எனக்குக் கடிமணஞ் செய்து தருவதாய்த் தாங்கள் கூறின் விடுவேன். இல்லையேல் இல்லை' என்று பிடிவாதஞ்செய்தான். சித்தர் தமது இடதுகாலைத் திமிறி எடுத்து மதனன் சிரமேல் எட்டி யுதைத்து 'துன்மார்க்கத்தைத் துட்டுகொடுத்துப்பெற இச்சிக்கும் துரோகி! இதனால் நீ அடையும் பயன் யாது மூர்க்கா!

"மங்கையர்கள் யோனிமிசை வைத்திருக்குங் காதல்தனைப்
பங்குசெய்து நூற்றிலொரு பங்கெடுத்துக்—கங்கைமதி
வேணியரன் பாதார விந்தத்தில் வைத்தக்கால்
காணலாங் காணக் கதி."

என்று சொல்லப்பட்டிருக்கும் பாடலின் பயனை நீ அறியாயோ? தேகம் நீர்மேற்குமிழி அப்படிப்பட்ட அற்பதேகத்தை நாம் அடிக்கடி பெற்று வருந்துவதை ஒழித்துக்கொள்ள முயலாமல் சிற்-

இரத்தமுதலிய துர்நாற்றங்கமழப்பெற்ற சதநதாதுக்கள்செறிந்த ஈக்கள் மொய்க்கும் புண்ணுங்குழியாகிய யோனியிடத்தும், ஸ்தனத்தினிடத்தும் மோகங்கொண்டுழல்வது இழிவற்ற சிறியோர் செய்கையேயன்றிப் பெரியர்செய்கையாகுமோ? ஆகவே, மதனா! நீ கனகாம்புஜத்தின் மீது கொண்டிருக்கும் மோகப்பித்தை யொழித்து, சுகதேகிகளாகிய சித்தர்க ளென்னும் எங்கள் கூட்டத்திற் சேர்ந்திரு' என்றார். சித்தர் உதைத்தவுதையில் மண்ணைக்கௌவிக்கொண்டிருந்த மதனனெழுந்து நின்று கைகட்டி சுவாமிகாள்! கனகாம்புஜத்தைவிட்டுச் சித்தனாகியிருக்க எனக்குச் சிறிதும் இஷ்டமில்லை. கனகாம்புஜத்தைக் கடிமணஞ் செய்விக்கத் தங்களுக்கு இஷ்டமிருந்தால் செய்க. இல்லையானால் என் கழுத்தை வாள்கொண்டு வீசிச் சேதித்துவிடுக. இவ்விரண்டிலொன்று செய்தலே உத்தமோத்தமமென்றான். சித்தர் உனக்குப் புண்ணியமில்லாதிருக்கையில் யான் எது சொல்லினும் உன் செவிக் கேறுமென்று அவன் காதில் ஒரு மந்திரத்தை மறைவாயோதி, மதனா! கனகாம்புஜ மணிந்திருக்கும் இரவுக்கையைக் கொண்டுவரச் செய்து மணிமாடத்தின்மேல் வைத்து ஆயிரத்தெட்டுதரம் இம்மந்திரத்தைச் செபித்து அதன்மேல் கறுப்புக்கோழி யொன்றை காவுகொடுத்து அவ்விரத்தத்தில் மூன்று துளி இரவுக்கைமேல்விடு. அப்போது அம்மணிமாடத்துள்ளிருந்து மிக மெல்லிய சத்தமொன்று கிளம்பும் அந்தச் சமையத்தில் ஒருதுளிரத்தத்தை மணிமாடத்தில் விட்டவுடனே உன் கையிலிருக்கும் கோழியை விசையாக அம்மாடத்தில் எறிந்துவிட்டு ஒரு நிமைப்பொழுதும் அங்கு நிற்காமல் நூறடிதூரம் விரைந்தோடி ஸ்நானஞ்செய்துகொண்டு உடனே திரும்பி மணிமாடத்தண்டை வரும்போது உன்னுலும் உனக்குமுன் பல அரசர்களாலும் கொண்டுவந்து கொட்டப்பட்ட கணக்கற்றதிரவியங்களெல்லாம் புற்றிலிருந்து ஈசல்புறப்படுவது போலக் கிளம்பி வழியும், அதனை யெடுத்துப் பத்திரப்படுத்தி, கனகாம்புஜத்தை, வெகு ஜாக்கிரதையோடும் உன் பதிக்கு அழைத்துக் கொண்டுபோய் தாய் தந்தையர் மகிழக் கடிமணஞ்செய்து கலந்து சுகிப்பாயாக வென்று விடை கொடுத்தனுப்பினார்.

மதனன் மலையைவிட்டிறங்கி சித்தர்சொல் வழுவாமற் செய்து மணிமாடத்தில் ஒரு துளி உதிரத்தைவிட்டுக் கோழியை அதனுள் வீசியெறிந்து திரும்பும்போது பயங்கரமான பெருஞ்சத்தம் அம்மணிமா

டத்தினின்றும் கிளம்பியது. மதனன் திரும்பிப் பார்த்துக்கொண்டே ஓடிவருகையால் அங்கு வைக்கப்பட்டிருந்த இரவுக்கையை யாரோ ஒருவன் கையிலெடுத்துக்கொண்டு ஆகாயத்திற் பறந்து செல்வதுபோலும் கண்டு ஆச்சரியப்பட்டு குளக்கரைக்குப் போய் ஸ்நானஞ் செய்து மணிமாடத்தண்டைவந்து சேர்ந்தான்.

இப்போது மணிமாடத்தருகில் திரள்திரளாக ஜனங்கள் கூடியிருக்கிறார்கள். மதனனுடைய பாக்கியமே பாக்கியம். 'பெண்டு பாக்கியம் புண்ணியவானுக்கு' என்றபடி கனகாம்புஜத்திற்குக் கணவனானானென்றும், எத்தனையோ மண்டலீகர்கள் வந்து இம்மாடத்தில் கொட்டிய பொருளுக்கு அளவுசொல்ல முடியாது அங்ஙனமாக அவர்களிலொருவருக்கும் நிரம்பாத இம்மணிமாடம், மன்மதனென எழில்வாய்ந்த இப்புருஷனுக்கு நிறைந்து, பொற்கொடிபோன்ற இப்பெண்ணைக்கூடிச் சுகிக்கவைத்தது, இம்மதனன் நெடுங்காலஞ்செய்த தவப்பயனேயாமென்றும் அங்குநின்றிருந்த ஜனங்கள் பேசிக்கொண்டார்கள். அவர்களினிடையில் இரதிதேவியும் நாணங்கொள்ளத்தக்க பேரழகினையுடைய கனகாம்புஜம் தலை குனிந்து நின்றுகொண்டிருந்தாள். அவளுடைய பாட்டியார் அப்பெண்ணின் கையைப் பிடித்தவண்ணம் பக்கத்தில் நின்றுகொண்டிருந்தாள். அவ்விருவர்கட்கு மெதிரில் விதிப்படி விபூதியணிந்த ஒரு விருத்தாப்பியமான பிராமணன் கையிற் பிடித்த பஞ்சாங்கத்தோடு நின்றிருந்தார். பல சேவகர்கள் அம் மணிமாடத்தைச் சுற்றிலு மொய்த்திருந்தனர்.

இவ்வளவு ஜனங்கள் நின்றுகொண்டிருந்த அம் மணிமாடத்தருகில் மதனன் வந்து நின்றவுடனே அம்மணிமாடத்திருந்த பொருள் முழுதும் குபுகுபென்று மேலே பொங்கிவழிந்தன. அதைக் கண்ட எல்லோரும் பேராச்சரியப்பட்டார்கள். சேவகர்கள் ஜனங்களை நெருங்கவிடாமல் அதட்டித் துரத்திக்கொண்டிருந்தனர்.

கனகாம்புஜத்தின் பாட்டியார் மதனனிடம் தன் பேத்தியை அழைத்துக்கொண்டுபோய் அவள் கையை அவன் கரத்திற் பிடித்துக்கொடுத்துப் பிராமணனைக்கொண்டு முறைப்படி தாரைநீர்வார்த்துக்கொடுத்தாள். அரசகுமாரனுக்கு இப்போதுண்டாயிருக்கும் சந்தோஷத்தினளவை நம்மால்தெரிந்தெழுத முடியாது. மதனன் தன துமனைவியாகிய கனகாம்புஜத்தைக் கிழவியுடன் வீட்டுக்குக் கூட்டியனுப்பிவிட்டு, பொருள்களையெல்லாம் எண்ணூறு கப்பல்களி

டான். அரசன் கீழே இறங்குவதற்குள் வண்டி குடைசாய்ந்து மத
னன்முதல் எல்லோரும் கீழே வீழ்ந்தார்கள். கடைசியி லுட்கார்
ந்திருந்த கிழவிக்கு ஒரு பாரிசத்து ஜப்பை முறிந்தது. கனகாம்
புஜத்தை ஒரு திருடன் கைப்பற்றித் தூக்கினான். அதைக்கண்ட அர
சன் ஹுங்காரஞ் செய்து கிடுகிடென்று உடைவாளை உருவிக்கொ
ண்டு கனகாம்புஜத்தைப் பற்றித்தூக்கிய கையைத் துணித்தான்.
அவன் உதிரமொழுக கீழே விழுந்தனன். மற்றை ஒன்பதின்மரு
ம் கொடுமையான ஆயுதங்களைக் கையிற் பிடித்துக்கொண்டு மத
னனை எதிர்த்தார்கள். அரசன் அவர்களுக்குச் சிறிதும் அஞ்சாமல்
அரையிற் கட்டிய ஜல்லடைத்தோடு நின்று அடர்ந்த அக்காட்டின்
மார்க்கமாகத் துரத்திக்கொண்டு சென்றான். திருடர்கள் நாலாபக்க
மும் ஓட ஆரம்பித்தனர்.

இப்போது மணி ஐந்தடித்து ஐந்தரையுமாகி ஆறுக்குச் சமை
யமாயிருந்தது. கையெழுத்து மறையும் பொழுதாயிற்று. மதனனை
க்காணோம் சிறிது தூரத்தில் ஒரு பெருங்கும்பல் வருவதாகக் கனகாம்
புஜம் கண்டாள். அவள் மனதில் பயம் குடிபுகுந்தது. சின்னேரம்
நினைத்தாள். தொலைவில்வருபவர்கள் திருடரென்றுணர்ந்தாள்.
இனி நம்மை வளர்த்த கிழவியைப் பாதுகாத்திருக்க எண்ணுவோ
மானால் நம்முடைய துணை இல்லாத சமயத்தில் இதோ வரும்
திருடர்கள் கையி லகப்பட்டு நம்முடைய நிலைமை கெட நேரும்.
அரசன் ஒருவனிருப்பா னென்பதாயின், நாம் நமது நாணமும் கன்னட
க்கையுமுடைத்தாயிருக்க நிச்சயமானால் நம்முடைய கணவருக்
கும், பட்டப்பார்க்கும் யாதொரு துன்பமும் நேராதபடி நாம் பார்ப்
போம் என்று உறுதிசெய்துகொண்டு தனது உடைகளைக் களைந்து
மதனனுடைய (ஆண்) உடைகளைத் தரித்துக்கொண்டு மெல்ல அவ்
விடம்விட்டு நகர்ந்துசென்றாள்.

கனகாம்புஜம் சிறிது தூரம்நடந்து அதிக இருள் சூழ்ந்ததால்
அப்புறம்போக முடியாமல் அவ்விடத்தில்நின்று ஐயோ நாமேன்
அழகாய்ப்பிறந்தோம்! பிரமன் நம்மைச் சாதாரண ஸ்திரீயாகப்
படைத்திருந்தால் நமது நாயகனோடு சுகமே களித்திருக்கலாமன்றோ?
என்று இன்னும் பலவெண்ணி அன்றிரவைக் கழித்தாள். பொழு
துவிடிந்ததே இனிப் பயமில்லையென்று நெடுந்தூரம் நடந்து
சென்று அவ்விடமுள்ள வழியிலிருந்த குளத்தில் முன்றானை நீரள்ளிக்
குடித்து ஒரு மரநிழலிலிருந்து அயர்ந்து நித்திரை செய்தாள்.

அக்காட்டில் வேட்டையாட வந்திருந்த ஓரரசன் கனகாம்புஜத்தைக் கண்டு மயங்கி, "ஹா! இதென்ன அழகு! இதென்ன காந்தி! முகமோ பெண்முகம்: தரித்திருக்கும் உடையோ ஆண் உடை: ஏதோ சிறிது விசனத்தால் இக்காட்டில் தனித்துப் படுத்திருப்பதாக அவ் வதிசுந்தரமுகக்குறியால் காணப்படுகிறது என்று தனக்குத்தானே பற்பலவா றெண்ணி கனகாம்புஜத்தினிடஞ் சென்று 'ஐயா, சுந்தரபுருஷரே! நீவிர் இக்காட்டில் தனித்துப் படுத்திருப்பானேன்?' என அப்பெண் அவனை மன்னனென்றறிந்து அரசர்பெருமானே! நானொரு காரியார்த்தமாகப் புறப்பட்டு நடந்துவந்த அயர்ச்சியால் இங்கு சிறிது படுத்துறங்கலாயினேன் என்றாள் அப்படியாயின் இக்குதிரைமேலேறிக்கொண்டு வந்து எம்முடைய வீட்டில் இரண்டொரு நாள் தங்கியிருந்து பின்னர் தங்களுக் கிஷ்டமான இடத்திற்குச் செல்லலாம் என்றழைக்க கனகம் அவனுடைய பிரீதிவார்த்தைக் கிணங்கி அவன் கொடுத்த குதிரைமேலேறிக்கொண்டு அவனுடன் சென்றாள். எல்லோரும் அரண்மனை யடைந்தபின்னர் உண்டாட்டயர்ந்து களித்து அன்றைப்பொழுது கழிந்தது. மறுநாளுதயத்தில் மதனனை யழைத்துச் சென்ற அரசன் தன் மந்திரியை அருகழைத்து 'அமைச்ச! முந்திய நாள் நான் வேட்டைமேற்சென்று வீடு திரும்புகையில் (கனகாம்புஜத்தைச் சுட்டிக்காட்டி) அப் புருஷனை யழைத்துவந்தேன் அவன் முகத்தில் பெண்ஜாடை தோற்றப்படுதலால் இன்றிரவு அவன் சயனிக்கும் அறையுட்சென்று துராக்கிருதமாக ஆடைகளை யவிழ்த்துப் பரிசோதித்துப் பெண்ணாயிருக்கும் பக்ஷத்தில் என் இச்சையைப் பூர்த்திசெய்து கொள்ளலாமென்று நினைக்கிறேன்; உன் கருத்தென்ன சொல்' என்றான்.

மந்திரி, அரசே ஈசுவரசிருஷ்டியின் அதிபற்புத செய்கையை நாம் கண்டறிவது கஷ்டம். அநேக புருஷர்கள் வயதுசென்றும் முகத்தில் மீசை முளையாமல் நடையுடை பாவனைகளெல்லாம் ஸ்திரீகளென்று நினைக்கும்வண்ணமிருக்கிறார்கள். ஸ்திரீகளிலும் இத்தகைய வேறுபாடுகள் அநந்தமிருக்கின்றன. அது அப்படியிருக்க, நீர் சாதாரண மனுஷ்யர்போலில்லாமல் எண்ணிறந்த தேசங்களைக் கைக்கொண்டாளும் அரசராயிருத்தலால் நீர் இவ்விழிதொழிலிற் பிரவேசிப்பது உமது பெருந்தன்மைக்கழகன்று. அவன் இப்போதிருக்கும் ஆண்ரூபமே இயல்பினையுடைத்தாகலின் உம்முடைய

துன்மார்க்கம் வெளிப்பட்டுவிடும். அதனாலென்பயன்? ஆனால் யுக்தியான சில விஷயங்களால் உண்மையைக் கண்டுணரலாம். அதாவது, ஒருநாளைக்கு இஷ்டர்களுக்கு வேடிக்கையாய் விருந்து செய்வித்து உண்டானபின் தாம்பூலந்தரித்து கந்த களப கஸ்தூரி திமிர்ந்து பரதநாட்டியப் பெண்களால் ஆடல்பாடல் நடத்தி, கடைசியில் நீரொரு ஸ்திரீயை மருவ அழைத்தேகும்போது, அவர் படுக்கைவீட்டிற்கும் ஒருஸ்திரீயைச் சுரதலீலை புரியவனுப்பிக் கண்டறியத்தக்கதொன்று. அதற்குடன்படாவிடில் மற்றொரு நாளைக்குத் தடாகத்தில்ஜலக்கிரீடைசெய்து தெரிந்துகொள்ளத்தக்கதொன்று. அதுவுந் தவறினால் வனத்திற் பிரவேசித்து மிருகவேட்டை யாடச் சென்று தெரிந்துகொள்வதொன்று. அதனாலுந்தெரிந்துகொள்ளக் கூடாவிடில் சருயத்தைவார்த்துப் பூராயத்தையறிவதொன்று. அரசே! இந் நான்குவிதத்தி லொன்றினால் உண்மையறிந்துகொள்ளலாமென்று மந்திரி கூற, அதற்கரசன் மகிழ்ந்து மறுநாளே விருந்து வைத்துக்கொண்டு சிநேகிதர் பந்துக்கள்முதலினோரோடு கனகாம்புஜத்தையும் அழைத்துவைத்துக்கொண்டு உண்டுகளித்தானபின், அதிரூபலாவண்யமுடைய இரண்டுதாசிகளால் சின்னேரம் ஆடல் பாடல்நடத்தி அவ்விருவர்களிலொருத்தியைத்தான் கைப்பற்றி, மற்றொருத்தியைக் கனகாம்புஜத்தின்கையி லொப்புவித்துச்சிநேகரே! இவளை நீர் மருவிச் சுகியும் என்று சொல்லி அரசன் சென்றான். பின்னர் இரண்டு பெண்களும் சயன அறையுட் சென்றனர்.

ஆண்வேடந்தரித்துள்ள கனகாம்புஜம் அத்தாசியிடம் செய்த சரசவித்தையால் சொக்கி இத்தகைய அழகுநாயகனை யடைய என்ன புண்ணியஞ்செய்தோமென்று பக்கத்திற் படுத்தாள். கனகாம்புஜம் தாசியை நோக்கி 'மன்னர் மருவும் நன்னய குணசீ! நான் சொல்வதைக் கேள் நீ தாசியே யெனினும் நான் உன்னிடம் பேசிய சரசவார்த்தைகளால் நீ என்மீது மோகமுற்று என்பக்கத்திற் படுத்தாய் அவ்வாறே எனக்கும் உன்மீது ஆசையுண்டாகவில்லை எவ்வளவில், அரக்கிற்குத் தொளிறு மிக்ஸர் போலவும், குளிருக்குக் கம்பளிச் சட்டை போலவும், வெய்யிலுக்குக் குடைபோலவும், [illegible] ( [illegible] ) [illegible] போலவும் இருந்த [illegible] குணமொன்று மின்டாயிற்று அதற்கு எவ்வளவோ அழகைதங்கள் கொடுத்தும் குணம் பெருமையால் கலியுகபுருஷனும் என் தெய்வமு மாகிய முரு

கப்பெருமான் சந்நிதியில் என் மனைவி குணப்படும் வரையில் அன்னிய ஸ்திரீகளை யணைவதில்லையென்று ஆணையிட்டுப் பிரார்த்தித் துக்கொண்டேன். ஆகவே இப்போ துன்னை யணைந்து என் சத்தியத்தைப் போக்கிக்கொள்ள இஷ்டமில்லையென்று கூறி அத்தாசி மனதை இளகச்செய்து விடைகொடுத் தனுப்பினன். தாசி மனமிக வருந்தி நடந்த விஷயத்தை மந்திரியிடங் கூறிச் சென்றாள். இதையறிந்த அரசன் ஸ்திரமான மனமுடையவனென்றுன்னி மற்றொரு நாள் (ஆண்) கனகாம்புஜத்தை யழைத்துக்கொண்டு நந்தனவனஞ் சென்று நல்ல வெய்யில்வேளையில் ஆங்குள்ள தடாகத்தில் நீந்தி விளையாட அரசனழைத்தான். கனகாம்புஜம் தனக்கு ஜலதோஷ மிருப்பதோடுகூட தன் மனைவிக்கு தேகம் குணப்படுந்தனையும் குளியேனென்றும் மறுத்தாள். சிலநாள் பொறுத்து மிருகஜந்துக்கள் ஊரிற் புகுந்து பயிர்களை நாசப்படுத்துவதாகக் குடிகள் வேந்தனிடம் முறையிட்டார்களாதலால் வேடர் வில்லியரோடு காட்டிற் பிரவேசித்து வேட்டையாடலாமென் றழைத்தான். அதற் கவள் நான் அரசவம்சத்திற் பிறந்தவனல்லேன்; ஆகவே எனக்கு அதிற பழக்கமில்லையென்று மறுத்தாள்.

மற்றொருநாள் அரசன் கனகத்தைக்கண்டு சினேகனே! இன்றையதினம் சில பிரபுக்கள் நம தரண்மனைக்கு வந்திருக்கிறார்கள்; அவர்களுக்கு உயர்ந்த சாராயவகைகளும் அதற்கேற்ற மசாலைக்கறி வகைகளும் விருந்து நடக்கப்போகிறது. நீயும்கூட விருந்து புசிக்க வரவேண்டுமென்றான். கனகாம்புஜம் அதில் மிக்க அபிலாசையுள்ளவள்போல நடித்து அப்படியேவருவதாக ஒப்புக்கொண்டாள். அரசன் சின்னேரம் வார்த்தையாடிக்கொண்டிருந்து சென்றான். அதன்பின் கனகாம்புஜம் வெளியேசென்று தோற்பையொன்று விலைக்குவாங்கி அதைத் தன் வயிற்றுக்கெதிராக வைத்துக்கட்டி விருந்தன்னை உட்கார்ந்து அங்கு வைத்திருந்த பீர்-பிராந்தி-மத்தார-ஜின்-ஒயின்-ஷெரி-கிக்கிப்பு-கிளாரட்டு-பட்டை-பத்தாய் முதலிய சாராயவகைகளைக் கண்டு ஒவ்வொன்றையும் தானே கையிலெடுத்து கிளாசில் வார்த்து ஒவ்வொருவருக்கும் கொடுக்கக்கொடுக்கத் தானும் கடைசியில் ஒவ்வொருவகையிலும் ஒவ்வொரு கிளாஸ்வாயிலவைத்துக் குடிப்பதுபோல தோற்பையில் ஊற்றிக்கொண்டாள். கறிவகைகளும்பொரிந்தன. சாராயங் குடித்தசாமிகளெல்லாம் கிறு சாய்ந்துறங்கினார்கள். கனகாம்புஜம் அவர்கள் குடிமைகளைச் சிறித

கத்தரித்துக்கொண்டு அரசனுடைய சில்மோதிரத்தைத் யபகரித்து தோற்பையை மேஜைமேல் வைத்துவிட்டுக் குதிரைமேலேறிக் காற்றெனப் பறந்து சென்றாள்.

நவநாயக மென்பதோர் பதி. அது ஸ்ரீரசனென்னும் அரசனால் ஆளப்பட்டுவருகிறது. காலை பதினொரு மணிக்கு அவ்வூருக்குட் சென்ற கனகாம்புஜம் குடிக்கூலிக்குத் தனக்கோர் விடுதி சம்பாதித்துக்கொண்டு குதிரையைக் கட்டிவிட்டு கடைவீதிக்குவந்து சுற்றுமுற்றும் பார்த்துக்கொண்டுவருகையில், அக்கடைவீதியிலுள்ள பெண்களெல்லாம் கனகாம்புஜத்தைக் கண்டு இவனோரோ தேவபுருஷனென்று மதிமயங்கினர். புருஷர்கள் இமைகொட்டாமற் பார்த்து வலிய வந்து ஸ்நேகிக்கலாயினர் அங்குப் புதிதாகக் கட்டப்பட்டு உன்னதமான வேலைப்பாடுகள் செய்துள்ள கடையொன்று சாற்றப்பட்டிருந்தது கனகாம்புஜம் அந்தக் கடைக்குடையவரை விசாரித்துச் சென்று தான் பழக்கடை வைப்பதற்காக அந்த இடம் வேண்டுமென் றறிவித்து, மாதம் ஒன்றுக்கு முப்பது ரூபாயாக வாடகை பேசி அப்போதே அட்வான்சு கொடுத்து கடைச்சாவியைப் பெற்றுக்கொண்டு வீடு திரும்பி சமையலுக்கு ஓர் ஆட்காரியை யமர்த்திக்கொண்டு மறுநாள் பழகிடங்குக்குச் சென்று மணிலா-ஆரஞ்சி-சோடா-செவ்வாழை பேயன்வாழை-பொம்பிலிமாசு முதலிய அனேகமான கனிவர்க்கங்களை வாங்கிப் புதிய தட்டுகளில் நிரப்பி வரிசை வரிசையாக வைத்து அழகு செய்து, இரண்டுபுறமும் அழகிய பஞ்சவர்ணக்கிளியுள்ள இரண்டு கூடமைத்து நடுவே பவர்லாம்பு (Power Lamp) மாட்டி உயர்ந்த ஆளுடை தரித்து கல்லாப்பெட்டிமேல் உட்கார்ந்தாள். அப்போதக்கடை தேவநகரெனத் துலங்கியதோடு அந்நகரத்தில் இவ்வளவுபெரிய கடை வேறொன்றில்லை. சிறிதுநேரத்திற்கெல்லாம் பல்லாயிரங்கோடி ஜனங்கள் அக் கடையைவந்து சூழ்ந்துகொண்டார்கள். அவ் வீதியிற் செல்லும் வண்டிகள் போக வழியின்றி நின்றன அங்கு வந்துநின்ற ஜனங்களெல்லாம் அந்தக் கடையையும் பழவர்க்கங்களையும் பார்க்கவில்லை கனகாம்புஜத்தின் வசீகரம் பொருந்திய முகவழகினிடத்தேதான் எல்லோருடைய கண்களும் சென்றிருந்தன. பலர் பழம் வாங்கவேண்டுமென்று ரூபாய்களைக் காட்டி நெருக்குண்டுவருந்தி கடையருகிற் சென்று நான்கணா பெறக்கூடிய பழத்திற்குப் பதினாறணாகொடுத்துப் பெறுவார்கள்.

வண்டிக்காரர்களும், தலைச்சுமை யெடுப்போரும் போக வழிவிடும் படி எவ்வளவு கெஞ்சிக் கேட்டும் ஜனங்கள் சிறிதும் விலகவில்லை. இவ்விஷயம் அவ்வூரரசனுக்குத் தெரிந்து சில சேவகர்களை யனுப்பி ஜனங்களை விலக்கிக் கடைக்காரனைத் தன்னிடம் அழைத்து வரும்படி உத்தரவு செய்தான். சேவகர்கள் ஜனங்களை பயமுறுத்தித் துரத்தி, கனகத்தினிடத்திற் சென்று ஐய, உம்மை அரசனழைத்துவரும்படிச் சொல்லினரென கனகாம்புஜம் தன் வீட்டண்டை கட்டியிருக்கும் குதிரைமேலேறிக்கொண்டு செல்கையில் பல்லாயிர ஜனங்கள் அவனைச் சூழ்ந்து கடலொலிபோலும் ஆரவாரித்துச் சென்றனர். அரசனரண்மனையை நெருங்குகையில் அவ் வுப்பரிகையின்மேலிருந்த சூரசேனனுடைய கனிஷ்டகுமாரத்தி, குதிரைமேலேறிவரும் கனகத்தைக்கண்டு மோகித்து ஆ! நீயென்று என்னை மோகசாகரத்தில் மூழ்குவித்த என் இன்பரசப்பெருக்கே! நீயே எனக்குக் கணவனன்றி மற்றொருவரை மறந்தும் என் சித்தத்தி லெண்ணேன். நீ யெங்கே செல்கிறாய்? இப்போதே என் தந்தையிடஞ் சொல்லி உன்னை யழைத்துவந்து என்னை மருவும்மணாளனாக்கிக்கொள்கிறேன். என் தந்தை நான் இச்சிக்கும் புருஷனை யன்றோ எனக்கு மணாளனாக்குவதாக வாக்களித்திருக்கிறாரென்று வாய்பேசிக்கொண்டே மெத்தையைவிட்டுக் கீழிறங்கி தன தந்தரங்கமெல்லா மறிந்த தாதியை யழைத்துக்கொண்டு அரசன் கொலுவிருக்கும் சபாமண்டபம் வந்து சேர்ந்தாள். அதற்கு முன்னமே தான் கண்டு மோகித்த சுந்தரபுருஷன் தன் தந்தையிடம் நிறுத்தப்பட்டிருத்தலைக் கண்டு பேராச்சரியப்பட்டு ஜன்னலின் வழியாக மோகநாயகனை நெடுநேரம் இமைகொட்டாமற் பார்த்திருந்து மெய்ம்மறந்து பக்கத்தில் நின்றிருந்த தாதிமேற் சாய்ந்தாள்.

சூரசேனன்:—வர்த்தகரே! நீவிர் கடைவீதியில் ஜனங்களைக் கும்பல்கூட்டி வண்டிகள் போக வழிவிடாமற் செய்ததுண்டா?

கனகாம்புஜம்:—அரசே! நான் அப்படிச் செய்திலேன். என் வயிற்றுப் பிழைப்புக்காகக் கடைவைத்ததுண்டு. என் கடையிலுள்ள கனிவகைகளை வாங்க ஜனங்கள் வந்து கும்புகூடியதுண்மையேயாம்.

சூரசேனன் கனகாம்புஜத்தின் முகவசீகரத்தையும், வாக்சாதுரியத்தையும் கண்டு மகிழ்ந்து இச்சுந்தரபுருஷன் நமது குமாரத்தியாகிய சிருங்கமோகினிக்குத் தக்க கணவனாவானென் றெண்ணிக்

கொண்டிருக்கையில் ஓர் அமைச்சன் அரசனிடம் கடிதமொன்றை நீட்டினான். அதை வாசித்த மன்னன் கனகாம்புஜத்தைநோக்கி வர்த்தகரே! தங்கள்மேலேற்பட்ட தப்பிதத்திற்காக நாளையத்தினம் தீர்மானஞ் சொல்லுகிறோம் அதுவரையிலும் நமதரண்மனையிலிருமென் றனுப்பினான். கனகாம்புஜத்திற்குச் சர்வோபசாரமுஞ் செய்துவைத்திருந்தார்கள்.

அரசன் சபை கலைந்தவுடனே தன் புத்திரியாகிய கிருஷ்ணவேணியிருக்கும் அந்தப்புரஞ் சென்று மகளே! காலையில் நீ யெழுதியனுப்பிய கடிதத்தைக் கண்டேன். உனக்கேற்ற சுந்தரபுருஷன் தான் அவன். அவன் கருத்தை மந்திரியினா லுணர்ந்தேன். அதாவது, அவனிப்போ துன்னைக் கடிமணஞ்செய்து கொள்வதாகவும், ஆறுமாதஞ் சென்றபின்தான் உன்னைக் கூடிக்களிக்கக் கூடுமென்றுங் கூறினன். இவ்விஷயம் உனக்குச் சம்மதியாயின் என் செல்வமே! இப்போதே முகூர்த்தநாள் கணிக்கச்செய்கின்றேன். உன் கருத்தென்னென்றான். அச் சுந்தரபுருஷனைப் பார்த்திருந்தாலே சாலும் எனத் தன்னுள் தீர்மானித்தவளாய்த் தனக்கு அவ்விஷயத்திற் சம்மதி யுண்டென்று தன்தாயிடம் தெரிவித்தாள். சூரேசவரசன் மகிழ்ந்து முகூர்த்தநாளொன்று கணித்து நல்ல சுபவேளையில் சகலாடம்பரத்துடன் கனகாம்புஜத்திற்கும் கிருஷ்ணவேணிக்கும் சுபமுகூர்த்தம் நிறைவேறியது. கனகாம்புஜம் மாமியார் வீட்டிலேயே யிருந்தாள்.

ஸ்திரீகளுக்குச் செல்வமும் சிறப்பும் பெருமையும் பிறவும் தங்கணவரே யாவர். கொழுநனில்லாமல் மற்றெல்லாச் செல்வமும் குறைவின்றியிருத்தலாற் பயனென்னை? நாடோறும் கனகம் சயன அறைக்குச் சென்றவுடனே தன்புருஷனைத் தான் சீக்கிர மடைந்து சுகிக்கச் செய்ய வேண்டுமென்று கடவுளைப் பிரார்த்திப்பள். இவளிப்படிக் காலத்தைக் கழித்துவருகையில் சூரேசன் சின்னாள் தேககுணமின்றிக் காலவிபோகமானான். அவ் வரசனுக்குப் புத்திர சந்தான மின்மையால் கனகாம்புஜமாகிய மருமகனுக்குப் பட்டாபிஷேகம் செய்வித்தனர். ஒருநாள் இரவு கிருஷ்ணவேணி தன் கணவன் சயனவறைக்குச் சென்றாள். அப்போது கனகாம்புஜம் கடவுளிடத்தில் மனதைச் செலுத்தியிருந்தாள். கிருஷ்ணவேணி மஞ்சத்தருகே நாணத்தோடும் நின்றிருந்தாள். நெடுநேரம் பொறுத்து 'சம்போ! கங்காதரா! விரைவிற் கடைக்கண் பாராய்' என்று

பிரார்த்தித்து வலது கையைத் தலையணைமேல் வைத்துப் படுக்கும்போது தன் பக்கத்தே ஒரு பொற்கொடி நிற்கக்கண்டு திடுக்கிட்டு ஆரது? கிருஷ்ணவேணியா? என் கண்ணே வா: மஞ்சத்தின்மேலுட்காரு. ஏது இந்நேரவேளையில் இங்குவந்தது? என்று வினவ, கிருஷ்ணவேணி, 'அநங்கனமுகைப் பறிக்கும் அரசே! என் ஆருயிரே! இன்பரசமே! எழிலா நிறைவே! மாதம் நான்காகியும் தங்கள் மலர்க்கரத்தை என் தோள்சேர்த் தணைத்து இன்பந்தராது, துன்பத்திலாழ்த்துவது தங்களுக்குச் சிறப்போ? என்னை அநங்கன் கணைக்கிரையாக்குவது துரையாகிய தங்களுக்கு நியாயமோ! சொல்லும். என்னைக் கொல்லும் மதனனை வெல்லும். அல்லும் பகலும் வருந்திச் சொல்லும் என் சொல்லை ஏற்று இன்றேனும் என் இச்சைக் கிணங்கும் இறைவே! இது எனக்கு நெடுநாட் குறையே! என்று கனகாம்புஜத்தைநெருங்கி யுட்கார்ந்து காமஸன்னதஞ்செய்தாள். ஆ ஆ! அப்போது அம்மஞ்சத்திற் பருவங் கடந்த ஒரு கிழவனுயிருந்தாலும் ஒரு கை பார்த்துவிடுவான். என்செய்வது? பெண்ணைப் பெண் அணைவதெப்படி? கிருஷ்ணவேணி மோகப்பித்தேறி தடைகடந்து வந்ததைப் பெண்ணி இன்று தன்னுடைய மர்மம் வெளிப்படும்போலுமென்று கனகாம்புஜம் உண்மையில் பயந்தாள் எனினும் அதையவள் கண்டுகொள்ளாதபடி புன்னகைபுரிந்து தனது இடது கரத்தை அவள் தோண்மேற் சேர்த்து எனது மாங்குயிலே! கிருஷ்ணவேணி! உன்போலும் என் மனத்திற் குகந்தோர் ஒருவருமில்லையடி மானே! ஆக்கப் பொறுத்தது ஆறப்பொறுத்த லாகாதா? எல்லாம் கூடியும் என் விரதம் முடிவதற்கு இன்னும்நாற்பத்தொருநாள்தானே யிருக்கிறது: நான் இவ்விஷயத்தை முன்னமே உன் தந்தையிடம் தெரிவித்து அதற் கவர் சம்மதித்ததனுலன்றோ உன்னைக் கடிமணம் செய்தேன். இப்போ துன்னைக் கூடுவேனல் ஐந்து வருஷகாலமாக நான் அநுஷ்டித்துவரும் விரதம் அபிபாயமாய்க் கெடும். என் இன்பநாயகி! இன்னொன்று செய். என் விரதம் முடியுந்தனையும் இரவில் என்னிடம்வந்து நித்திரை வரும்வரையில் பேசிக்கொண்டிருந்து பின்னர் நாமிருவரும் வெவ்வேறு மஞ்சத்திற் சயனிப்போமாகவென்றாள். அதற்குக் கிருஷ்ணவேணி மிகவு மகிழ்ந்து சம்மதித்து அதுமுதல் நாள்தோறும் இரவில் அவ்வறையில் வந்திருந்து ராஜாங்கத்தைப் பற்றியோ சகவர விஷயத்தைப்பற்றியோ பேசிக்கொண்டிருந்து பின்னர் சயனித்துச் செல்வாள்.

இங்ஙன மிருக்கையில் ஒருநாள் கிருஷ்ணவேணிக்குப் பந்துக்களாவோர் வீட்டில் நடத்தப்படும் * கர்ணரந்திர மஹோத்ஸவத்தின் பொருட்டு (கனகாம்புஜமாகிய) அரசனுக்குப் பத்திரிகை யனுப்பப்பட்டதால், பதின்காததூரத்திலுள்ள வேறோரூருக்குச் சென்று அங்கு நடந்தேறிய கர்ணரந்திரமஹோத்ஸவத்திற் கிருந்து உண்டானபின், அவ்வீட்டுப் பின்புறத்தில் விசாலமாகக் கட்டப்பட்டுள்ள அன்னதான மடத்திற்குட் சென்று அதனைச் சுற்றிப் பார்த்துக்கொண்டே வடபுறமாகத்திரும்பினாள். அங்கோர் அழகிய பூஞ்சோலை யிருக்கக் கண்டு அதனைக்காண்பான் உட்சென்றாள். தாமரை செறிந்த குளமும், அடர்ந்தோங்கிய மரங்களும், சில்லென்று வீசும் காற்றோடு சுகந்தமானமலர் மணமும்வீசியதால் அங்குச் சிறிதுநேரமிருந்து காலங்கழிக்க இச்சித்து ஏற்ற இடத்தில் உட்காரச் சென்றுகொண்டிருந்தாள்.

"வாராது வாராது என்னைப்பற்றி வருவதுபோகாது உன்னைவிட்டு" என்னும்பழமொழி உண்மையல்லவா? பலமரங்களடர்ந்த அங்கோர் பாரிசத்தில் தாடியும் மீசையும் தலைமயிர்க்காடும், கந்தைத்துணியும் கம்பளிப்போர்வையும், தடியும் குடையும் தாழ்மிதியடியும், லங்கோடு கோவணம் நாட்டிய இடையும், ஓய்ந்த நடையும் ஒழுக்கமு முறக்கமும், காவியுங் கடுக்கையும் கஞ்சாக் குடுக்கையும், கழுத்திற் பொலியும் கட்டு ருத்ராக்ஷமும், சாம்பற் பூச்சும் சந்நியாசிப்பேச்சும், எழுதிய ஏடும், இரந்துண்ணுமோடும், கையிற் பிடித்துக்கலைத்துப் படுத்திருந்த ஓர்சந்நியாசியைக் கண்டாள். திடுக்கிட்டுமெய்சோர்ந்து நின்றாள். அப்போதவள்முகத்தில்புதிய அழகொன்று சின்னேரம் ஜொலித்தது. கனகாம்புஜம் அச் சந்நியாசியிடஞ்சென்று "ஐயாவே! நீங்கள் எங்கிருப்பது? தேவரீருடைய நாமதேயமென்ன? இப்புழுதியிற்படுத்துப் புரள்வானேன்? என்ன, சந்நியாசி 'அரசே! நான் ஊரிலிரந்துண்ணும் உபயோகமற்றவன்' என்றான். கனகாம்புஜம், 'நீர் உண்மையில் எல்லாம் வெறுத்து இக் கோலங்கொண்ட தன்மையானால் உமக் கித்தனை வெறுப்புஞ் சலிப்பு முண்டாவானேன்? உம்மை உற்று நோக்குகையில் லௌகிகவிவகாரங்க ளற்ற பரம்பரை ஆண்டியாகக் காணப்படவில்லை. பஞ்சத்துக் காண்டி யானதுபோலக் காணப்படுகிறது. ஆகவே உண்மையை என்னிடம் ஒளியாமல் கூறும் உங்களைப்போலொத்தவர்களுடைய சரிதங்களைக் கேட்க எனக்கு மிகவும் ஆவலுண்டெ

* கர்ணரந்திரம்செய்தல் - காதுகுத்தல்.

ன்று கூற, சந்நியாசி கனகாம்புஜத்தின் முகத்தை உற்றுநோக்கி
இவ்வளவு யுக்தியும் புத்தியும் நமக்கிருந்துதானே எல்லா மிழந்து
இக்கதிக்குள்ளானோம்! நாமும் நமது நாட்டிலிருந்தால் இவனைப்
போலரசனாயிருக்கலாமன்றோ வென்று நினைத்துக் கண்ணீர் சிந்தி
அதனைத் துடைத்துக்கொண்டே "அரசே! கறந்தபால் முலை
புகாது இறந்தவுயிர் உடற்கு ளேறாது. துறந்தபேர் நாட்டுக்குள்
வாரார்கள். மறந்தஞானம் வழிகாட்டா தென்பது உண்மையாத
லால், நான் துறந்தவனன்று. இறந்துபோகவும் நாள்வரவில்லை.
ஆனால் என் தோளுக் கணியாகிய மாணிக்கமணியை யிழந்து இக்
கோலத்துக் குள்ளானே"னென்று சிறுபிள்ளைபோலும் தேம்பித்
தேம்பி யழுதான்.

'பேதமை யென்பது மாதர்க் கணிகலம்' என்பது ஔவை
யார் வாக்கியமல்லவா? அவள் வாய்க்குச் சர்க்கரை யிடவேண்டும்.
அம்மொழி பொய்யாகாவண்ணம் திடீரென்று கனகாம்புஜத்தை
யறியாமலே அவள் கண்கள் தாரை தாரையாக நீர் சொரிந்தன.
அதை யச்சந்நியாசி யறியாவண்ணம் கண்ணைத் துடைத்துக்கொ
ண்டு அண்ணால்! இவ்விடம்விட் டெழுந்து அன்னமுண்டு என்
னுடன் வருவீரேல் கூடியசீக்கிரத்தில் நீவீர் இழந்தபொருளை நான்
பிரயாசப்பட்டுத் தேடி அடைவிப்பேன் என்னுடன் வருதி
ரென்று அழைத்துக்கொண்டுபோய் தான்வந் திறங்கிய வீட்டில்
அன்னமிடுவித்து உடனே வண்டியிலேறி நவநாயகநாட்டிற்போய்ச்
சேர்ந்தனர். இப்போது சந்நியாசிக்குப் பிரத்தியேகமாக ஓரிடந்
தந்து சௌசமுதலியனவும், ஸ்நானபானாதியும் செய்வித்து,
ஆடை முதலியன தந்து, சர்வோபசாரமும் செய்யப்பட்டு வருகி
றது. சந்நியாசிக்கு நடக்கும் சிறப்பைக் கண்டோர் யாரும் வெளி
யே சென்ற அரசன் ஓர் சந்நியாசியைக் கொண்டுவந்து சிறப்புச்
செய்கின்றான். அதிர்ஷ்ட மிருந்தாலும் இப்படியன்றோ இருக்க
வேண்டுமென்று பேசிக்கொண்டனர். இவ் விஷயம் கிருஷ்ணவே
ணிக்குத் தெரிந்து, கனகாம்புஜத்தினிடம் வந்து அவள் காலில் வீழ்
ந்து 'அரசரேறே! அடியாளைக் கடிமணஞ் செய்து கலையாது
விட்டுங் கண்ணீருங் கம்பலையு மாக்கினீர். தங்கள் வரவினை
எதிர்பார்த்திருந்த எனக்கு இப்போது பெருந்துயர் வாய்ந்தது.
அது யாதெனின், நீங்கள் வெளியே சென்றவிடத்தி லிருந்து யா
ரோ ஒரு சந்நியாசியை யழைத்துவந்து உபசாரஞ்செய்து அவரிட
த்திற் றங்கள் நாள்தோறுஞ்சென்று பாதாரவிந்தத்திற் பணிந்து

ஞானவிஷயங்கள் பேசிவருவதாகக்கேள்விப்பட்டேன். அரசாளும் வேந்தர் ஞானவிஷயத்திற் புகுந்தால் அவர்க்கு உலகவின்பங் கைக்குமென்று கூறுகிறார்கள். இந்நாள்வரை என்னைக் கூடிச் சுகியாம லிருந்ததையும், இப்போது வேறுவிஷயத்திற் றிரும்பி யிருப்பதையும் யோசிக்கையில் இதுவரையில் நீங்கள் பேசிவந்த வெல்லாம் உண்மையல்லவென்றும், இனி என்னை அவாந்தரத்தில் விட்டு அரசைத் துறந்து துறவியாவீர் போலுமென்று தோற்றுகிறதே ஐயோ! எழில்வதனு! உண்மையறியாமல் பாவி நான் ஏமாந்தேனே! இங்கிலீஷ்காரரைப்போல நானே உம தழகைக் கண்டு மோகித்ததனால் வந்த கேடல்லவா இது! என்று கண்ணீர்விட்டழுது தேம்பிக்கொண்டே மறுபடியும் அரசனைநோக்கித் தேவரீருடைய உண்மைக்கருத்தை வெளிப்படுத்திவிடும். ஏன் என்னை உயிரோடு வதைக்கவேண்டும்? நான் தங்களுக்குச் செய்த தீங்கென்னவென்று எளியமுகங் காட்டிநின்றாள். கனகாம்புஜம், "கிருஷ்ணவேணி! உன் இஷ்டம் பூர்த்தியாக இரண்டேநாள்தானிருக்கிறது. இதற்குள் ஏன் அவசரப்படுகிறாய்? என் தவம் பலித்தது. நான் தேடிக்கொண்டிருந்த பெரியவரே இப்போது கிடைக்கப்பட்டு உபசரித்துவருகிறேன். என்மீது கோபித்துக்கொள்ளற்கவென்று அவள் கன்னத்தில் முத்தமிட்டனள். அம்முத்தத்தால் கிருஷ்ணவேணியின் உள்ளங் குளிர்ந்து பரவசமுற்றாள்.

மறுநாள் நகரமெங்கும் அலங்காரஞ் செய்யப்பட்டது. பலவகை வாத்தியக் கருவிகள் முழங்கின. வேதகோஷம் கடலொலியைமறுத்தது. இப்போது மதனன் தேகமானது பளபளவென்றழகிட்டுப் பிரகாசித்தது. தீர்க்க விசால அருட்கண்களும் பரந்த மார்பும், உயர்ந்ததோளும் பருத்த வயிறும், சிறுத்த விதழும், இங்கிதப் பேச்சும், எழிற்கைவீச்சும், இராஜநடையும், இனியபுட்குரலும் பெற்று ஆஜாநுபாஹுவாயினான். கனகாம்புஜம் அவனுக்கு இராஜவுடை தரிப்பித்துத் தன் இன்பநாயகனை எழிற்கண்களாற் கண்டு பரவசமடைந்து சிங்காதனத்திருத்தி, மந்திரியையழைத்து நாட்டாண்மைக்காரர், பெரியதனப் பிரபுக்கள், உறவின்முறையார் முதலியோரையும் வரவழைக்கும்படி உத்தரவு செய்து, அந்தப்புரஞ்சென்று உயர்ந்த ஆடையாபரணங்களாய், கிருஷ்ணவேணி யிருக்குமிடம் வந்தாள். கனகாம்புஜத்தைக்கண்ட கிருஷ்ணவேணி இவளாரோ தெய்வமகளிரென்று நினைந்து, ஊஞ்சற்பலகையை விட்

டிறங்கி அம்மணீ! எனக்குப் புதிதாகக்காணப்படும் தாங்கள் யாரோ வென்றுவினவ, கனகாம்புஜம், பெண்மணியே! நான்தான் உன்னை மணந்து மருவாதிருந்தகனகம் நேற்றே என் விரதநாள் கழிந்தமையின் இன்றுன்னைக்கட்டியணைத்து முத்தமிட்டுக் கலவிசெய்யவந்தேன். செந்தேனே என்று செப்ப, கிருஷ்ணவேணி, சின்னேரம் சித்தங் கலங்கித் திகைத்து நின்று இதென்ன புதுமை! நீர் என்னை மணந்து இராஜரீகஞ் செய்துகொண்டிருந்த அண்ணலாகிய தாங்கள் பெண்ணானதெப்படி யென்றாள். அதற்குக் கனகம் அவையெல்லாம் தெரிந்துகொள்வதற்கு நெடுநேரமில்லை; இன்னும் ஒருமணி நேரத்தில் உன்சந்தேகமறத்தெளிவாய் சீக்கிரம் ஆடையாபரணாலங்கிருதளாகிப் புறப்படென் றழைத்துக்கொண்டு சபையோர்கள் குழுமியிருக்கும் சபாமண்டபத்தில்இருவரும்வந்து சேர்ந்தார்கள். இதற்குள் இரண்டு சேவுகாரர்கள் வந்து சிம்மாசனத்திருந்த அரசகுமாரனாகிய மதனனிடம் நின்று அண்ணல்! கனம்பொருந்திய சுவேதவேந்தையும், அவர்மனைவியரையும், முராரியென்பவரையும் அழைத்துவந்தோமென்றுசொல்லிப்போயினர். பின்னர்க்கனகாம்புஜம் தன் தாய்வீட்டிலிருந்து மதனன் அழைத்துவந்தது முதல், கிருஷ்ணவேணியை விவாகஞ்செய்து மதனனைக்கண்டுபிடித்தவரையிலுங் கூறிநின்றாள். பின்பு மதனன் சிம்மாசனம் விட்டிறங்கி வந்து கனகத்தைத் தழுவி முத்தமிட்டுத், தன்னுடைய பிரயாணத்தில் நடந்த நடவடிக்கைகளைக் கூறிமுடித்துச் சபையோர்களே! கனகாம்புஜமும், கிருஷ்ணவேணியும் எனக்குரிய மனைவியாயினராகலின் இவ் விருவரையும் மணந்துகொள்வதற்குத் தங்களுடைய உத்தரவுக் கெதிர்பார்க்கிறேனென, சபையோர்களெல்லாம் சந்தோஷித்துக் கரகோஷஞ்செய்து சுகமாக விவாகஞ் செய்துகொண்டு சிரஞ்சீவிகளாய் பெருவாழ்வடையக் கடவீர்களென்று கூறி ஆசீர்வதித்தனர். நல்லசுபவேளையில் மதனன் தன் தாய்தந்தையர் களிக்கப் பாதசேவைசெய்துகொண்டு இருவரையுமணந்து, தன் சிநேகனாகிய முராரிக்கு மந்திரிபட்டந்தந்து, கனகாம்புஜத்தின் பாட்டியாரை வரவழைத்து உபசரித்திருத்தி இரண்டு மனைவியரோடும் மருவிவாழ்ந்திருந்தான் என்று வீரவர்மனுக்கு அந்தகன் அறைந்து அரசே! மதனனும், கனகமும் பட்டபாட்டில் ஆயிரத்திலொருகூறேனும் நீரடைந்ததுண்டா? இல்லையே என, வீரவர்மன் அந்தகனே! மதனனடைந்த இன்பத்தை நானெப்போ தடைவேனென்று வருந்தியிருந்தான்.

## மதனலீலாவதியை வீரவர்மன் காணல்.

ஒருநாள் மாலை நான்குமணி யிருக்கலாம் யோகிகள்மனம்போலும் எங்குபார்த்தாலும் சூரியவெப்பமின்றி மேகங்கள் களங்கமற்றுப்படர்ந்து உள்ளக் கிளர்ச்சிதரும் தென்றற்காற்று வீசிச் சால இனிமைவிளைத்தது அந்தப்புரத்தில் நாதியமரோடிருந்து சொக்கட்டான் விளையாடிக்கொண்டிருந்த மதனலீலாவதி சந்தனமென்னும் பெயருடைய தன் அந்தரங்கத்தோழியை நோக்கி அடி சந்தனம்! இக்குளிர்ந்தவேளையில் நமது நந்தனவனஞ்சென்று உல்லாசமாய் உலாவிவருவோம் வாவென்று சேடியர் பதின்மரோடு அன்னநடையும் பின்னிட நடந்து நந்தனவனஞ் சென்று உல்லாசமாக உலாவி வீரவர்மனிருக்கும் வடபுறம் திரும்பினாள். அங்கு கோண்மீது சுகத்தைத் தாங்கி உட்கார்ந்திருக்கும் மதன சொரூபனைக் கண்டாள். திடுக்கிட்டு நின்று தையலாள் மையலாகித் தழலிற்பட்ட மெழுகெனவுருகித் தத்தளித்து அவள் செவ்வரி படர்ந்து மை தீட்டப்பெற்றுள்ள கருவிழியை அவன்மேற் செலுத்தினாள். அவனுடைய கட்பார்வையும் அவ்வணங்கின் கண்ணோடு இமைப்பொழுதென்னுங் கால அளவு தாவிச் சேர்ந்து ஊசலாடிற்று. மதனலீலாவதி நாணித் தலை குனிந்தாள். அவள் கொங்கைக்குடத்தையும் செங்கைத் தடத்தையும், குழலினொளியையும் மழலைச்சொல்லையுங் கண்டான். திடீரென்று அவளைக் கட்டியணைக்க வெழுந்தான் கரியமேகத்தில் வெண்டிங்கள் தோன்றி மீண்டும் அம்மேகத்தில் மறைவுற்றதுபோல மதனலீலாவதி தன் சேடியரோடு மறைந்தாள்.

தாவிப் பிடிக்கத் தலைப்பட்டெழுந்த வீரவர்மன் தயங்கி தலைமயங்கிக் கீழேசாய்ந்தான். மீண்டுந் தெளிந்தெழுந்திருந்து என் கண்ணுக் கிணையாய்க் களிக்கும் வண்டே! கமலமலரே! கரங்கணிகரே! கலைமதிமுகமே! கலைவளரகமே! கொங்கைக்குடமே! என் செங்கைக் கிடமே! குமுதக்கரமே! அமுதக்கரமே! மின்னலிடையே! அன்னநடையே! என்று அவள் மறைந்ததிசையே தன் பார்வையை நாட்டி வாட்டங்கொண்டிருந்தான்.

மதனலீலாவதி ஹா! பாங்கியரே! நமது நந்தனவனத்தில் தனித்துவந்திருக்கும் அச்சுந்தரபுருஷர் யார்? என்னுடன் பிறந்து என்னுடன் வளர்ந்து பிரியாதிருந்த எனது நெஞ்சே என்னை வஞ்சித்து என்னுடலைவிட்டகன்றது கண்டீர்! அச்சுந்தரபுருஷன் சித்தி

னிப்பெண்களைச் சிறைசெயுஞ் சித்தனே! மங்கையர் மதியை மருட்டும் மாரனே! கன்னிய ருள்ளங் கவருங் காமனே! மெல்லியர்க்கின்பம் விளைக்கும் வேளோ! தையலார்தமக்கு மையலார்மதனே! அல்லது சாமியோ! காமியோ! நேமியான்றனே! எது மறியேன் என் சீர்ப் பாங்கி! அவர்தம் ஊரும் பேரு மிங்குற்றவாரும் - சீரு மறிந்து சீக்கிரம்வாடி என்று அவளையனுப்பிவிட்டு, தேகம் பசலை பூத்து மஞ்சத்திற் படுத்து மாரன் கணையால் வேதனையுற்று வாடி பறித்தெறிந்த மலரேபோல் வதங்கினாள். அவளணிந்திருந்த கைக்காப்புக் கழன்றன. கறுத்தகண்கள் வெளுறுற்றுக் கிடந்தாள்.

மதனலீலாவதி யனுப்பிய தாதி வீரவர்மனிருக்குமிடஞ் சென்று 'ஐயாவே! நீவிர் யார்? பித்தம் பிடித்தவர்போன்று பிதற்றிக்கொண்டிருக்கும் உமது பெயரென்ன? சீரிய செங்கோல்செலுத்துமெம்மரசன் செய்தநற் றவத்தால் ஜெனித்த லீலாவதி உலாவுறும் இந்தநந்தனவனத்தில் திடமுடன்வந்த தும்திருநகர் யாது? தாமதமின்றிச் சடுதியிற் கூறும் என்று தாதி கேட்க, வீரவர்மன் விரகவேதனைக் குள்ளா யிருந்தமையால் தாதிமேற் சீறிவிழுந்து பதிலொன்றும் பகராதிருந்தான்.

அந்தப்புரத்தில் மையலால் நொந்துகொண்டிருக்கும் தையலாகிய மதனலீலாவதிக்கு வரவர வருத்தம் அதிகரித்தது. அவள் மஞ்சத்திற் படுத்து மார்மே லாடையின்றிப் புரள்வதைக் கண்ட தாதிகள் மனம்பொறாமல் தண்ணிய பன்னீரை அரசகுமாரிமேற் றெளிக்க, அவள் ஐயோ! பாங்கியர்காள்! நான் உங்களுக்கென்ன தீமை செய்தேன்! என்மீது ஏன் அக்கினிக்குழம்பைவாரிச்சொரிகின்றீர்? ஆ! காமனே! நீ சோமனையணிந்த சிவபெருமானது நெற்றிக்கண்ணெரிபட்டாயென்று படித்தேன். நீ இப்போதென்னை எப்படியோ அடுத்து வருத்துகிறாயே! தென்றலே! நீயுமா என் தேகத்தில் வந்துதாக்கி வருத்தவேண்டும்? ஓ வெள்ளியதிங்களே! உன் கலை குறையுங்காலம் இன்னும் வரவில்லையோ! சிச்சீ! மாமரத்திருந்து கூவுங்குயிலே! என் நாதரை வருவார்; உன் குரலை யடக்கு என்றின்னணம் பலவாறு லீலாவதி பேசிப்பேசி வருந்தாநின்றாள்.

தாதியர்கள் தங்களாற் செய்யப்படும் சிகிச்சைகளால் அப்பெண்மணியின் நோய் குணப்படாமல் அதிகரிப்பதை யறிந்து மதனலீலாவதியின் தாயிடஞ்சென் றுரைத்தார்கள்.

மதனலீலாவதியின் தாயாகிய ருக்மணி யென்பவள் கேட்டதே விரைந்துவந்து தன் குமாரத்தியிருக்கும் அறைக்குட் சென்று அவள் வாய் பேசிக்கொண்டே வருந்துவதைக் கண்டாள். என்னமோ விபரீதமென்று பயந்து ஸமஸ்தான வைத்தியனையழைத்து வரும்படி ஆளனுப்பினள். ஒரு நொடிப்போதில் வயித்தியனும் வந்துசேர்ந்து மதனலீலாவதியின் இடது கரததைப்பற்றி நாடியைப் பரீக்ஷித்துப்பார்த்து யாதொரு குற்றமும் கையிற் புலப்படாமையால், அவளது செய்கையை நோக்கி "ஓஓ அப்படியா! தெரிந்தேன். அம்மணீ! இக் குழந்தைகையில் பூதநாடியானது வெகு வேகமாய்க் கதித்துத் துடிக்கிறதாதலால் தங்கள் செல்வக்குமாரத்திக்கு யாதோ சிறிது கிரகசேஷ்டை யுண்டாயிருக்கிறது. இதனை மாந்திரீகனைக்கொண்டு பார்த்தால் குணப்படும்" என்றுகூறி வயித்தியன் மெல்ல நகர்ந்தான்.

நெற்றியிற் குங்குமபொட்டிலங்க, அரையின்கீழ் காவிவஸ்திரம் பளபளவென்று அழகொடு மின்ன, தோண்மேல் மற்றொரு அங்கவஸ்திரம் தொங்க, தலையிற் குட்டை தரித்துக் கையிற் பற்றிய குடையோடு லீலாவதி படுத்துப் புரண்டுகொண் டிருக்கும் அறைக்குள் வந்து உட்கார்ந்து தன் மடியில்வைத்திருந்த சிகப்புப் பட்டினுற்றைத்த பையைக் கையி லெடுத்துத் தன் உள்ளங்கையில் விபூதியை வைத்து வலதுகைப்பெருவிரலாலும் ஆள்காட்டி விரலாலும் அதை நிமிட்டிக்கொண்டே கண்களை மூடி வாயை மிணமிணவென்று நெடுநேரம் மிணரிக்கொண்டும், இடையிடையே வாயைத் திறந்து கோட்டுவாய்விட்டும் கடைசியாக அவ்விபூதியில் ஒரு சிட்டிகை யெடுத்து மதனலீலாவதியின் சிர முதலிய விடங்களில் பரவிப் படும்படி ஊதி சின்னேரம் யாதோ யோசிப்பவன்போலத் தலை கவிழ்ந்திருந்து அதன்பின்னர் ருக்மணியை நோக்கி "அம்மணீ! இது கெட்டுது கழுதை. என் மந்திரத்திற்குப் பயப்படாத தேவதைகளே கிடையாது. குழந்தை துர்த்தேவதை யணுகும்போது பயந்திருக்கிறது. இப்போது நம்ம குழந்தையைப் பறறியிருக்கும் தேவதையைச் சாமானியமென்று நினைக்காதீர்கள். அது பிரம்மராக்ஷஸமாகும். ஏதோ நல்லகாலத்திற்காகத்தான் என்னை இங்குக் கொண்டுவந்து விட்டது. தாயே பயப்படவேண்டாம். பதிவிளக்குவைத்துப் பார்த்துச் சொல்லுகிறேன்" என்றான் மாந்திரீகன்.

விளக்குவைத்துப் பார்ப்பதற்கு வேண்டிய சாமக்கிரியைகளெல்லாம் சித்தமாயிற்று. இப்போது மந்திரவாதி ஓர் அகன்ற

மணையில் சப்பளமிட் டுட்கார்ந்து உடுக்கை கட்டிக்கொண்டே தனக் கெதிரிலுள்ள விளக்கை நெடுநேரம் உற்றுப்பார்த்து,

"என் பெற்றவளே தாயாரே உன் பிள்ளைமொழி கேட்டருளே
மாடன் கறுப்பனல்ல மலையாள தெய்வமல்ல
நாடி யுனக்குரைப்பேன் நல்லவளே என்தாயே
இவ்வூர் மலைமேலே என்றுங் குடியிருக்கும் [ண்டு
ஹா! தீயபிர்ம்ம ராக்ஷஸந்தான் செல்வியின்மே லாசைகொ
பற்றியிருக்குதென்று இப்பதிவிளக்குச்சொல்லுறது" என்று மாந்திரீகன் ஏதேதோ வாயில்வந்தபடியெல்லாம் சொல்லிக்கொண்டிருக்கையில்,

மதனலீலாவதி:—ஆ! என் துரையே! அழகெலாந் திரண்ட அநங்கனே! இன்னும் நான் சகித்தல்கூடுமோ? உனது அகன்ற மார்பகத்தே என் கொங்கைத் தழும்பேறக் கட்டி யணைத்து முத்தமிட்டுக் களிப்புறல் எந்தக்காலம்? அந்த நாளன்றோ புண்ணியநாள்! உன் சுந்தரமுக தரிசனம் கிட்டாமல் அடியாள் வாடித்தியங்குவதை நீ அறிவாயானால் என் அரசே! நானிருக்குமிடந்தேடி ஓடிவந்து முத்தந்தந்திருப்பா யல்லவா? யான் தூதனுப்பிய சந்தனம் இன்னும் வந்திலளே! என்று வாய்விட்டு உரத்துப்பேசிய மதனலீலாவதியின் ஒவ்வொரு சொற்களையும் அவள் தாயாகிய ருக்மணி கேட்டு குமாரத்தியின் பக்கத்திற்போ யுட்கார்ந்து மகளே! இன்று சிறிது நேரத்திற்குமுன் நான் உன்னைக்கண்டபோது சவுக்கியமாயிருந்த உனக்கு திடீரென்று இந்நோய் எங்கிருந்து சம்பவித்தது? ஐயோ நீ படும் துக்கத்தைக்கண்டு நான் சகிப்பதெப்படி? செப்படி என் செல்வமே! யென்று வருந்திக்கொண்டிருக்கையில் சந்தனமென்னுந் தாதி விரைந்துவந்து மதனலீலாவதி தலைவிரிகோலமாகக் கட்டிலின்மேற் படுத்து மேலாடை விலகப் புரள்வதையும், அதள் தாயையும் மாந்திரீகனையுங்கண்டு இராஜகுமாரிக்கு மோகசப்பித்தேறிய தென்று நிரகித்து கட்டிலருகிற் சென்று ருக்மணியிடம் பணிவாய் நின்றாள்.

ருக்மணி:—அடி சந்தனம்! நமது குழந்தை இப்படி விகாரங் கொண்டு தலைவிரிகோலமாய்ப் புரள்வானேன்?

சந்தனம்:—அம்மணீ! நமது நந்தனவனத்தில், கண்டமாதர்களெல்லாம் மயங்கி மையல்கொள்ளத்தக்க மாரன் ஒருவன் வந்திருக்கின்றான். அவன் கல்வியிற் கம்பன். வில்வித்தையில் விஜயன்.

வாய்மையில் அரிச்சந்த்ரன். வாக்சாதுர்யத்தில் பிரஹஸ்பதியை நிகர்த்தவன். கெம்பீரமான பார்வையையுடையவன். கீர்த்திபெற்ற சுகந்தபுரியை அரசாளும் சுசீலன் என்னும் வேந்தனுடைய தவத்துதித்த செல்வப்புதல்வனாகிய வீரவர்மனென்னும்பெயருடையவன். இத்தகைய இலக்கணங்களுடைய அரசகுமாரனை மதனலீலாவதி கண்டு மையல்கொண்டதனால் நேர்ந்த துன்பமாக்கும் இது. இனி ஒருக்ஷணநேரமும் தாமதியாமல் நமது அரசர் பெருமானிடம் அறிவித்து இருவருக்கும் மணமுடிப்பித்தாலன்றி இம் மந்திர தந்திரத்தால் இந்நோய் குணப்படுவதன்றென்று கூறி முடித்தாள். அரசபத்தினி சந்தோஷித்து அவ்விடம்விட்டெழுந்துபோனாள். இவற்றையெல்லாம் கேட்டுக்கொண்டிருந்த மாந்திரீக பூசாரி சொல்லாமல் மெல்ல நழுவினான். பின்னர் சந்தனம் மதனலீலாவதிக்குத் தான் போய் வீரவர்மனுடைய பூர்வோத்தரங்களை விசாரித்த விஷயங்களை யெடுத்துக் கூறியதன்பின்பு அவள் ஒருவாறு தன துள்ளந்தேறியிருந்தாள்.

ருக்மணி தனது நாயகனிடம் நடந்தவிஷயங்களைக் கூற, அவன்நந்தனவனத்திலுள்ள வீரவர்மனை யழைத்துவர மந்திரியை யனுப்பினான். அவன் சென்று வீரவர்மனைக் கண்டு ஐயாவே! எங்கள் வேந்தன் தங்களை யழைந்துவர உத்தரவாயிற்றென்று கூற, வீரவர்மன் "எம்மை யழைத்தேகும் அந்தஸ்தின்படிவந் தழைத்தாலன்றி யாம் வருவது கூடாது" என்று மறுத்தான். உடனே அழகிய பல்லக்கொன்றுகொண்டுவந்து அதிலேற்றிச் சென்றார்கள். புஷ்பபுரிக்கு அரசனாகிய தினகரனென்போன் வீரவர்மனுடைய ஒளிவீசும் தேகவனப்பைக் கண்டு வியந்து, தன் மகளுக்கேற்ற மணாளனென்று மகிழ்ந்தான். மந்திரிகள் தினகரனை நோக்கி அரசரேறே! இம் மன்னன் மகன் முன்னொருதரம் இங்கு வந்து தங்கள் குமாரத்தியைவிவாகம் செய்துபோக வந்தேனென்று சொன்னபோது உங்களால் நமது நகர்ப்புறம் விட்டுவர உத்தரவாயிற்று என்று ஞாபகப்படுத்த, அரசன் ஆனால் அதைப்பற்றிப் பின்னர் யோசிப்போம். இவ் வரசகுமாரனை நம தரண்மனையிலிருத்தி யாதொரு குறையுமின்றி போஷித்துவாருங்களென்று உத்தரவுசெய்தான் அவ்வாறே நடந்தேறிவந்தது.

இதற்குமுன் மதனலீலாவதியை விவாகம் செய்துகொள்ளக் கேட்டும் கொடேனென்று சொன்னதால் வெட்கிச்சென்று தினகரன்மேல் நீங்காதகோபங்கொண்டிருக்கும் அரசர்கள் பலராதலால்

அவர்களுக்கெல்லாம் மதனலீலாவதியை வீரவர்மனுக்குக் கொடுக்க சர்வசித்தமாயிருக்கும் விஷயம் எட்டியது. தங்கள் பகைமையை முடிப்பதற்கு இதுவே தக்க சமயமென்று பல வேற்றரசர்கள் சேனைகளோடு யுத்தகோலங்கொண்டு புஷ்பபுரியில் வந்து சேர்ந்து நாற்புறமும் சுற்றி வளைந்துகொண்டு யுத்தபேரிகை முழக்கினர். திமுரென்று பேரிகை சத்தத்தைக் கேட்ட தினகரன் பயந்து மந்திரிகளிடம் யோசித்தபோது அவர்கள் அரசே! யுத்தகளத்தில் புறமுதுகிடாத அரசர்கள் பதின்மர் ஏககாலத்தில் படையெடுத்து வந்திருக்கின்றாராதலால் சிங்க ஏறையொத்த அவர்களிடம் மசகத்திலும் சிறிய நாம் போர்புரிந்து ஜயிப்பது கூடாது. இப்போது வந்திருப்போரெல்லாம் முன்னே நமது மதனலீலாவதியைக் கேட்டுக் கொடாமையால் பகைகொண்டு ஒவ்வொருவராய் வந்து நம்முடன் யுத்தஞ் செய்து ஜயிப்பது கூடாதென்று பதின்மரரசர்கள் ஒன்றுசேர்ந்து வந்திருக்கிறார்களாதலால் நம்முடைய சமாதானத்திற்கு அவர்கள் ஒத்துவர மாட்டார்கள். ஆகவே, நமது சேனைகளை அவர்களெதிரிற் கொண்டுபோய் நிறுத்தி வீணே கொல்விப்பதைப் பார்க்கிலும் நாமெல்லாம் நாட்டைவிட்டு ஓடிப்போய்விடுதலே நலமென்று கூறினர். இவற்றைக்கேட்ட அரசன் துக்காக்கிராந்தனாய் மஞ்சத்திற் கவிழ்ந்துபடுத்துக் கதறினான். எதிரிகள் புஷ்பபுரியின் கோட்டை வாயிலுட்புகுந்து அதைப் பீரங்கிவெடியாற் கொளுத்தி பிடிக்கலானார்கள். செவிகள் செவிடுபட்டன எங்குங் கரும்புகை சூழ்ந்தது. இது இங்ஙனமிருக்க,

பஞ்சவர்ணக்கிளி வீரவர்மனைநோக்கி அரசர்தலைவ! நீ மதனலீலாவதியை யடையவேண்டுமானால் நமக்குக் கிடைத்த பட்டாத்தைக் கையிற்பிடித்து இக்காட்டை முற்றுகையிட்டுக்கோட்டையை பிடித்துக்கொண்டிருக்கும் படையிற்புகுந்து வெள்ளரிக்காயென வீசி யெறிந்து ஒரு நொடிக்குள் இங்கு வந்து சேரவேண்டும். ஆனால் அப்படைகட்கு அரசாயுள்ளோரை மட்டும் கொல்லற்கவென்று கூற, சமயம் எப்போது வாய்க்குமென்றிருந்த வீரவர்மன் யாதொருடையும் தரித்துக்கொள்ளாமல் அரையிற் சல்லடம் கட்டி கையிற் பட்டையம் பிடித்து விரைந்துசென்று யுத்தகளத்தில் நின்று அரசர்காள்! வீணே உமதுயிரைத் துறக்கவேண்டின் எனதெதிர் நின்று யுத்தம் செய்யுங்கள்; இல்லையானால் இப்போதே ஓடிப் பிழையுங்க ளென்றான்.

அதைச்சொற்கேட்ட அரசர்கட்கு முகஞ் சிவப்பேறிக் கோபமதிகரித்து நகைசெய்து அட உன்னைத் தினகரனுடைய ஏவலாளனென் றெண்ணியே சும்மாவிருந்தோம் எண்ணிலாத கோடி யுத்தவீரர் கள்முன் நிற்கும் அஞ்சாமற்பேசும் உன் னெடுந்தோடு கைவாளை யும் இதோ துணிக்கின்றோ மென்று எண்ணிலகோடி வீரர்களும் ஏககாலத்தில் பாணப்பிரயோகஞ் செய்தார்கள்.

வீரவர்மனோ தன்னை நெருங்குமின்றி அப்பெருங் கூட்ட த்தினிடையே ஓர் மதகஜம்போல நின்று நகைத்தவன் யானைக் கூட்டத்தி னிடையே ஒரு சிம்மம் கர்ச்சித்தெழுந்து பாய்வதுபோற் பாய்ந்து வாளினால் ரவுத்திராகாரமாக இடசாரி வலசாரியாகச் சுழன்று சுழ ன்று வெள்ளரிக்காய் வீசுவதுபோல வீசி வெற்றிகொண் டிருந் தான். வீரர்கள் கையிற் பிடித்திருந்த ஆயுதங்களோடு அசை வின்றி நின்று வீரவர்மன் செய்யும் யுத்தத்திறத்தைக் கண்டு விய ந்து பார்த்தனர். இதென்ன புதுமை! இவனொரு சாமானியபுருஷனா யிருப்பானாயின் ஒரு நொடிப்பொழுதில் எண்ணிறந்த ஜனங்களைக் கொல்ல முடியுமா அம்மாடு! இனி இவனை வணங்காது எதிர்ப் போமாயின் நாம் வீடுபோய்ச் சேர்ந்து பெண்பிள்ளைகள் முகத் தில் விழிக்கப்போவதில்லை யென்பது நிச்சயம் என்று அரசர்க ளெல்லாம் ஒன்றுகூடிப் பேசிக்கொண்டனர். இதற்குள் யுத்தகள த்தில் நின்றிருந்த வீரர்களிற் சிலர் கையிற் பிடித்திருந்த ஆயுதங் களைக் கீழே விட்டெறிந்து கால் நடையாகவும், குதிரைமேலிருந் தும், நாலாதிசையிலும் ஓடினார்கள். ஓடுபவர்களைவிட்டு எதிர் நின்றவனை எதிர்த்து வெட்டுகிறான். வீரவர்மன்மேல் வீசும் பாணங் கள் அவன்மேற் படுகின்றனவெனிலும் அவை ஊறுசெய்யாது சிதறு ண்டு விழுகின்றன. ஆகவே இப்போது அவனிடத்தில் எல்லோர்க் கும் ஒருவித பீதியுண்டாயிற்று. வீரவர்மன் முகத்தில் வீரலட்சுமி யானவள் தாண்டவமாடுகிறாள். அவன் கொஞ்சநேரமாவது வெ ட்டுவதினின்று ஓய்ந்து நிற்கவில்லை. எந்த இடத்திற் பார்த்தாலும் வீரவர்மனிருந்து வெட்டுவதாகக் காணப்பட்டது. இது இப்படி நடந்துகொண் டிருக்கையில், மதனலீலாவதியின் தந்தையாகிய தினகரனும், அவனது பிரதானமந்திரியும், பிரபுக்களுமாகச் சேர் ந்து தன்மேற் படையெடுத்து வந்திருக்கும் அரசர்களைச் சமாதா னஞ் செய்துகொள்வதற்காக யுத்தகளத்தை நாடிச் சென்றார்கள். இப்போதவர்கள் யுத்தகளத்தைக் குறுகுஞ்சமயமாயிற்று.

அங்கே வீரவர்மனுடைய ஆற்றலுக்கு வீரர்களாவோர் அஞ்சி அல்லோகல்லப்பட்டு ஓடுவதை தினகரன் முதலினோர் கண்டு இவர்கள் இப்படி ஓடுவானேனென்று சிந்தித்துக்கொண்டே யுத்தகளத்தை நணுகினார்கள். தினகரன் வரவை யறிந்த வேந்தர்கள் அவனிடம் ஓடோடியும் வந்து குதிரையை விட்டிறங்கி தினகரவரசனுடைய இரண்டு கரங்களையும் பற்றிக்கொண்டு "தினகர அரசே! தங்களுடைய ஆற்றலறியாது வந்தோம். நாங்கள் பதின்மர் அரசர்கள் உங்களை ஒரேகாலத்தில் வந்தெதிர்த்தும் நீர் சிறிதும் எங்களை மதியாமல் உங்களிடம் உத்தியோகத்திலிருக்கும் ஒரு வீரனை யனுப்பி எங்களுடைய மனோகர்வத்தை யொழித்தீர். சேனைகளில் ஓடிப்போனவரொழிய மற்றவர்களை யெல்லாம் வெட்டிச் சாய்த்தான். இனி பதின்மரரசர்களாகிய நாங்கள்தான் பாக்கியாக நின்றோம். இவ்வளவில் சமாதானமாகி எங்களுயிரைக் காப்பாற்ற வேண்டும் இறையே யென்று வணக்கமாகப் பிரார்த்தித்து நின்றார்கள்.

அரசர்கள் சொன்னதைக் கேட்ட தினகரன் பேராச்சரியப்பட்டு நாம் சமாதானம் ஆக வந்தவிடத்தில் நம்முடைய பகைவர்கள் நம்மைப் பணியும் வினோதமென்னே! நாம் எந்த வீரனையும் யுத்தத்திற் கனுப்பவில்லையே. கடவுளே நமக்காக வீரனாகத் தோன்றி வந்தனரோ! எல்லாம் போகப் போகத் தெரியும் என்று தன்னுள் நினைத்து அவர்களிடம் சமாதானத்திற்கு உடன்பட்டு தன் மந்திரியை யுத்தகளத்தில் வந்திருக்கும் வீரன் யாவனென்று தெரிந்துவரும்படி யனுப்பினான். அவனும் அவ்வாறே சென்றான்.

முன்னே வீரவர்மனைக்கண்டு மதனலீலாவதி தன்மேல் மோகங்கொண்டிருப்பதாகவும் அவளைக் கலியாணஞ்செய்து சிம்மாதனத்திருந்து ராஜ்யபாரஞ் செய்கையில் வீரவர்மனுக்கு மந்திரி உத்தியோகம் தருவதாகவும்சொன்ன மந்திரிமகனாகிய விலோசனன், வீரவர்மன் தனியே யுத்தத்திற்குச் சென்றிருப்பதால் இனித் திரும்பானென் றெண்ணினவனாய் பெண்வேடம் பூண்டு அந்தப்புரஞ் சென்று மதனலீலாவதியைக் கண்டு "அம்மணி! யுத்தத்திற்குச் சென்ற வீரவர்மன் எதிரிகளால் கொல்லப்பட்டு இறக்குந்தறுவாயிலிருக்கிறார். உன்மீது காதல்கொண்டு தன் அரசசெல்வந் துறந்து அன்னாகாரமின்றி இவ்வூருக்குவந்து உன்னால் இச்சிக்கப்பட்டபின் நேர்ந்த யுத்தத்தில் மடியநேரிட்டதால் அவ்வான்மா உடலைவிட்டுப் பிரியாமல் ஊசலாடிக்கொண்டிருக்கின்றது. வீரவர்மனை உன்னை

யழைத்துவரும்படி வாய்திறந்து சொன்னபின், அங்கு வந்திருக்
கும் உன்தந்தையும் மதிமந்திரியும் உன்னை அழைத்துவரும்படி
என்னையனுப்பினர். உன்னுடைய கையால் அவர் வாயில் ஒருதுளி
பால்விடுவையே யானால் அப்போதுதான் அவ்வுயிர் நீங்கும். ஆக
வே உன் தாயிடம் சீக்கிரமாக விடைபெற்று வரவேண்டு மம்மா
வென்றான். மதனலீலாவதி ஓவென்று கதறியழுதாள். தன்கையாற்
றலையில் மோதியடித்துக்கொண்டாள் ஒருதரம் இரண்டுதரம்
மூன்றுதரமும் மூர்ச்சித்துக் கீழே விழுந்தாள். "என் மதனசொ
ரூபா! மன்னவனே! உன்னைக் காதலித்திருந்த என்னைக் கைசோர
விட்டுச் செல்வையாயின் இனி நான் இப் பூமிக்குப் பாரமாக என்
உடலைச் சுமந்திருந்து மற்றொரு மன்னன்றோள் சேருவேனோ?
எனக்காக யுத்தகளத்திற் சென்று எண்ணிறந்த வீரர்களைக் கொ
ன்று இறக்குந்தறுவாயிலுள்ள உன்னோடு இதோ உடன்கட்டை
யேறவருகிறேன்" என்று தாயாரிடமும் சங்கதியைத் தெரிவியா
மல் பெண்வேடம் பூண்டுவந்த மந்திரிகுமாரனுடன் கூந்தலவிழ்
ந்து கீழே புரள, நல்லாடையின்றி நலங்குலைந்து சென்று வீதியில்
விட்டிருந்த கோச்சுவண்டியில் இருவருமேறிச் சென்றார்கள்.

கோச்சுவண்டி நெடுநேரம் வீதிவழியே சென்று பின்னர் சிறிய
காட்டுமார்க்கமாகத் திரும்பியது. மதனலீலாவதி தன்னெதிரே
உட்கார்ந்திருக்கும் பெண்ணுருவை நோக்கி "அம்மா! அந்த யுத்
தகளம் இன்னும் நெடுந்தூரமிருக்கிறதோ" வென, மந்திரிமகன்,
இன்னும் இரண்டுமெயில் தூரமிருக்கும்; கால்மணிநேரத்திற் போ
ய்ச்சேரலாம் என்று கூறி, வேறொருபேச்சையெடுத்துப் பேசினா
னெனினும், அவள்மனம் வீரவர்மனிடம் சென்றிருந்ததால் அச்
சொற்கள்காதிலேறவில்லை. உள்ளிருந்த மந்திரிமகன், நிறுத்து நிறு
த்து இங்குதான்நிறுத்து வண்டியையென, வண்டி நின்றது. மதன
லீலாவதி அழுதகண்ணும் சிந்தியமூக்குமாக முந்தானையால் முகத்
தைத் துடைத்துக்கொண்டே வண்டியைவிட்டிறங்கினாள். அதன்
பின் மந்திரிமகனு மிறங்கினான். வண்டி வடகிழக்காக ஓடியது.

மந்திரிகுமாரன் முன்னும், மதனலீலாவதி பின்னுமாக நடந்த
னர். நாற்புறமும் காடு சூழ்ந்து நடுவே உயர்ந்த மலையொன்றிருந்
தது. மதனலீலாவதி யுத்தகளம் இக் காடுசூழ்ந்த மலைதான்போலு
மென்றெண்ணி நடந்தாள். மந்திரிமகன் மலையருகிற்சென்று நின்று
"பெண்கள் நாயகமே! தேடற்கரிய தெள்ளமுதே! நெடுநாள் என்

நெஞ்சில் தித்தித்திருந்த செழுந்தேனே! மானே! இதோ இம்மலைக்
குகை வழியாகச் செல். உன் ஆசையை வெல்" என்று காமப் பித்
தேறிய அவன் பலவாறு பிதற்றினான். வடிவழகியாகிய மதனலீலா
வதி இடியேறுண்ட மரம்போல் பூமியில் விழுந்து அட பாவி! உன்
மோச வலையிற் சிக்கினேனே! என்று வாய்விட்டலறி யழுதாள். மந்
திரிமகன் மலைக்குகையிற் செல்லும்படி எவ்வளவு சொல்லியும்
அவள் கேளாமல் புழுதியிற் புரண்டுகொண் டிருந்தமையால் அவன்
தான் கட்டியிருந்த புடவையைக் களைந்தெறிந்துவிட்டு ஆணுரு
வோடு அவள் முன் நின்று "பெண்ணே! என்னைப்பார்: என் அழ
கைப்பார். வீரவர்மனைவிட நான் அழகிற் குறைந்தவனன்று"
என்று கூற, அவள் பதில்பேசாமலும், பாராமலும் கவிழ்ந்து படுத்
துத் தானிச்சித்த வீரவர்மனை நெஞ்சில் நினைத்துக் கடவுளைப்
பிரார்த்தித்துத் தன்னையும் உலகத்தையும் மறந்தாள். மந்திரிமகன்
அங்கவஸ்திரத்தை விரித்து கட்டி மதனலீலாவதியின் விலாப்பக்க
மாகத் தன்னிரண்டு கைகளையும் கொடுத்துத் தூக்கினான். அந்த
க்ஷணத்திலேயே,

"ஹா மூர்க்கா! பிறர்மனை விழையும் பேதாய்!" என்னும் ஓர்
சத்தமுண்டாயிற்று. அது எங்குநின்று முண்டாயிற்றென்று பார்
த்தபோது, தோளிற் கிளியும், கையிற் கத்தியும் பிடித்து வீரவர்
மன் நின்றிருந்தான். மந்திரிகுமாரன் தலை வெட்டுண்டு இரத்தமொ
ழுகக் கீழே வீழ்ந்துகிடந்தது. வீரவர்மன் மதனலீலாவதியின்
பக்கத்திற்போ யுட்கார்ந்து "லீலாவதி! என் கண்மணி! இதோ
உன்கொழுநன், வீரவர்மன், வந்தேன். நின் பகைவனைக் கொன்
றேன். உன் பொன்னனைய மேனியிற் புழுதி படிபவுமாயிற்றே"
யென்று தன் கையால் அவள் மேனியைத் துடைத்தபோது அலறி
யெழுந்து, ஆ என் துரையே! யென்று வீரவர்மனைச் சேர்த்துத்
தழுவிக்கொண்டு என்னுடைய நிர்ப்பாக்கியஸ்திதியை யெப்படி யறி
ந்து இங்குவந்தாயென்று மதனலீலாவதி கேட்க, வீரவர்மன் கிளி
யாலறிந்ததாகக் கூறி தன் பூர்வோத்தர மெல்லாம் புகன்று மதன
லீலாவதியுடன் அரண்மனைசென்று, தன் தாய்தந்தையர்க்குக் கடி
தமெழுதி வருவித்து சகலாடம்பரத்துடன் மணஞ்செய்து, தன்
மாமனார் அரசாட்சி பட்டத்தை வீரவர்மன் தரித்து மதனுமிரதியு
மென இருவரும் கூடிக் களித்துப் புத்திரபாக்கியம் பெற்றுச்
சுகமே வாழ்ந்திருந்தார்கள் என்று நாம் இக்கதையை முடிக்கின்
றோம்.—சுபம்.